அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1917 ; iv. செ.மூ.ப. 62 ; v. 13×9 செ.மீ. ; vi. 0—1—6 ; vii. வைணவ சமய நூல்களாகிய திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப் பாவை, வாரணமாயிரம், கண்ணிநுண் சிறுத்தாம்பு, சாத்து முறை, தனியன்கள் போன்றவை இதில் அடங்கியுள்ளன. இது கையடக்கமாக அமைந்த ஒரு திருமொழித் திரட்டு. viii. 659/1917/II.

Q22:417x1,11

1365. i. திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி முதலியன : இரண்டாம் பதிப்பு ; ii. த. ராமசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; ஸ்ரீலட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1918 ; iv. செ.மூ.எ. 73+1 ; v. 18×8 செ.மீ. ; vi. 0—2—0 ; vii....... ; viii. 386/1919/I.

Q22 :417x1,11

1366. i. திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை முதலியன : முதற் பதிப்பு ; ii. பி. ஜி. பால் அண்டு கம்பெனி, சென்னை ; எ. டீ. பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1918 ; iv. செ.மூ.ப. 62 ; v. 12×9 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. திருமால் துதியான பக்திப்பாடல்களைக் கொண்ட நூல், பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு, தொண்டரடிப்பொடியாழ் வார் பாடிய திருப்பள்ளியெழுச்சி, ஆண்டாளின் திருப்பாவை, 'வாரணமாயிரம்' எனத் தொடங்கும் திருப்பாசுரம், மதுரகவி யாழ்வார் பாடிய கண்ணிநுண் சிறுத்தாம்பு என்பவை இதன்கண் உள. சில தனியன்களும் சாற்றுமுறைப் பாசுரங் களும் உடன் தரப்பட்டுள்ளன. viii. 1131/1919/I.

Q22:417x1,11

i. தோத்திரக்கொத்து (தொ. எ. 1363 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீ சரஸ்வதி விலாச புத்தகசாலை ; ஷண்முக ஆனந்த அச்சுக்கூடம், போளூர் ; iii. பிப்ரவரி, 1919 ; iv. செ.மூ.ப. 33 ; v. 16×11 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. வைணவ மதத்தின் கொள்கைகளை விளக்கும் திருப்பள்ளி யெழுச்சி, திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத் தாம்பு, அமலனாதிபிரான் ஆகிய ஐந்து தோத்திர மாலைகளைக் கொண்டது, இந்நூலாகும். viii., 769/1919/I.

Q22 :417x1

1367 i. நித்யாநு ஸந்தாநம் : முதற் பதிப்பு ; ii. சே. கிருஷ்ண மாசாரி, சென்னை ; கணேச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1917 ; iv. செ.மூ.ப. 156 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—9—0 ; vii. இந்நூலில், திருப்பல்லாண்டு, திருப் பள்ளியெழுச்சி, திருப்பாவை முதலியவைகளுடன் இறைவழி

பாட்டுக்கான இன்றியமையாத முறைகள் விளக்கப்பட்டுள்ளன. தினமும் ஓதுதற்குரிய பாசுரங்களின் தொகுப்பு, உபதேச ரத்ந மாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி சப்த காதை முதலியனவும் இதில் உள்ளன. viii. 651/1917/II.

Q22:417x,1

1368. i. பாசுரம் ஆயிரம்: முதற் பதிப்பு; ii. டீ. எஸ். ராமானுஜ ஐயங்கார், திருவொற்றியூர்; ஸ்ரீராமானுஜம் அச்சுக்கூடம், சென்னை; iii, டிசம்பர், 1920; iv. செ.மூ.ப. 142; v. 22×14 செ.மீ.; vi. 0—14—0; vii. வைணவ மதத்தைச் சார்ந்த பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகியவர்கள் பாடிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தின் பாசுரம் ஆயிரங்கள் இந்நூலில் உள்ளன. ஆண்டாள் சரித்திரச் சுருக்கமும் இதன்கண் உண்டு. viii. 1019/1920/IV.

Q22:417x,1

**மதுரகவியாழ்வார்**

i. கண்ணிநுண் சிறுத்தாம்பு (தொ. எ. 1363 பார்க்க); ii. ஸ்ரீசரஸ்வதி விலாச புத்தகசாலை, வேலூர்; ஷண்முக ஆனந்த அச்சுக்கூடம், சென்னை; iii. 1919; iv. செ.மூ.எ. 2+10+1; v....; vi....; vii. சடகோபர் துதியாக உள்ளது. தாம்குருவாக வரித்த சடகோபரின் தெய்வத்தன்மை பொருந்திய ஒளியை வியந்துபாடுகின்றார், அவருடைய சீடராகிய மதுரகவியாழ்வார். viii 769/1919/I.

Q22:417x1,192

## 894.8111 பிற்காலக் காவியம்

**அரங்கநாதக் கவிராயர், தே. ர., தளவாய்ப்பேட்டை, பவாநி**

1369. i. மகாபாரதம்—அருச்சுனன் தீர்த்தயாத்திரை: முதற் பதிப்பு: ii. தே. ர. அரங்கநாதக்கவிராயர்; கணேச அச்சுக்கூடம் சென்னை; iii. எப்ரல், 1920; iv. செ. மூ. எ. 1452; v. 22×14 செ. மீ.; vi. 2–0–0; vii. மகாபாரதத்தில் வரும் அருச்சுனன் தீர்த்தயாத்திரை சென்ற கதை இதில் கூறப்பட்டுள்ளது. சேலம் கல்லூரித் தமிழாசிரியர் ரா. திம்மப்ப ஐயரவர்கள், ஆசிரியரையும், நூலையும் குறித்து ஆய்வுரை ஒன்று எழுதியுள்ளார். தளவாய்ப்பேட்டை, ந. சி. நஞ்சப்ப செட்டியார், இலக்குமிநாராயண செட்டியார் ஆகியோர் தந்த சிறப்புபாயிரமும், பவானி மகாவித்வான் பாலபாரதி முத்துச்சாமி ஐயர், மகா மகோபாத்யாய உ. வே. சாமிநாத ஐயர் முதலியோர் செய்த சாத்துக்கவிகளும் இதன்கண் அடங்கியுள்ளன. viii. 212/1920/II.

O31,1



**ஆறுமுக சேர்வை, வி., செம்பூர் வித்வான்**

1370. i. குசேலோபாக்யான வசனம் : முதற் பதிப்பு ; ii. என். முனிசாமி முதலியார், சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1919 ; iv. உ. ப. 264 ; v. 19×13 செ. மீ. ; vi. 1-0-0 ; vii. திருமால் அடியாரான குசேலரின் வாழ்க்கை வரலாறு உரைநடையில் விளக்கப்பட்டுள்ளது. ஒரு சில படங்கள் இடையிடையே உண்டு. தமிழில் வல்லூர் தேவராஜ பிள்ளை என்பார் 773 செய்யுட்களால் பாடிய நூலைத்தழுவி இந்த உரைநடை நூல் ஆக்கப்பெற்றது. இச்சரிதம் வந்த வரலாற்றினை 'நூல் வரலாறு' என்னும் பகுதி நன்கு விளக்குகிறது. viii. 304/1919/II.

O31,1

**இராமஸ்வாமி ஐயர், பி. எஸ்., கடத்தூர்**

1371. i. மநோஹரராம சரிதம் : இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. பி. எஸ். இராமஸ்வாமி ஐயர், கடத்தூர் ; வித்யாபானு அச்சுயந்திரசாலை, கோயம்புத்தூர் ; iii. 1915 ; iv. உ. ப. 305 ; v. 22×14 செ. மீ. ; vi. 1-8-0 ; vii. இராமாயணத்தின் பிரதாப காண்டத்தை (இரண்டாம் பாகம்) இதில் காணலாம். சிற்சில பகுதிகளுக்கு ஆங்காங்கே விளக்கங்களும் தரப்பட்டுள்ளன. இராமன் சமுத்திரக்கரையடைதல் முதல், முடிசூட்டிக்கொள்ளுதல் வரையில் உள்ள சரித்திரம் அமைந்துள்ளது ; viii. 152/1916/I.

O31,1

1372. i. மநோஹரராம சரிதம் : மூன்றாம் பாகம் : முதற் பதிப்பு ; iii. டிசம்பர், 1916 ; iv. உ. ப. (307-438) 132 ; v. 22×14 செ. மீ. ; vi. 1-8-0 ; vii. இராமாயணத்தில் உள்ள ராஜ்ய காண்டத்தில் வரும் பகுதியை ஆசிரியர் உரைநடையில், நல்ல முறையில், இந்த நூலின் மூலமாக அளித்துள்ளார். வால்மீகி ராமாயணத்தில், ஆங்காங்கு விளக்கிச் சொல்லப்படாமல், கூடமாக இருக்கும் பாகங்களையும், ஆங்காங்கே தோன்றும் ஐயங்களையும் விளக்கி, பக்தி, ஞானம், சோகம், வீரம், கருணை, நகைச்சுவை முதலிய சுவைகளை அமைத்து, எல்லோரும் எளிதில் வாசித்து மகிழும் வண்ணம் எழுதப் பெற்றது. viii. 961/1916/IV.

O31,1

**கச்சியப்ப சிவாசாரியர்**

1373. i. கந்தபுராண சூரசம்மாரச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. ப. கணேச உபமன்யு தேசிகர், பாறை நகர் ; விக்டோரியா பிரஸ், பாலக்காடு ; iii. 1916 ; iv. செ. மூ. உ. ப. 1031; v. 21×14 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. கச்சியப்ப சிவாசாரிய

சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய கந்தபுராணத்தினின்று தாரகன், பானுகோபன், சிங்கமுகன், சூரபன்மன், இவ்வசுரர்களின் யுத்தங்களில், ஆங்காங்கு சில செய்யுட்களும், தெய்வயானையம்மை திருமணப்படலம், விண்குடியேற்றுபடலம் முதலியவற்றில் சில செய்யுட்களும், இவைகளுக்குப் பொழிப்புரையும், கதையின் தொடபுர்க்காக இடையிடையே வசனங்களுஞ் சேர்த்து எழுதப்பட்டுள்ளது. இத் தொகுப்பினை ஆக்கி உரை வகுத்தவர், பாறைநகர் என்று வழங்கும் பிரம்மபுரியில் வாழ்ந்த ப. கணேச உபமன்ய தேசிகராவர். viii. 667/1916/II.

O31,1

**கம்பர்**

1374. i. கம்பராமாயணம் — பாலகாண்டம் — சுருக்கம் : புதிய பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை , காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1919 ; iv. செ. மூ. உ. ப. 136 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. கம்பராமாயணத்தின் பாலகாண்டம் இதில் தரப்பட்டுள்ளது. பள்ளி மாணவர்களுக்கேற்றது. கதைப்போக்கு விளங்குமாறு உரை நடை இட்டு வெளியிடப்பட்டது. கம்பருடைய கவி நயங்களை உணர்ந்து கம்பராமாயணத்தை முற்றும் கற்றுணர அவாவும் வகையில் இச்சுருக்கம் வெளியிடப்பட்டுள்ளது. பாட்டுக்களில் கடின சந்திகளைப் பிரித்தும், அனுபந்தமாகக் குறிப்புரை சேர்த்தும் வெளியிடப்பெற்றது. தி. த. கனகசுந்தரம் பிள்ளையவர்களும், சுன்னுகம் குமாரசாமிப் பிள்ளையவர்களும் ஆராய்ந்து வெளியிட்ட, கம்பராமாயணப் பாலகாண்டம் இதற்குப் பயன் படுத்தப்பட்டுள்ளது. viii. 971/1919/II.

O31,1F

1375. i. கம்பராமாயணம்—பாலகாண்டம்—சுருக்கம் : திருத்திய இரண்டாம் பதிப்பு ; iii. ஏப்ரல், 1920 ; iv. செ. மூ. உ. ப. 134 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. பள்ளி மாணவர்களுக்கேற்ற வகையில் சுருக்கித் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளது. உரைக் குறிப்புக்களும் உடன் தரப்பட்டுள்ளன. viii. 43/1920/III.

O31,1F

1376. i. கம்பராமாயணம்—வசந்தன் உயிர்வருபடலம் : முதற் பதிப்பு ; ii. அ. அரங்கசாமி மூப்பனர், கும்பகோணம் ; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1917 ; iv. செ. மூ. எ. 27 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–2–6 ; vii. கம்பராமாயணத்தின் ஒரு பகுதியாகிய வசந்தன் உயிர் வருபடலம் இதில் விவரிக்கப்பட்டுள்ளது. இப்படலம் ஒரு சில சுவடிகளில் மட்டும், யுத்தகாண்டப் பகுதியில் காணப்படுகின்றது. viii. 176/1918/I.

O31,1F

ரூ டு மூகப்புலவர்

1377. i. சையிதத்துப் படைப்போர் : முதற் பதிப்பு; ii. ஷேக்மீரான் மொய்தீன், சென்னை ; முகம்மதியாப் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1917 ; iv. செ. மூ. எ. 519 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. முகமதிய சமயவாதியான சையத் அலியினைப் பற்றிய கதை இதில் கூறப்பட்டுள்ளது. காவியப்பாங்கில் விருத்தப்பாடல்களால் அமைந்தது இந்நூல். viii. 37/1918/I.

O31,1

குப்புசாமி ஐயர், தி.

1378. i. கம்பராமாயண சங்க்ரகம் : முதற் பதிப்பு; ii. தி. குப்பு சாமி ஐயர், ராஜமன்னார்குடி, சண்பகலெக்ஷ்மீ விலாச அச்சுக் கூடம், மன்னார்குடி ; iii. பிப்ரவரி, 1919 ; iv. செ. மூ. உ. எ. 121 ; v. 23×15 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. கம்ப ராமாயண நிகழ்ச்சிகளை மிகவும் சுருக்கமாகச் செய்யுள் வடி வத்தில் ஆசிரியர் அளித்துள்ளார். வெவ்வேறு வகையான சந்தங்களில் அமைந்த விருத்தங்களை, ஆசிரியர், இந்நூலில் மேற்கொண்டுள்ளார். viii. 1085/1919/I.

O31,1

சாமிநாத உடையார்

1379. i. ராமாயண தோரா : முதற் பதிபபு ; ii. சாமிநாத உடையார், நெசல், ஆரணி ; அமெரிக்கன் ஆற்காடு மிஷன் அச்சுக்கூடம், ஆரணி ; iii. ஏப்ரல், 1919 ; iv. செ. மூ. எ. 435 ; v. 21×14 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. இராமாயணக் கதை இந்நூலில் பாடல் வடிவில் விளக்கப்பட்டுள்ளது. ஒவ் வொரு செய்யுளின் இறுதியிலும் "ராமா" என்ற வார்த்தை இடம் பெறுகிறது. "தோரா" என்பது, இசைப்பாட்டு வகையுள் ஒன்று. "ராமன் காதை பார் மீது தோராத் தமிழாகச் சொல் லற்கே' என்று காப்புச் செய்யுளில் கவிஞர் குறிப்பதும் நோக் கத்தக்கது. ஆரணி சித்திரக்கவி அண்ணாமலைச்செட்டியார், சேலம் ஏகாம்பரச் செட்டியார், ஆரணி இராமலிங்கம் பிள்ளை முதலியோர் தந்த சாத்துக் கவிகளுடன் கூடியது. viii. 495/1919/II.

O31,1

சிவராம சாஸ்திரி, ஆர். இஞ்சிக்கொல்லை (மொ. து.)

1380. i. மகா பாகவதம் தமிழ் வசனம், திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. ஆரியன் பிரஸ், கும்பகோணம்; iii. பிப்ரவரி, 1920; iv. உ.ப. 120 (73-192); v. 23×15 செ.மீ ; vi. 0-10-0; vii. இது வடமொழியிலுள்ள பாகவதத்தின் தமிழாக்கமே. முதல் இரு ஸ்கந்தங்களின் சில அத்தியாயங்கள் அமைந்துள; viii. 807/1920/I.

O31,1

**சின்னத்தம்பி வாத்தியார்**

1381. i. ஆடல் பற்று: முதற் பதிப்பு; ii. தோடி வெங்கடாசல ஐயர்; வி. வேங்கடாசல சாஸ்திரி; வித்யா கல்பதரு அச்சி யந்திரசாலை, கல்பாத்தி; iii. நவம்பர், 1916; iv. செ. மூ.ப. 74; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0; vii. உலகளந்த பாரதியார் சீடர் சின்னத்தம்பி வாத்தியாரால் இயற்றப்பட்டது இந்நூல். இதில் பால காண்டமும், அயோத்யா காண்டமும் அடங்கியுள்ளன. இராமசரிதையைப் பாடலாகத் தரும் நூல் இடையிடையே, கதைத் தொடர்பு விளங்க, வசன நடையும் உளது. ஆக, இது ஓர் உரையிடையிட்ட காவியமாம். முதல் இரு காண்டங்களோடு, ஆரணிய காண்டத்தில், விராதன் வதைப்படலம் சரபங்கர் பிறப்பு நீங்கு படலம், அகத்தியப்படலம், சடாயு காண் படலம் ஆகியவையும் இடம் பெற்றுள்ளன. viii. 533/1916/IV.

O31,1

**செல்வக்கேசவராய முதலியார், தி. (தொ.து.)**

1382. i. கலிங்கத்துப்பரணி இரண்டாம் பதிப்பு; ii. தி. செல்வ, கேசவராய முதலியார், சென்னை; ப.ல.வி. அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1920; iv. செ.மூ.ப. 44; v. 20×13 செ.மீ.; vi. 0–0–6; vii. ஜெயங்கொண்டார் எழுதிய 'கலிங்கத்துப் பரணி'யை, வசன நடையில், அழகுற, ஆசிரியர் விளக்கியுள்ளார். கவிகளின் நயங்கள் புலப்பட, அங்கங்கே பல பாடல் களையும் எடுத்துக்காட்டி, விளக்கம் தந்துள்ளார்; viii. 598/1920/IV.

O31,1

**சேக்கிழார்**

1383 i. பெரியபுராணம்: இலைமலிந்த சருக்கம்: மூலமும் உரையும் முதற் பதிப்பு; ii. எ. சுந்தரம் பிள்ளை, சென்னை; வைதீக சைவ அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1920; iv. செ. மூ. உ. எ. 112; v. 26×19 செ. மீ.; vi....... vii. சேக்கிழார் ஆக்கிய பெரியபுராணத்தின் ஒரு பகுதியாகிய இலை மலிந்த சருக்கத்தின் மூலமும் உரையும் அடங்கியுள்ளன. எறிபத்த நாயனார், ஏனாதிநாயனார், கண்ணப்ப நாயனார் ஆகிய மூவர் வரலாறுகள் இப்பகுதியில் அடங்கியுள்ளன. திரு. கா. ஆலால சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய சித்தார்த்த போதரத்னாகர மாகிய பொழிப்புரை, விசேடவுரை ஆகியவற்றுடன் கூடியது. viii. 170/1920/II.

Q23wx1

1384. i. பெரியபுராணம்–சுந்தரமூர்த்தி நாயனார் புராணம்: முதற் பதிப்பு; ii. அ. நாராயண சரணர், தஞ்சாவூர்; வித்யா விநோதினி பிரஸ், தஞ்சாவூர்; iii. செப்டம்பர், 1917; iv. செ. மூ. உ. எ. 297; v. 23×15 செ.மீ.; vi. 0–12–0; vii. இதில்

சைவப்பெரியாரான சுந்தரமூர்த்தி நாயனுரின் வாழ்க்கை விளக்கப்பட்டுள்ளது. சுந்தரமூர்த்தி நாயனுருடைய புராணத்துடன், நம்பியாண்டார் நம்பி அருளிச்செய்த கலித்துறைத் திருவந்தாதியில், சுந்தரமூர்த்தி நாயனுர் தோத்திரக் கவிகளும் இதில் தரப்பட்டுள்ளன. திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர் காசிவாசி சொக்கலிங்க சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி வெளியிடப் பெற்றது, இப்பதிப்பு. viii. 76/1917/IV.

Q23wx1

**சொக்கலிங்கம் பிள்ளை, கு., தென் மகாதேவமங்கலம்**

**1385.** i. இமாலயபுராணம் ; முதல் பாகம் : முதற் பதிப்பு ; ii. லெக்ஷமண நாட்டார் ; சிவகாமி விலாசம் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1917 ; iv. செ. மூ. உ. ப. 135 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. வடமொழியில் உள்ள ஒரு மூல நூலின் தமிழாக்கமே, இது. வடநூலின் ஆசிரியர் சந்து முனிவராவார். இமாலயமலையின் பழைய வரலாறும், பார்வதியின் சரித்திரமும், இதில் தரப்பட்டுள்ளன. மாங்காடு வடிவேலு முதலியார், நடேசப் பிள்ளை ஆகியோர் இதற்குச் சாற்றுக்கவிகள் பாடியுள்ளனர். இதற்கு உரை எழுதியவரும் நூலாசிரியரே யாவார். viii. 460/1917/IV.

O31,1

**நரசிம்ஹாசாரியார், அ. வி.**

**1386** i. பசுவதம் ; சதுர்த்த ஸ்கந்தம்–வால்யூம் 3 : முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கடேஸ்வரர் கம்பெனியார், சென்னை ஆனந்த அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1916 . iv. உ. ப. 825–1162 = 337 ; v. 19×13 செ. மீ. : vi 1–0–0 ; vii. வடமொழிப் பாகவதத்தைத்தழுவித் தமிழில் ; எளிய முறையில் எழுதப்பட்டுள்ளது. இது மூன்றும் பாகமாக வெளியிடப்பட்டுள்ளது. படவிளக்கங்களுடன் பாகவதத்தில் உள்ள சதுர்த்த ஸ்கந்தத்தைத் தமிழில், வசன நடையில் முப்பது அத்தியாயங்களாகப் பிரித்து எழுதப்பட்டுள்ள நூல். இடையிடையே கொடுக்கப்பட்டுள்ள தலைப்புக்கள் கதைத் தொடர்பினை அறிய உதவுவன. viii. 698/1916/IV.

O31,1

**நல்லாப் பிள்ளை**

**1387.** i. மகாபாரதச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. பூ. மு. இராசு முதலியார், சென்னை ; கலைக்யான முத்திராக்ஷர சாலை, சென்னை ; iii. நவம்பர், 1917 ; iv. உ. ப. 436 ; v. 28×22 செ. மீ. ; vi. 3–8–0 ; vii. இதிகாசமாகிய மகாபாரதச் சுருக்கம். ஆதி பர்வம் முதல் சொர்க்காரோகண பர்வம் வரையில் சங்கிரகவாக்கிய உருவமாகத் தரப்பட்டுள்ளது. வில்லிபுத்தூரார், நல்லாப் பிள்ளை, என்பாரால் இயற்றப்பட்ட பாரதங்களை யொட்டி அமைந்த உரைநடை நூல்களினின்றும் தொகுத்துச்

சுருக்கப்பெற்றது, இந்நூல். முகவுரையில், தமிழிலுள்ள மகா பாரத நூல்களின் வரலாறு குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 967/1917/IV.

031,1

நீலகண்ட சாம்பவர், மா. (தொ. து.)

1388. i. கந்தபுராணம்: முதற் பதிப்பு; ii. மா. நீலகண்ட சாம்பவர், சென்னை; சுப்ரமணிய விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. செ. மூ. உ. ப. 8; v. 23×15 செ. மீ.; vi. 0–1–0; vii. வடமொழி நூலின் ஸ்கந்த புராணத்திலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டதன் ஒரு சிறு பகுதியே இந்நூல். viii. 225/1917/IV.

031,1

பரஞ்சோதி முனிவர்

1389. i. திருவிளையாடற் புராணம் & (பழியஞ்சிய படலம்); ii. சே. கிருஷ்ணமாச்சாரி; கணேச அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. செ. மூ. உ. எ. 44; v. 22×14 செ.மீ.; vi. 0–4–0; viii. பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம், பழியஞ்சின படலம். இதற்கு சே. கிருஷ்ணமாச்சாரியாரும், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியாரும் இயற்றிய உரை தரப்பட்டுள்ளது. viii. 63/1916/I.

031,1

1390. i. திருவிளையாடற்புராணம் (தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்): முதற் பதிப்பு; ii. சே. கிருஷ்ணமாசாரியார், சென்னை; கணேச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1919; iv. செ. மூ. உ. எ. 108; v. 23×15 செ. மீ.; vi. 0–10–0; vii. இதில், பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணத்தின் தருமிக்குப் பொற்கிழியளித்த படலம் அடங்கி யுள்ளது. பதிப்பாசிரியர் சே. கிருஷ்ணமாசாரியார் அதற்கு உரையெழுதியுள்ளார். பாடல்களுக்குப் பதவுரையோடு விளக்கக குறிப்புக்களும் தெளிவுற எழுதப்பட்டுள்ளன. viii. 211/1919/III.

031,1

புகழேந்திப் புலவர்

1391 i. நளவெண்பா: முதற் பதிப்பு; ii. லலிதா விலாஸ் புக் டிப்போ, சென்னை; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. 1916; iv. செ.மூ. உ.எ. 151; v.18×13 செ.மீ.; vi. 0–6–0; vii. இந்நூலில், நள வெண்பாவின் ஒரு பகுதியான இரண்டாவது கலித்தொடர் காண்டப்பகுதி பாடல்களுக்குத் தெளி பொருள் உரையை ஜி. தாமோதர முதலியார் எழுதியுள்ளார். புகழேந்திப் புலவர் வரலாறும் சுருக்கமாகத் தரப்பட்டிருக்கிறது. முன் கதைத் தொடர்ச்சி உரைநடையில் தரப்பட்டிருக்கிறது. viii. 670/1916/III.

031,1

மாதவ ஐயர், அ.

1392. i. பால ராமாயணம்: முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1917; iv. உ.ப. 220; v. 18×13 செ.மீ; vi. 0–12–0; vii. நூல் ஆசிரியர், தம் மகளுக்குக்கூறுவதன் மூலமாக, இராமாயண வரலாற்றினை உரைநடையாக எழுதியுள்ளார். இதில் 46 பிரிவுகள் உள்ளன. மிகவும் எளிய நடையில் விளக்கமாகவும், சுருக்கமாகவும், கருத்துச்செறிவோடு, பொருட்சிதைவு இல்லாமல் ஆசிரியர் விளக்கியுள்ளார். கனம் சர். பி. எஸ். சிவசாமி ஐயரவர்கள் எழுதிய பாயிரமும், ஆசிரியர் எழுதிய முகவுரையும் நூன்முகப்பில் உள்ளன. viii. 247/1918/II.

O31,1

1393. i. மேருமந்திர புராணம்—மூலமும் உரையும்: முதற் பதிப்பு; ii. தருமசீலன் அலுவலகத்தார், சென்னை. தருமசீலன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1919 ; iv. செ. மூ. உ. எ. 83 ; v. 21×24 செ. மீ. ; vi. 0–5–0 ; vii. சைன சமயத்தை ஒட்டிய ஒரு கதை இதில் இடம் பெற்றுள்ளது. பாடல்கள் பதவுரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இதில் இரண்டாவதான முத்திச்சருக்கம் இடம் பெற்றுள்ளது. இச் சருக்கத்தின் கதைச் சுருக்கமும் முதலில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 318/1919/III.

O31,1

வில்லிபுத்தூராழ்வார்

1394. i. கிருஷ்ணஸ்வாமி தூது மூலமும் உரையும்: முதற் பதிப்பு ; ii. நாராயணசாமிப் பிள்ளை, சென்னை ; நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. பிப்ரவரி, 1917 ; iv. செ.மூ.உ.எ. 263 ; v. 21×14. செ. மீ. ; vi. 0–4–0 ; vii. கண்ணனின் தூது, மூலமும் உரையும் இதில் அடங்கியுள்ளன. வில்லிபுத்தூராழ்வார் என்ற பெரியாரால் பாடப்பெற்ற வில்லிபாரதத்தின் உத்தியோக பருவத்தில் அடங்கியுள்ள கிருஷ்ணன் தூதுச் சருக்கம் என்ற பகுதி குமாரசாமி தேசிகர் என்பவரால் இயற்றப்பட்ட உரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது. viii. 291/1918/III.

O31,1

1395. i. கிருஷ்ணஸ்வாமி தூது: முதற் பதிப்பு ; ii. இராம. குருசாமிக் கோனார், மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. நவம்பர், 1920; iv. செ.மூ.உ.எ. 267; v. 21×14 செ.மீ. ; vi. 0–10–0 ; vii........; viii. 803/1920/IV.

O 31, 1

1396. i. வில்லிபுத்தூரார் பாரதம் : சபாபருவம்: முதற் பதிப்பு; ii. சே. கிருஷ்ணமாசாரி, சென்னை ; கணேச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1918 ; iv. செ.மீ. உ. எ. 284 ; v. 22×14 செ. மீ. ; vi. 2–12–0 ; vii. மகாபாரதத்தின் இரண்டாவது பருவமாகிய

சபாபருவத்தின் இரண்டு உட்பிரிவுகளாகிய இராச்சூயச் சருக்கமும் சூது போர்ச்சருக்கமும் இதில் கூறப்பட்டுள்ளன. பாண்டவர்களது இராசசூய யாகமும்; சகுனி, தருமபுத்திரனுடன் சூதுபொருதலும் இந்நூலின் கண் விளக்கப்பட்டுள்ளன. சே. கிருஷ்ணமாச்சாரியாரின் உரையுடன் கூடியது. வில்லிபுத்தூராழ்வாரின் வரலாறும், பாரதக் கதையின் சுருக்கமும் உரைநடையில் தரப்பட்டுள்ளன. viii. 1025/1918/III.

O31,1

**1397.** i. வில்லிபுத்தூரார் பாரதம்—உத்யோக பருவம்—உரையுடன்: ii. எஸ். கிருஷ்ணமாசாரி, சென்னை; கணேச அச்சுக்கூடம், சென்னை; iii. ஏப்ரல், 1920; iv. செ.மூ.உ.ப. 304; v. 22×14 செ. மீ.; vi. 2–12–0; vii. வில்லிபுத்தூராரின் பாரதத்தில் உத்யோக பருவத்தின் எட்டுச் சருக்கங்களின் மூலமும் உரையும் தரப்பட்டுள்ளன. இவ்வுரையை எழுதியோர் வை.மு. சடகோபராமானுஜாசாரியாரும், சே. கிருஷ்ணமாசாரியாரும் ஆவர். வில்லிபுத்தூராழ்வார் வரலாறும் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 213/1920/II.

O31,1

**வீரகவிராயர்**

**1398.** i. அரிச்சந்திர புராணம்: முதற் பதிப்பு; ii. சு. வ. நாராயண ஐயர்; கமர்ஷியல் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி; iii. ஜனவரி, 1918; iv. செ.மூ.உ.எ. 160; v. 18×13 செ. மீ.; vi. 1–0–0; vii. இது ஆரம்ப ஆசிரியர் பயிற்சிக்கான பாடப் புத்தகமாகும். இதில் அரிச்சந்திர புராணத்தின் மூலமும் அதன் விளக்கவுரையும் உள்ளன. நூலாசிரியரின் வரலாறு முகவுரையில் விளக்கப்பட்டிருக்கிறது. viii. 784/1919/I.

O31,1

**வேங்கடராம ஐயர், ஊ. சா.**

**1399.** i. அரிச்சந்திரன்: முதற் பதிப்பு; ii. டீ.கே. கிருஷ்ணசாமி ஐயர் கும்பகோணம்; கிருஷ்ணவிலாச பிரஸ், கும்பகோணம்; iii. நவம்பர், 1917; iv. உ.ப. 146; v. 18×13 செ.மீ.; vi. 0–10–0; vii. புராணத்தில் புகழ்பெற்றவனான அரிச்சந்திரனின் கதை இதில் விளக்கப்பட்டுள்ளது. நல்லூர் வீரகவிராயரின் செய்யுள் நூலாகிய அரிச்சந்திரப் புராணத்தை அடிப்படையாகவைத்து எழுதப்பட்டுள்ளது. இடையிடையே அரிச்சந்திர புராணத்திலிருந்து சில செய்யுட்கள் வந்துள்ளன. தி.த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள் ஆங்கிலத்தில் இதற்கு ஓர் அணிந்துரை வரைந்துள்ளார். viii. 742/1917/IV

O31,1

**வேங்கடேசாசார்யார், அ. கும்பகோணம் (மொ. து.)**

**1400.** i. மகாபாரதம்–விராட பர்வம்: இரண்டாம் பதிப்பு; ii. ம. வீ. இராமானுஜாசாரியார், கும்பகோணம்; ஜஸ்டிஸ் பிரஸ், சென்னை. iii. பிப்ரவரி, 1918; iv. உ.ப. 200; v. 22×15 செ.மீ.; vi.

2-8-0 ; vii. மகாபாரதத்தில் உள்ள விராட பர்வத்தினைப்பற்றிய விளக்கம் உரைநடையில் தரப்பட்டுள்ளது. திருப்பனந்தாளாதீனம் தவப்பெருந்திரு காசிவாசி சோமசுந்தரத்தம்பிரான் அவர்கள் உதவியினால் இந்நூல் வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது. ம. வீ. இராமானுஜாசாரியாரால் பதிப்பிக்கப்பெற்று வெளிவரும் பாரத மொழிபெயர்ப்புத் தொடர் வெளியீடுகளில் இது ஒன்று. viii. 331/1918/IV.

O31,1

## 894.8111 : பிரபந்தம்

### அகவல்

#### ஔவையார்

1401. i. விநாயகரகவல் வேழமுகம், உலகநீதி : முதற் பதிப்பு ; ii. பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர் ; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1918 ; iv. செ. மூ. எ. 13 ; v. 13×11 செ. மீ. ; vi. 0–0–6 ; vii. தமிழ் மூதாட்டியாகிய ஔவையார் அருளிச் செய்த விநாயகரகவல் இது. இந் நூலின்கண் ஔவையார் பாடிய வேழமுகம், பிள்ளையார் சிந்தனை, சரஸ்வதி சிந்தனை, பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை, உலகநீதி ஆகிய பிரபந்தங்களும் அடங்கியுள்ளன. "அருந்தமிழா லறுமுகனைப் பாடவேண்டி, ஓதுவித்த வாசகத்தால் உலகநாதன் உண்மையாய்ப் பாடி வைத்த உலகநீதி" என வரும் இறுதிப் பாடல் குறிப்பினால் இதனைச் செய்தவர் உலகநாதன் என்பது தெரிய வருகிறது. உலகநீதியை 'உலகநீதி புராணம்' எனவும் ஆசிரியர் தம் பாடலில் குறிப்பிடுகின்றார். viii. 1117/1918/III.

O31,1

1402. i. விநாயகரகவல் : முதற் பதிப்பு ; ii. கந்தசாமி முதலியார்; கொண்ணூர் ; அப்பர் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1918 ; iv. செ. மூ. ப. 12 ; v. 18×12 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. ......; viii. 305/1919/I;

O31,1

1403. i. விநாயகர் திருவகவல் (விநாயகர் திருவகவல், விநாயகர் கவசம்) ; ii. செ. பு. அரு. அ. அண்ணாமலை செட்டியார், முறையூர் ; வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி , iii. 1920 ; iv. செ. மூ. ப. 12 ; v. 11×7 செ. மீ. ; vi........ ; vii. ஔவையார் பாடிய விநாயகர் அகவலுடன் நக்கீரர் பாடிய அகவலும், விநாயக கவசமும் இதில் அமைந்துள. viii. 216/1920/I.

O31,1

**கருணைப் பிரகாச சுவாமிகள்**

i. இட்டலிங்கவகவல் (**தொ. எ.1823** பார்க்க) : முதற் பதிப்பு ; ii. சுவாமிநாத பண்டிதர் ; சைவ வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 196 அடிகள் ; vii. இந்த அகவல் நேரிசையாசிரியப்பாவால் ஆகியது. 196 அடிகளைக் கொண்டது. viii. 1208/1917/I.

O31,1

**குமாரசுவாமிக் குருக்களையா, சிவ. சு.**

1404. i. விநாயகப் பெருமான் பேரில் அகவல், ஸ்தோத்திரம் (சிதம்பர க்ஷேத்திர மகாத்மியம், உலகம்மன் பேரில் ஸ்தோத்திரம்) : முதற் பதிப்பு ; ii. சிவ. சு குமார சுவாமிக் குருக்களையர் ; சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. 1916 ; iv. செ. மூ. ப. 10 ; v. 13×11 செ. மீ. ; vi........ ; vii. விநாயகப் பெருமான் பேரில் தோத்திரமாலை. தென்னிந்தியாவின் சிவத்தலமாகிய சிதம்பரத்தின் பெருமையும் இந் நூலின்கண் விளக்கப்பட்டிருக்கிறது. அகவலையடுத்து விநாயகர் தோத்திரமான விருத்தங்கள் சிலவும் உள்ளன. viii. 44/1916/II.

O31,1

**சப்பாணி செட்டி, ஆரணி**

1405. i. விநாயகர் **அகவல்** : முதற் பதிப்பு ; ii. சப்பாணி செட்டி, ஆரணி ; அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக் கூடம், ஆரணி ; iii. செப்டம்பர், 1917 ; iv. செ. மூ. ப. 8 ; v. 16×10 செ. மீ. ; vi. 0–0–6 ; vii. இது விநாயகரைப் பற்றிய தோத்திரம். viii. 307/1917/IV.

O 31,1

1406. i. **சிவசுப்பிரமணியர் அகவல்** : முதற் பதிப்பு ; ii. பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர் ; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1917 ; iv. செ. மூ. ப. 8 ; v. 14×11 செ. மீ. ; vi. 0–0–3 ; vii. பழநியில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள முருகப் பெருமானின் சிறப்பினைப் புகழ்ந்து பாடப்பெற்ற அகவல் பாடலைக் கொண்டது. பழனியாண்டவர் தோத்திரம் என்றும் இதற்குப் பெயருண்டு. viii. 1027/1918/III.

O 31,1

1407. **சுப்பிரமணியர் அகவல்** : முதற் பதிப்பு ; ii. டி. முத்து சாமி பிள்ளை, பழநி ; கண்ணபிரான் விலாச பிரஸ், பழநி ; iii. 1919 ; iv. செ. மூ. ப. 8 ; v. 13×11

செ.மீ.; vi. 0–0–6; vii. இது சுப்பிரமணியரைக் குறித்துப் பாடப்பெற்ற ஓர் அகவற்பா. நல்வாழ்வும் நன் ஞானமும் வேண்டிப் பாடப்பெற்ற துதிப்பாவாகும். viii. 1110/1919/III.

O31,1

தேசிகாநந்த சுவாமிகள்

i. ஏகாம்பர யோகீஸ்வரர் தியான அகவல் (தொ. எ. 466 பார்க்க); ii. செயிண்ட் அந்தோணீஸ் பிரஸ், உதகைமண்டலம்; iii. 1920; iv. செ. மூ. ப. 6; v. ....; vi. ....; vii. ஏகாம்பர யோகீஸ்வரரைக் குறித்துத் தோத்திரமாய் அமைந்துள்ளது. சுவாமிகளின் வாழ்க்கையும் தொண்டும் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 363/1920/I.

O31,1

நற்கீர தேவர்

i. விநாயகர் திருவகவல் (தொ. எ. 1403 பார்க்க); ii. செ. வு. அரு. அ. அண்ணாமலை செட்டியார், முறையூர் வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி; iii. 1920; iv. உ. ப. 9; v. ....; vi. ......; vii. படிப்பார்க்குப் பக்தியை விளைக்குந் தன்மையது, இந்நூல். ஔவையார் பாடிய விநாயகர் அகவல் போன்ற அமைப்புடையது. viii. 216/1920/I.

O31,1

நாகரத்தினம் பிள்ளை, வே., பொன்னேரி

1408. i. விநாயகர் அகவல்: முதற் பதிப்பு; ii. வே. நாகரத்தினம் பிள்ளை, பொன்னேரி; லட்சுமிநாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1916; iv. செ. மூ. ப. 32; v. 13×11 செ.மீ.; vi. 0–1–0; vii. 'நமோ நம' எனத் துதிக்கும் நாமாவளி முறையில் அமைந்தது. இசைக் கீர்த்தனைப் பாடல்களும் பல உள்ளன.; viii. 1198/1166/II.

O 31,1

அட்டகம்

i. பச்சை மலை நாயகி அஷ்டதோத்திரம் (தொ. எ. 1740 பார்க்க) ii. எஸ் கே. சொக்கலிங்கம் பிள்ளை அண்டு ம. வடிவேல்சாமி பிள்ளை, திரிசிராமலை யாதவர்புரம்; நடராஜா அச்சுக்கூடம், திருச்சி; iii. 1917; iv. செ. மூ. எ. 8; v........; vi ......; vii. பச்சைமலை நாயகியாகிய உமாதேவியைக் குறித்து எட்டு விருத்தங்களினால் ஆகிய துதி நூல். எனவே இது ஓர் அட்டகப் பிரபந்தமாகும். viii. 732/1917/III.

O31,1

முத்துச்சாமி உபாத்தியார், சி.

1409. i. சிறு நிலா ஸ்ரீ செல்வ விநாயகர் தோத்திரப்பா அட்டகம் முதலியன: முதற் பதிப்பு; ii. நரசிம்ம அய்யங்கார், சிதம்பரம்; ஸ்ரீகுஞ்சிதசரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. ஜூலை, 1917; iv. செ. மூ. எ. 1+8+1; v. 21×14 செ. மீ.; vi. 0—1—0; vii. இந்நூலில் சிறு நிலா செல்வ விநாயகர் அட்டகம், செல்வ விநாயகர் பஞ்சரத்தினம், சுப்பிரமணியர் கீர்த்தனை அடங்கியுள்ளன. viii. 534/1917/III.

O31,1

ரமணமஹரிஷி

i. அருணாசல அஷ்டகம்: முதற் பதிப்பு; (தொ.எ. 1793 பார்க்க); ii. எஸ். நாராயணசெட்டி; மினர்வா அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. செ. மூ. எ. 8+3; v. ....; vi. ....; vii. எண் சீரடி ஆசிரிய விருத்தம் எட்டினைக் கொண்ட சிறு துதி நூல். இந்த அட்டகப் பாடல்கள் அந்தாதியாக அமைந்துள. viii. 238/1917/I.

O31,1

## அந்தாதி

அகத்திய மா முனிவர்

1410. i. ஆறெழுத்தந்தாதி: முதற் பதிப்பு; ii. ம. அழகர்சாமி பிள்ளை மதுரை; ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸ், திருமங்கலம்; iii. மார்ச், 1917; iv. செ. மூ. எ. 2+101; v. 16×12 செ.மீ.; vi. 0-1-0; vii. இந்நூல் சுப்பிரமணியக் கடவுளைப் புகழ்ந்து எழுதப் பெற்ற பாடல்களைக் கொண்டது. இது கலித்துறை யந்தாதி. முருகன் திருப்பெயர் ஆறெழுத்தாதலின் இப் பெயர் பெற்றது. viii. 116/1917/II.

O31,1

அங்கண்ண முதலியார், போளுவாம்பட்டி

1411. i. வெள்ளிமலை கட்டளைக் கலித்துறையந்தாதி: முதற் பதிப்பு; ii. சி. கு. நாராயணசாமி முதலியார், கோயம் புத்தூர்; சிவரகஸ்யம் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1919; iv. செ. மூ. எ. 3+1+100+1; v. 18×13 செ. மீ.; vi. இலவசம்; vii. இதில் வெள்ளிமலையில் விளங்கும் சிவபெருமான் திருவருளைப் போற்றிப் பாடப்பெற்ற நூற்று மூன்று பக்திப்பாடல்கள் அமைந்துள்ளன. இவ்வெள்ளிமலை கோவைக்கு மேற்கே பதினெட்டு மைல் தொலைவில் அமைந் துள்ளது. இயற்கை எழில் தவழும் இக்குன்றின் உச்சியில் அமர்ந்து அடியார்க்கின்னருள் சுரக்கும் வெள்ளியங்கிரி ஆண் டவனை மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி ஆகிய திங்

களில் வரும் முழு நிலவுக் காலத்தில் மக்கள் திரள் திர ளாகச் சென்று வழிபட்டு இட்ட சித்திகளை எய்தி வரு கின்றனர். மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி முழுநிலாக் காலங்களில் அடியார்கள் சென்று ஆண்டவனை வழிபடற் கேதுவாக சிறப்புப் பேருந்து வசதிகள் செய்துதரப்பட்டுள் ளன. கோயம்புத்தூர் கலாசாலைத் தலைமைத் தமிழ் பண்டிதர் அ. கந்தசாமிப் பிள்ளை இதற்குச் சாற்றுக் கவிகள் பாடி யுள்ளார். viii. 238/1919/II.

O31,1

**அமிர்தம் சுந்தரநாதம்பிள்ளை, திரிசிரபுரம்**

**1412.** i. ஆதி வயலூர் வெண்பா அந்தாதி; முதற் பதிப்பு; ii. அமிர்தம் சுந்தரநாத பிள்ளை, திருச்சி; சதர்ன் ஸ்டார் பிரஸ், திருச்சி; iii. பிப்ரவரி, 1918; iv. செ.மூ.எ. 100+2; v, 18×12 செ.மீ.: vi. 0–4–0; vii. ஆதிவயலூரில் கோயில் கொண் டிருக்கும் சிவசுப்பிரமணியக் கடவுள் பேரில் யாவரும் எளி திற் படித்துத் தெரியக்கூடிய செந்தமிழால் தோத்திர உருவமாக வெண்பாவால் ஓர் அந்தாதியாகப் பாடப்பட்டுள் ளது. பாடல்களுக்கு அரும்பதவுரை அடிக் குறிப்பாகத் தரப் பட்டிருக்கிறது. 1918 ஆம் வருடம் முருகன் சந்நிதியில் நீதிபதி பாலசுப்ரமணிய ஐயர் தலைமையில் அரங்கேற்றம் செய்யபெற்றது. இதனை அரங்கேற்றிய காலம், களம் முத லியனப்பற்றிக் கூறும் பாடல்களால் அறியலாகும். சாது சதாசிவப்பிரமம், திரிசிரிபுரம் மு. நடேச முதலியார் முதலியோர் இதற்கு சாற்றுக்கவி பாடியுள்ளனர். viii. 714/1919/I.

O31,1

**அறிவானந்தா, சுவாமி**

**1413.** i. புள்ளிருக்கு வேளூர் வெண்பாவந்தாதி; முதற் பதிப்பு; ii. கே. எஸ். இரத்தினம் பிள்ளை; பிரம்மவித்தியா அச்சுக் கூடம், திருமீயச்சூர்; iii. நவம்பர், 1919; iv. உ. ப.+ செ. மூ. எ. 10+100; v. 18×12 செ.மீ.; vi. 0–2–0; vii. இது, புள்ளிருக்கு வேளூரில் வழிபாடு செய்யப்பட்டு வருகின்ற சிவபெருமான் பேரில் பக்தியுடன் பாடபபட்ட வெண்பா அந்தாதி. இந்நூலை அச்சிட உதவி புரிந்த பினுங்கு கருவூல அலுவலர் திர்சிரபுரம் கனவான் அனந்தராம நாயுடுகார் குமாரர் டி. சுப்பைய நாயுடுகாரவர்கள் மீது பாடிய இரண்டு வெண்பாக்களையும் மதுரை அரங்க இராஜ குமாரா னந்த சுவாமிகள், மாயூரம் சிதம்பர மடம், தவத்திரு அம்பலவாண தேசிகர் முதலியோர் பாடிய சாத்துக் கவிகளை யும் கொண்டுள்ளது. viii. 926/1919/IV.

O31,1

**கருணாநந்த சுவாமிகள்**

1414. i. கண்ணுடையம்மன் வாலையந்தாதி ; முதற் பதிப்பு ; ii. ராம. நா. கண்ணப்ப செட்டியார், நாட்டரசன் கோட்டை ; அஷ்டலக்ஷ்மி விலாச அச்சுக்கூடம் ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 2+101 ; v. 21×14 செ. மீ. ; vi....... ; vii. பாண்டிய நாட்டில் தென்பனசை என்னும் மறுபெயர் பெற்ற வடகலை வேள்வி நாட்டரசன்கோட்டை கண்ணுடையம்மன் மேல் பாடப்பட்ட நூறு பாட்டுகள் கொண்ட தோத்திரமாலை. இது சுவாமிகளின் சுவானுபூதித்திருவாக்கு என்று சுட்டப்பட்டிருக்கிறது. இது கலிததுறையந்தாதி. viii 165/1916/II.

O31,1

**கம்பர்**

1415. i. சரஸ்வதி அந்தாதி ; இரண்டாம் பதிப்பு ; ii. கொ. செல்வரங்கம் அண்டு கம்பெனி, சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. செ. மூ. எ. 30 ; v. 14×9 செ. மீ. vi. 0–0–6 ; vii. கவிச்சக்ரவர்த்தி கம்பநாடர் அருளிச் செய்த சரஸ்வதி அந்தாதியின் மூலம் இப்புத்தகத்தில் உள்ளது. இது கட்டளைக் கலித்துறைப் பாவாலாகிய பிரபந்தம். இதன்கண் அமைந்துள்ள முப்பது செய்யுள்களும் சொற் சுவை பொருட்சுவை மிக்குப் பொலிகின்றன. viii.7 87/1918/III.

O31,1

1416. i. சரஸ்வதி அந்தாதி : முதற் பதிப்பு ; ii. பி. எம். வேணுகோபாலநாயுடு, வேலூர் ; கிருஷ்ண விலாச அச்சுக் கூடம், வேலூர் ; iii. அக்டோபர், 1918 ; iv. செ. மூ. உ.எ. 30 ; v. 17×11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. இதில் குறிப்புரை எழுதியவர் 'சம்பகா முனி' 'குலசேகரன்' முதலிய நூல்களின் ஆசிரியராகிய ப. ம. வேணுகோபால நாயுடு ஆவர். கம்பர் வரலாற்றுச் சுருக்கமும் தரப்பட்டிருக்கிறது. இந்நூலாசிரியர் யாரென்பது பற்றி சரியாகக் குறிப்பிடுவதற்கில்லை. சிலர் கம்பரென்றும் பலர் கம்பரல்லரென்றும் கூறுகின்றனர். viii. 447/1918/IV.

O31,1

**கிருஷ்ணவேணி அம்மாள் எஸ்., பண்டிதை**

i. இலக்குமி வெண்பாவந்தாதி (தொ. எ. 1456); பார்க்க ; ii. கந்தசாமி, கிளியாநகர் ; முரஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. எப்ரல், 1917 ; iv. செ. மூ. எ. 6+100+1; v. . ; vi. . ; vii. இலக்குமிதேவியை குறித்த துதிநூல். இது வெண்பாவினாலாகிய ஓர் அந்தாதிப் பிரபந்தம். viii. 349/1917/II.

O31,1

**சிதம்பரச் செட்டியார், வெ. ஆ. தி., தேவக்கோட்டை**

**1417.** i. தில்லைகற்பகவிநாயகர் வெண்பாவந்தாதி : முதற் பதிப்பு ; ii. வி. ஏ. டி. சிதம்பரச் செட்டியார், தேவக்கோட்டை ; சைவ வித்யாநுபான யந்திரசாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 1+100 ; v. 16×12 செ. மீ. ; vi........ ; vii. தில்லைகற்பகவிநாயகரைக் குறித்துப் பாடப்பெற்ற வெண்பாவந்தாதி இந்நூல். காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கங்கச் செட்டியார், தில்லை கோபாலசாமி தீட்சிதர் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இவ்வந்தாதியில் சில செய்யுட்களுக்கு அரும்பதப்பொருளும் பொருள் விளக்கமும், 93ஆம் செய்யுளுக்கு மட்டும் விருத்தியுரையும் தரப்பட்டிருக்கின்றன. viii. 1207/1917/I.

O31,1

**சுப்பய்யர், வி.**

**1418.** i. வடிவேலன் அந்தாதி அல்லது கந்த புராணக் கருப்பொருள் : முதற் பதிப்பு ; ii. வி. என். சாமராவ் அண்டு கம்பெனி, சென்னை ; விக்டோரியா பிரஸ், வேலூர் ; iii. மே, 1919; iv. செ.மூ.எ. 9+100; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0; vii. இது முருகனைப் போற்றி எழுதப்பெற்ற நூல். இடையிடையே திருப்புகழ், திருமுருகாற்றுப்படை ஆகிய நூல்களினின்று சில பாடல்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. கந்தபுராணத்தின் சுருக்கம் இதில் தரப்பட்டுள்ளது. பாடல்களில் வரும் கடின சொற்களுக்கு அரும்பதவுரையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 528/1919/II.

O31,1

**சுப்பய்ய ஸ்வாமிகள், கோவிலூர் மடாலயம்**

**1419.** i. சிக்கல் பொருள்வைத்தசேரி ஸ்வர்ணபுரீஸ்வரர் சௌந்தரிய நாயகி அந்தாதியும் செல்வவிநாயகர் செம்பொன் மாலையும்; முதற் பதிப்பு; ii. க.வீ.சொ. அழகப்ப செட்டியார்; சச்சிதானந்தம் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1917; iv. செ.மூ.எ. 1+101+1; v. 19×13 செ.மீ.; vi. இலவசம்; vii. சுவர்ணபுரீஸ்வரர், சௌந்தர்யநாயகி, செல்வ விநாயகர் ஆகியோரைக் குறித்து பாடப்பெற்ற 200 பக்திப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. சௌந்தர்ய நாயகி அந்தாதி பல்வேறுவகைச் சந்தமுடைய விருத்தப் பாக்களால் ஆகியது. விநாயகர் செம்பொன்மாலைத் தோத்திரப் பாடல்கள் "செல்வமாமுகனே" என்னும் விளியுடன் முடிவுறுகின்றன. viii. 691/1917/III.

O31,1

**சுப்பிரமணிய பிள்ளை, தாமோதரபுரம்**

**1420.** i. திருச்சுழியற் கொம்பிலா வெண்பா வந்தாதி: முதற் பதிப்பு; ii. சொ. வேலுச்சாமிக் கவிராயர்; ஞானம்பிகா

பிரிண்டிங் வொர்க்ஸ், காரைக்குடி; iii. ஜனவரி, 1918; iv. செ.மூ.எ. 100; v. 16×14 செ.மீ.; vi. இலவசம்; vii திருச்சுழியல் என்னும் புண்ணியப் பதியில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சிவபெருமான்மீது தாமோதரபுரம் சுப்பிரமணிய பிள்ளை அவர்களால் பாடப்பட்ட அந்தாதித் தொடையாயமைந்த பாடல்கள் (வெண்பா) நூற்றினைக் கொண்டது இந்நூல். சொற்சுவையும், பொருட்சுவையும், பக்திச்சுவையும் சொட்டச் சொட்டப் பாடியுள்ளார் ஆசிரியர். கொம்புள்ள எழுத்துககள் வாராவகையில் பாடப்பட்ட வெண்பாக்களையுடையதாகையினால் இந்நூல் கொம்பிலா வெண்பா எனப் பெயர்பெற்றது. viii. 907/1918/IV.

O31,1

தண்டபாணி சுவாமிகள்

i. திருமகளந்தாதி (தொ. எ. 638 பார்க்க): முதற் பதிப்பு; ii. தி. மு. செந்திலுயகம் பிள்ளை, திருவாமாத்தூர்; இராமய்யர் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1920; iv. செ.மூ.எ. 1+100+2; vii. திருமகள் தோத்திரமாக அமைந்த கட்டளைக் கலித்துறைப் பாவாலாகிய அந்தாதி. viii. 682/1920/I.

O31,1

நற்கீரே தேவர்

1421 i. சிறைவிடு அந்தாதி: முதற் பதிப்பு; ii. டி. குருசாமி பிள்ளை, சென்னை; அமெரிக்கன் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. மே, 1920; iv. செ.மூ.எ. 100; v. 19×11 செ.மீ.; vi. 0-3-0; vii. திருச்செந்தூர் மாநகரத் தெழுந்தருளியிருக்கின்ற சுப்பிரமணியக் கடவுள் பேரில் சிறைவிடு அந்தாதி. கடைச்சங்கத்துத் தலைமைப் புலவர் நக்கீரதேவரால் அருளிச்செய்யப்பட்டது. இதன் ஆசிரியர் கடைச்சங்கத்தின் கண் இருந்து தமிழாராய்ந்த நக்கீரர் பெருமகனு வென்பது ஆராய்ச்சிக்குரியது. சிறைவிடு அந்தாதி ஏட்டுப் பிரதியில் வரையப்பட்டுள்ளதாகக் கூறப்படும், சத்குரு சங்காரத் திருப்புகழ், சுப்பிரமணியர் தண்டகம் என்ற இரு நூல்களும் இதன்கண் அடங்கியுள்ளன. viii. 620/1920/II.

O31,1

நாரணப்ப நாயக்கர், இ., விஜயரங்கபுரம்

1422. i. பஞ்சதலத்தந்தாதி (சீனிவாசகப் பெருமான் பேரில் பதிகம்): முதற் பதிப்பு; ii. குருசாமி நாயுடு; அஷ்டலக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 100; v. 22×14 செ.மீ.; vi. . . . . .; vii. தென்னிந்தியாவில் பாண்டி நாட்டிலே ஐந்து வெவ்வேறு இடங்களில் வழிபடும் சிவபெருமானைக் குறித்து அமைந்த தோத்திரமாலை. பாடல்

பெற்ற ஐந்து தலங்களாவன: சங்கரநயினார்கோயில், தாருகாபுரம், திருக்கருவையம்பதி, தென்மலை, தேவதானம் என்பனவாம். அந்தாதிப் பாடல் இத்தலமுறையிலே அவ்வத்தலப் பெருமானைப் போற்றிப்புகழ்கிறது. சு. திருமலை வேணுக்கவிராயர், அருணாசலக் கவிராயர்: அ. இராமசாமிச் செட்டியார் என்போர் இதற்குச் சாற்றுக் கவி பாடி யுள்ளனர். வட திருப்பதி சீனிவாசகப் பெருமாளைத் துதிக்கும் பதிகம் ஒன்றும் இறுதியில் உள்ளது. viii. 603/1916/I.

O31,1

**நாராயணசுவாமி நாயுடு, பி.பி., தச்சநல்லூர்**

1423. i. கேமன் முனிவர் வெண்பா வந்தாதி; ii. பி. பி. நாராயணசுவாமி நாயுடு, பாளையங்கோட்டை; ஆண்டவன் அச்சாபீஸ், பாளையங்கோட்டை; iii. மார்ச், 1918; iv. செ.மூ.எ. 1+100+1; v. 22×14 செ.மீ.; vi......; vii. சிந்துபூந்துறைத் தட்சிணாமூர்த்தி மடாலயத்தில் எழுந்தருளி யிருக்கும் கேமன் முனிவர் பேரில் பாடப்பெற்ற வெண்பா அந்தாதியினைக் கொண்டது இந்நூல். அடிக்குறிப்பாகச் சில அரும்பதங்களுக்குப் பொருளும் தரப்பட்டிருக்கிறது. சிந்து பூந்துறைத் தட்சிணாமூர்த்தி மடாதிபதி எம். வேதநாயக சுவாமிகள், திருச்செந்தூர் அஷ்டாவதானம் சீலத்திரு மகாதேவ ஐயரவர்கள் முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் நல்கியுள்ளனர். viii. 362/1919/IV.

O31,1

**பரமசிவஞ் செட்டியார், ரெட்டியபட்டி**

1424. i. தில்லையந்தாதி; ii. அருணாசலக் கவிராயர், எட்டிசேரி, அஷ்டலக்ஷ்மி வ்லாசம் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 5+100+7; v. 16×11 செ.மீ.; vi......; vii. தில்லை நடராஜனின்மேல் தோத்திரமாலை; கலித்துறைப் பாவால் ஆகியது. இதன் முடிவில் 'பஞ்சதல விருத்தம்' என்பது ஒன்றும் உளது. இதில் சங்கரநயினார்கோயில், தாருகாபுரம், கரிவலம்வந்தநல்லூர், தென்மலை, தேவதானம் என்னும் ஐந்து தலங்களில் எழுந்தருளியுள்ள இறைவனைத் துதிக்கும் ஐந்து பாடல்கள் உள. இறுதிப்பாடல் தரிசனம் செய்தார் பெறும் பயனைத் தெரிவிக்கிறது. viii. 602/1916/I.

O31,1

## அந்தாதி: பதிற்றந்தாதி

**திருநாவுக்கரசு முதலியார்**

i. பாலாம்பிகை மீது பதிற்றந்தாதி (தொ. எ. 490 பார்க்க); ii. பொன்னுவேலு கிராமணியார், சென்னை; பெண் ரோஸ் அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூலை, 1917;

iv. செ. மூ. எ. 1+20+5 ; vii. திருப்போரூர்ப் பிரணவ சைவம் தியாக கைலாச நாதரிடம் அமர் ஸ்ரீ பாலாம்பிகையம்மை மீது பாடப்பெற்ற துதி நூல். வெண்பாவும் கலித்துறையும் ஆக இருபது பாடல் அந்தாதியாக அமைந்துள்ளன. இவ்வகை நூல்களைப் பிறர் 'இரட்டைமணி மாலை' என வழங்குவர். வெண்பா பத்து கட்டளைக் கலித்துறை பத்து அந்தாதியாக வருதல் கொண்டு பதிற்றந்தாதி என வழங்கினர் போலும். இதன் ஈற்றில் திருப்போரூர் சண்முகப் பெருமானைக் குறித்த 'பஞ்சகக் சொச்சகம்' என்னும் ஒரு பகுதியும் உளது. viii. 347/1917/III.

O31, 1

## அந்தாதி: பதிற்றுப்பத்தந்தாதி

### சுப்பிரமணிய சுவாமிகள், பேரூர்

1425. i. திருப்பேரூர் பதிற்றுப்பத்தந்தாதி: முதற் பதிப்பு ; ii. சுப்பிரமணியசுவாமி, பேரூர்; நடேசர் அச்சுயந்திரசாலை, கோயம்புத்தூர் ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 100 ; v. 18×13 செ.மீ. ; vi. . . . . . . . ; vii. திருப்பேரூர் இறைவன் மீது அந்தாதி வடிவில் பாடப்பட்ட தோத்திரமாலை. பத்து வகைச் சந்தம் வேறுபட்ட விருத்தங்களால் ஆகியது. சில சொற்களுக்குப் பொருளும் வேறு குறிப்புக்களும் அங்கங்கே அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளன. தல புராணச் செய்திகளும் அங்கங்கே குறிப்பிடப்பட்டுள்ளன. திரிசிரபுரம், வரகனேரி வித்துவான் சோ. வீரபத்திர பிள்ளை, கோயம்புத்தூர் அ. கந்தசாமிப் பிள்ளை, திருப்பேரூர் இராமசாமி சிவாச்சாரியார், திருப்பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடாலயம் சிதம்பர மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் ஆகியோர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 340/1916/II.

O31,1

### திருஞானசம்பந்தக் கவிராயர், வி., இராமனுதபுரம்

1426. i. அங்காள பரமேச்வரி ஏனாதிக் கோட்டைப் பதிற்றுப் பத்தந்தாதி ; ii. ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸ், திருச்சி ; iii. 1917 ; iv. செ. மூ. எ. 16 ; v. 21×14 செ.மீ. , vi. . . . . . . . . ; vii ஏனாதிப் பதியில் விளங்கும் அம்பிகையைக் குறித்து அமைந்த புகழ்மாலை. பத்துப் பாடல்களுக்கு ஒரு முறை சந்தம் வேறுபட அமைந்த பாடல்களைக் கொண்டது ; அந்தாதித் தொடையாய் அமைந்தது. திரிசிரபுரம், உறந்தையம்பதி சையதிமாம் ஸாஹிப் என்பார் இதற்குச் சாற்றுக் கவி பாடியுள்ளார். viii. 896/1917/I.

O31,1

முத்தைய பிள்ளை, கெ.எம்., மதுரை

1427. i. கருப்பண்ணசுவாமி பதிற்றுப்பத்தந்தாதி: முதற் பதிப்பு; ii. கெ. எம். முத்தைய பிள்ளை, சென்னை; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. ஜூலை, 1918; iv. செ. மூ.எ. 100+1; v. 21×14 செ.மீ.; vi.........; vii. கருப்பண்ணசுவாமி மீது பாடப்பெற்ற பக்திப்பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் தாலூகா கண்டற மாணிக்கத்தைச் சேர்ந்த வைசிய குல திலகர் ஸ்ரீ. கு. கறுப்பன் செட்டியாரவர்கள் விருப்பத்திற்கிணங்க மேற்படி தாலூகா கத்தப்பட்டெனறும் திருப்பதியில் ஆன்றோரால் தமது குல தெய்வமாகக் கொண்டாடி வந்த கருப்பண்ணசாமி மீது மதுரை சேதுபதி உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் கே. எம். முத்தைய பிள்ளையவர்களால் பாடப்பெற்றது. பாடல்கள் இனிமையும் எளிமையும் எய்ந்து படிப்பவருக்குப் பக்திப் பரவசத்தைத் தரும் தகையன. viii. 430/1918/III.

O31,1

அம்மானை

பெருமாள் பிள்ளை, ஆ.,திரிசிரபுரம்

1428. i. திருமுருகரம்மானை; ii. இ. ரா. பொன்னுசாமிப் பிள்ளை தஞ்சை; விஸ்வகுலோத்தாரண பிரஸ், சென்னை; iii. 1916; iv. செ. மூ. எ. 20; v. 17×11 செ.மீ.; vi. 0–0–3; vii. திருப்போரூர் பதியில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானைத் துதிக்கும் தோத்திரமாலை. பெண்கள் மூவர் கூடி விளையாடும் அம்மானையாட்டத்திற்கு ஏற்ப அமைந்த பாடல்களுடன் கூடியது. திருவாசகத்துள் வரும் அம்மானைப் பாடல்களைப் போன்று இதுவும் அமைந்துள்ளது. viii. 1040/1916/I.

O31,1

அலங்காரம்

அருணகிரிநாதர்

1429. i. கந்தரலங்காரம்—மூலமும் உரையும்: முதற் பதிப்பு; ii. எஸ். சிவசங்கரன் செட்டி, சென்னை; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை: iii. நவம்பர், 1916; iv. செ. மூ. உ. எ. 1+100+6; v. 16×12 செ.மீ.; vi. 0–5–0; vii. முருகப் பெருமானின்மீது பக்தியுடன் அழகாகப் பாடப் பட்ட பாடல்களும் அவைகளுக்குரிய உரைகளும் இந்நூலில் உள்ளன. காஞ்சிபுரம் இராமானந்தயோகி இந்நூற்கு உரை வகுத்துள்ளார். பதவுரையும் விசேட உரையும் தரப் பட்டுள்ளன. சில பிரதிகளில் அதிகமாகக் காணப்பட்ட ஆறு பாடல்கள் நூலிறுதியில் தனிப்படக் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1013/1916/IV.

O31,1

1430. i. கந்தரலங்காரம் : புதிய பதிப்பு ; ii. பாலசுப்ரமண்யம் கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1918 ; iv. செ. மூ. ப. 61 ; v. 12×8 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. பால சரஸ்வதி—தேவ குஞ்சரி அம்மாள் இயற்றிய திருச் செந்தில் வெண்பா மாலையிலிருந்து திரட்டிய சில பாடல் களும் ஈற்றில் இடம் பெறுகின்றன. viii. 174/1918/I.

O31,1

**சாம்பமூர்த்தி அய்யர், அயன்தத்தனூர்**

1431. i. லீ துரையவர்கள் ஜமாபந்தி அலங்காரம் : முதற் பதிப்பு ; ii. சாம்பமூர்த்தி அய்யர் ; பிரம்மானந்த அச்சுக்கூடம், திருவாதி ; iii. ஜூலை, 1920 ; iv. செ. மூ. ப. 23 ; v. 21×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இது திருச்சி கலெக்டர் லீ துரையவர்களால் உடையார்பாளையம் தாலூகாவில் 1329-ம் பசலி ஜமாபந்தி நடத்திய தணிக்கைச் சிறப் பென்னும் ஜமாபந்தி அலங்காரம். viii. 178/1920/III.

O31,1

## அனுபூதி

**அருணகிரிநாதர்**

1432. i. கந்தரனுபூதி : முதற் பதிப்பு ; ii. ஆர். எஸ். சுப்பிரமணிய பிள்ளை, சைதாப்பேட்டை ; சச்சிதானந்த அச்சியந்திர சாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1918 ; iv. செ. மூ. உ.எ. 105 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. அருணகிரிநாதர் அருளிச் செய்த கந்தரனுபூதி (105) நூற்றைந்து பாடல்களும் அதற்குரிய தெளிவான உரை யும் ஆசிரியர் சரித்திரமும் பூசைச் சக்கரங்களும் சுப்பிர மணியக் கடவுளின் படமும், இப்புத்தகத்தில் அடங்கியுள்ளன. கந்தரனுபூதி என்னும் இந்நூலில் காணப்படும் நூற்றைந்து செய்யுடகளில் 51 மட்டும் அருணகிரிநாதரால் பாடப் பெற்றன வென்றும் எஞ்சியன பிறரால் பாடப்பெற்று, பின்னர் இணைக்கப்பட்டன என்றும் தெரிய வருகிறது. viii. 309/1918/IV.

O31,1

## ஆசிரிய விருத்தம்

1433. i. ஆறுமுக சுவாமி பேரில் அலங்கார ஆசிரிய விருத்தம் : புதிய பதிப்பு ; ii. சங்க நிதி விளக்க அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1916 ; iv. செ. மூ. எ. 6+11 ; v. 13×11 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. ஆறுமுகக் கடவுள் என்று அழைக் கப்பட்டு வழிபாடு செய்யப்படுகின்ற சுப்பிரமணியக் கடவுள்

மீது பாடப்பெற்ற பக்திப் பாடல்களைக் கொண்டது, இந்நூலாகும். 'பழனி ஆனந்தமான முருகா' என முடியும் ஆறு விருத்தப் பாடல்களும், 'காத்து ரட்சிப்பாய்' என வேண்டும் பதிகப் பாடல்களும் இதன் கண் உள. viii. 1195/1916/III.

031,1

1434. i. ஆறுமுக சுவாமி பேரில் அலங்கார ஆசிரிய விருத்தம்: முதற் பதிப்பு; ii. டி. முத்துசாமிப் பிள்ளை, பழநி; கண்ண பிரான் விலாச பிரஸ், பழநி; iii. மார்ச், 1919; iv. செ. மூ. எ. 11; v. 13×10 செ.மீ.; vi. 0–0–6. vii......; viii. 1111/1919/III.

031,1

1435. i. காமாட்சியம்மன் ஆசிரிய விருத்தம்; ii. பகடால முனிரத்தினம் நாயுடு, இராயவேலூர்; கிருஷ்ண விலாச அச்சுக் கூடம், இராயவேலூர்; iii. 1916; iv. செ. மூ. எ. 1+11; v. 15×11 செ.மீ.; vi. ..........; vii. காஞ்சிபுரத்தில் கருணையுடன் விளங்கும் காமாட்சியம்மையைப் பற்றிய துதிநூல். 'அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி உமையே' என்பதை ஒவ்வொரு பாடலும் மகுடமாகக் கொண்டுள்ளது. viii. 129/1916/IV.

031,1

குமரய்ய நாடார்

1436. i. எறல் மாநகர் சேர்மன் அருணசல சுவாமி ஆசிரிய விருத்தம்: முதற் பதிப்பு; ii. கொ. சி. பச்சைய நாடார், விருதுப் பட்டி; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுப் பட்டி; iii. ஆகஸ்ட், 1918; iv. செ. மூ. எ. 1+11; v. 13×11 செ.மீ.; vi. 0–0–6; vii. எறல் மாநகர் சேர்மன் அருணசல சுவாமி மீது பாடப் பெற்ற ஆசிரிய விருத்தம் இது. தூத்துக் குடியில் வசித்து வரும் அருப்புக்கோட்டை மேகன்வடி முத்துக்கருப்ப நாடார் அவர்கள் குமாரர் சிவநாராயண நாடார் கேட்டுக் கொண்டபடி குமரய்ய நாடாரால் இயற்றப் பெற்றதாகத் தெரிகிறது. அருணசல குருவின் பெருமைகள் பலவற்றையும் இந்நூல் சிறப்பித்து உரைக்கின்றது. viii. 594/1918/III.

031,1

சுப்பிரமணிய சுவாமிகள், திருவாவடுதுறை

1437. i. சுப்பிரமணியர் விருத்தம்: முதற் பதிப்பு; ii. பி. முத்து சாமி பிள்ளை, பழநி; கண்ணபிரான் விலாசம் பிரஸ், பழநி; iii. ஜூலை, 1919; iv. செ. மூ. எ. 12; v. 13×11 செ.மீ.;

vi. 0–0–6 ; vii. இது சுப்பிரமணியரைக் குறித்துப் பாடப் பெற்ற பக்திப்பாடல்களைக் கொண்டது. பன்னிரண்டு பாடல்களைக் கொண்டுள்ளது. 'சதுர்மறைகளே தந்த பரம குருவாய் வந்த சரவண பவாநந்தனே' என்று ஒவ்வொரு பாடலும் முடிவுறுகின்றது. viii. 1109/1919/III.

O31,1

சுப்பையா வர்மா, லாவணி

1438. i. எட்டுக்குடி முருகர் பேரில் திருப்பதிக ஆசிரிய விருத்தம்: ii. வி. எஸ். பாப்புதாசர்; விக்டோரியா அச்சுக்கூடம், திருவாரூர்; iii. 1918 ; iv. செ. மூ. எ. 1+11+1 ; v. 14×12 செ.மீ. ; vi. .......... ; vii. எட்டுக்குடியில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானைப் புகழ்ந்து பாடிய திருப்பதிக் ஆசிரிய விருத்தங்களைக் கொண்டது, இப்புத்தகமாகும். 'மட்டுவளர் பொழில் சூழும் எட்டு குடிதனில் வாழும் மன்ற சுப்ரமண்ய குருவே' என்னும் முடிவினை இப்பதிகப் பாடல்கள் கொண்டுள்ளன. viii. 548/1919/I.

O31,1

சேவகப்பெருமாள் உபாத்தியாயர்

1439. i. சிங்கம்புணரி ஸ்ரீ சேவக மூர்த்தி எண்சீர் ஆசிரிய விருத்தம்; ii. எஸ். வி. ஆர். அண்ணாமலை செட்டி, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை ; iii. ஜூன், 1920 ; iv. செ. மூ. ப. 15 ; v. 15×11 செ.மீ ; vi. 0–0–6 ; vii. இராமநாதபுரம் மாவட்டம், திருப்பத்தூர் தாலுகா சிங்கம்புணரி சேவக மூர்த்தியைப் போற்றி எழுதப் பெற்ற எண்சீர் ஆசிரிய விருத்தங்கள் இதில் அடங்கியுள்ளன. சிங்கம்புணரி சே. வு. ரா. அண்ணாமலை செட்டியார், சொ. சி. சேவகப்பெருமாள் ஆகிய இவர்களது வேண்டுகோட்படி இந்நூல் இயற்றப்பட்டதாகவும், பொருளுதவி செய்து இந்நூலை அச்சிட்டதாகவும் தெரிகிறது. viii. 854/1920/II.

O31,1

1440. i. மாரியம்மன் பேரில் ஆசிரிய விருத்தம்: முதற் பதிப்பு ; ii. பி. நாராயணசாமிப் பிள்ளை பிரதர், சென்னை ; நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை, சென்னை ; iii. மார்ச், 1918 ; iv. செ. மூ. எ. 10 ; v. 13×11 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. இது வீராம்பட்டினத்தில் கோயில் கொண்டுள்ள மாரியம்மன் மீது பாடப்பெற்ற ஆசிரிய விருத்தங்களாலாய தோத்திரப் பாமாலை. பத்துப் பாடல்களை உடைமையால் இதனைப் பதிகம் எனவும் அழைக்கலாம். viii. 1116/1918/III.

O31,1

1441. i. வடிவுடையம்மன் விருத்தம்: முதற் பதிப்பு; ii. நாராயணசாமி பிள்ளையும் அவர் சகோதரரும், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை, சென்னை; iii. ஜூன், 1916; iv. செ. மூ. எ. 11; v. 13×11 செ.மீ.; vi. 0–0–3; vii. திருவொற்றியூரில் வழிபாடு செய்யப்பட்டு வருகின்ற வடிவுடையம்மன் என்னும் தெய்வத்தின் மீது பக்தியுடன் பாடப்பெற்ற விருத்தப் பாக்களை உடையதாகும் இந்நூல். இப்பதிகப் பாடல் ஒவ்வொன்றும் "தங்கமல நாதர் சடை கங்கையுருவான கொடி திங்களொளி வானவடிவே" என்னும் விளித் தொடருடன் முடிவுறுகின்றது. viii. 691/1919/IV.

O31,1

1442. i. வடிவுடையம்மன் ஆசிரிய விருத்தம்: முதற் பதிப்பு; ii. பி. எஸ். இராமாநுஜ அய்யங்கார், திருவொற்றியூர்; ஸ்ரீராமானுஜ அச்சியந்திரசாலை, சென்னை; iii. மே, 1920; vi. செ. மூ. எ. 11; v. 15×12 செ.மீ.; vi. 0–0–3; vii.......; viii. 270/1920/IV.

O31,1

**வீரமுத்துப் பிள்ளை, க., தஞ்சாவூர்**

1443. i. தஞ்சை மாநகரம் வடக்கு வாயில் பாலதண்டாயுதபாணிக் கடவுள் பேரில் ஆசிரிய விருத்தம்: முதற் பதிப்பு; ii. வி. நாராயணசாமி பிள்ளை, தஞ்சாவூர்; ஸ்ரீகிருஷ்ணவிலாசம் பிரஸ், தஞ்சை, iii. டிசம்பர், 1916; iv. செ. மூ. ப. 16; v. 13×11 செ.மீ.; vi. 0–0–6; vii. தஞ்சை மாநகரம் வடக்கு வாயில் பாலதண்டாயுதபாணிக் கடவுள் பேரில் பாடப் பெற்ற ஆசிரிய விருத்தப் பாக்களைக் கொண்டது. மேலும் செந்திமாலை, கதிர்காம ஆசிரிய விருத்தம், பழனிவேலன் பேரில் பன்னிரண்டு கை ஆசிரிய விருத்தம் என்னும் பாடற் பகுதிகளும் உள. இவையும் முருகன் புகழ் பேசுவனவே. viii. 800/1916/IV.

O31,1

## ஆற்றுப் படை

**சிறிய இரத்தின கவிராயர், திருக்குருகூர்**

1444. i. புலவராற்றுப் படை: இரண்டாம் பதிப்பு; ii. நாராயணையங்கார்; தமிழ்ச் சங்கம் முத்திராசாலை, மதுரை; iii. ஜூலை, 1918; iv. செ. மூ. எ. 154; v. 22×15 செ.மீ.; vi. 0–3–0; vii. இருநூறு ஆண்டுகளுக்குமுன் கல்வியும் செல்வமும் ஒருங்கெய்தி விளங்கிய வள்ளல் இரசை வடமலையப்ப பிள்ளை அவர்கள் பேரில் இப்புலவராற்றுப் படை பாடப் பட்டுள்ளது. இது சொற்சுவை, பொருட்சுவை பெரிதுடைத்தாய் படிப்போர்க்குப் பேரானந்தம் பயப்பதாக இருக்கின்றது.

இது சேது சமஸ்தான வித்வான் ரா. ராகவையங்கார் அவர்களால் பரிசோதித்து அச்சிடப் பெற்ற பிரதிக்கிணங்க அச்சிடப்பட்டது. இந்நூலாசிரியர் மாறனலங்கார ஆசிரியரின் வழித்தோன்றல். இவ்வாற்றுப்படையிற் பாட்டுடைத் தலைவர் மச்ச புராணம், நீடூர்த்தல புராணம் முதலியவற்றின் ஆசிரியரும் இவரே. viii. 431/1918/III.

O31,1

**பழனிவேற் பிள்ளை, தஞ்சை**

1445. i. வசமுருகாற்றுப் படை: முதற் பதிப்பு; ii. பழனிவேற் பிள்ளை, தஞ்சை; தாரா அச்சுக் கூடம், தஞ்சை; iii. ஜூன், 1918; iv. செ. மூ. எ. 19; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0; vii. முருகப்பெருமான் கோயில் கொண்டுள்ள ஆறுபடை வீடுகளைப் பற்றி இதில் புகழ்ந்து பாடப் பெற்றுள்ளது. மு. வேங்கடசாமி நாட்டார், வெண்ணை மங்கலம், தமிழ் வித்வான் மு. தண்டாயுத பாணிக் காடவராயர் முதலியோர் சாத்துக் கவிகள் தந்துள்ளனர். இந்நூலாசிரியர் மதுரைத் தமிழ்ச் சங்க வித்வான்களில் ஒருவரா வர். இவரை இரும்புக்கடை முருகதாசன் என்றும் அழைப்பர். இப்பாடல்கள் நக்கீரரின் திருமுருகாற்றுப படையின் போக்கை ஒத்து அமைந்துள்ளன. viii. 132/1918/III.

O31,1

## ஆனந்தக்களிப்பு

**இராமசாமி பத்தர், தா., நரசிங்க நத்தம்**

1446. i. சேழமலை செல்வக் கரும்பையன் ஆனந்தக் களிப்பு: முதற் பதிப்பு; ii. கே. வெங்கட்ராமய்யர், மாயவரம்; சரஸ்வதி விலாஸ பிரஸ், மாயவரம்; iii. ஜூன், 1919; iv. செ.மூ.ப.6; v. 20×14 செ.மீ.; vi. 0—1—0; vii. இதில் சேழமலையில் விளங்கும் செல்வக் கரும்பையனைப் பற்றிப் பாடப்பெற்ற எண்சீர் விருத்தம், நொண்டிச் சிந்து கும்மிப்பாடல்கள் அடங்கியுள்ளன. viii. 935/1919/II.

O31,1

1447. i. **பழனியாண்டவர் மீது வழிநடை நூதன ஆனந்தக் களிப்பு:** முதற் பதிப்பு; ii. கே. என். மாரிமுத்து செட்டியார், பழனி; ஸ்ரீகண்ணபிரான் விலாசம் பிரஸ், பழனி; iii. ஆகஸ்ட், 1919; iv. செ.மூ.எ. 1+94+1; v. 21×14 செ.மீ.; vi. 0—2—0; vii. பழனியாண்டவரைக் குறித்துப் பாடப்பெற்ற வழி நடைப் பதப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இதன் ஆசிரியர் பெயர் தெரிய வரவில்லை. ஏடுகளிலிருந்ததை எடுத்து அச்சிட்டு வெளிப்படுத்தியவர் பழனி கே. என். மாரிமுத்துச் செட்டியா ராவர். 'மண்ணவர் யேகும் வரை பாடுதற்கு யேடுகளில்

மறைந்ததை யெடுத்து வெளி, மறுவற்ற மாரிமுத்து புதுக்கி விடப் பிழையிதில் மன்னித்த லறிவோர் கடமை' எனவரும் நூலிறுதிப் பாயிரப் பாடலாலும் இச்செய்தி தெரியவரும். viii. 685/1919/III.

O31,1

**மஸ்தான் சாஹிப், குணங்குடி**

**1448.** i. ஆனந்தக்களிப்பு: முதற் பதிப்பு; ii. வா.மூ. யூசபு லெப்பை, கோட்டாறு; அமெரிக்கன் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. 1917; iv. செ.மூ.ப. 16; v. 13×11 செ.மீ. vi. ..........; vii. பல பொதுவான நெறிகளைப் பற்றி எழுதப் பெற்றது, இச்சிறு நூல். சில கீர்த்தனப் பாடல்களும் இறுதியில் உள. viii. 137/1917/II.

O31,1

## இரட்டைமணி மாலை

**இரத்னசபாபதி செட்டியார், பழவை**

**1449.** i. அறுபத்து மூவர் இரட்டைமணி மாலை; முதற் பதிப்பு; ii. எஸ். மூர்த்தி அண்டு கம்பெனி, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. மார்ச், 1919; iv. செ.மூ.ப. 8; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. இஃது அறுபத்து மூவர்களான சிவ பக்தர்களைப் புகழ்ந்து பாடப்பெற்ற இரட்டைமணி மாலை ஆகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய திருத்தொண்டர் தொகையும், நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியும், சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராண மும் குறிப்பிடும் சிவனடியார்களை மேற்படி நூல்களில் குறிப்பிட்ட முறைப்படி தருவது. இந்நூலுள்ளும் ஆசிரியர் ஒழுங்குறப் பாடியிருக்கிறார். வித்யாவதானம், பிரம்பை பொன்னுவேற் பிள்ளை அவர்கள் பாடிய சிறப்புப் பாயிரம் இந்நூற்குண்டு. viii. 1226/1919/I.

O31,1

**இராமநாதையர்**

**1450.** i. திருநல்லூர் இரட்டைமணி மாலை (ஸ்ரீகல்யாண சுந்திரர் பதிகம், ஆண்டார் பதிகம்): முதற் பதிப்பு; ii. சபாபதி பிள்ளை, வேலூர்; ஸ்ரீகிருஷ்ணவிலாஸ அச்சுக்கூடம், கும்ப கோணம்; iii. ஆகஸ்ட், 1920; iv. செ. மூ. எ. 7+20; v. 23×15 செ.மீ.; vi.........; vii. திருநல்லூரில் விளங்கும் கல்யாணசுந்தரர், ஆண்டார் ஆகிய இருவரைப் பற்றியும் போற்றிப் பாடப் பெற்ற துதிப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இரு பதிகப் பாடல்களும் இதில் காணப்படுகின்றன. viii. 582/1920/III.

O31,1

**கிருஷ்ணமாசாரியர், பி. ஆர்.**

1451. i. இரட்டை மணிமாலை (நவமணிமாலை); ii. தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை; iii. 1920; iv. செ.மூ.எ. 2+20; v. 21×14 செ.மீ.; vi......; vii. ஆண்டிப்பட்டி ஸமஸ்தானாதிபதி பெத்தாச்சிச் செட்டியார் அவர்களின் பெருமை பேசுவது இந்நூல். viii. 668/1920/IV.

O31,1

**குப்புசாமி ஐயர், தி., இராஜமன்னார்குடி**

i. திருக்கண்ணப்ப நாயனார் இரட்டை மணி மாலை (தொ. எ. 1452 பார்க்க); ii. தி. குப்புசாமி ஐயர், இராஜமன்னார்குடி; சம்பக லக்ஷ்மி விலாச அச்சுக்கூடம், மன்னார்குடி; iii. 1918; iv. செ.மூ.எ. 20; v.........; vi.........; vii. சிவத் தொண்டரில் மிகக் கீர்த்திவாய்ந்த கண்ணப்ப நாயனாரைக் குறித்த துதிப்பாமாலை. viii. 735/1919/I.

O31,1

1452. i. மதுரை ஸ்ரீமீனாக்ஷியம்மை இரட்டைமணிமாலை [திருக் கண்ணப்ப நாயனார் இரட்டை மணி மாலை]; ii. தி. குப்புசாமி அய்யர், இராஜமன்னார்குடி; சம்பகலெக்ஷுமி விலாச அச்சுக்கூடம், மன்னார்குடி; iii. டிசம்பர், 1918; iv. செ.மூ.எ. 20; v. 21×14 செ.மீ.; vi.........; vii. மதுரை மீனாட்சியம்மன் மீது பாடப் பெற்ற பக்திப் பாடல்கள். viii. 735/1919/I.

O31,1

**நமச்சிவாய சுப்பராய முதலியார், பாலூர்**

1453. i. கண்ணப்ப தேவர் இரட்டை மணி மாலை; ii. நமசிவாய சுப்பராய முதலியார், பாலூர்; பச்சையப்ப அச்சியந்திரசாலை, வேலூர்; iii. எப்ரல், 1918; iv. செ.மூ.எ. 4+20+1; v. 16×13 செ.மீ.; vi. 0—2—0; vii. திருக்காளத்தியிலுள்ள கண்ணப்பத் தேவரைப் பற்றிப் புகழ்ந்து பாடிய பாமாலை. இரட்டை மணி மாலை யென்பது வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் மாறிவர அந்தாதித் தொடையால் தொகுக்கப்படுவது. பிங்கள வருடம், மாசி 28, சோமவாரம், மகா சிவராத்திரி, இரவு 8 மணிக்குத் திருக்காளத்தீசர் சந்நிதியில் தேவகோட்டை மெ. அருட. நா. இராமநாதஞ் செட்டியாரால் அமைக்கப்பட்ட பூமாலை மண்டபத்தில் அன்பரிடையே அரங்கேற்றப்பட்டது. சிவ ஸ்ரீகலியாண சுந்தர எதீந்திர சுவாமிகள், மணி. திருநாவுக்கரசு முதலியார், பா. வேலு தேசிகர் முதலியோர் தந்த சாற்றுக் கவிகள் நூல் முகப்பில் உள்ளன. viii. 351/1918/II.

O31,1

வங்கடாசலம் பிள்ளை, சிதம்பரம்

1454. i. குமரவேளிரட்டை மணிமாலை : முதற் பதிப்பு; ii. எஸ். சுப்பிரமணிய முதலி, சிதம்பரம்; விநாயக சுந்தர விலாசம் பிரஸ், சிதம்பரம்; iii. ஏப்ரல், 1917; iv. செ.மூ.எ. 20; v. 21×14 செ.மீ.; vi.......; vii. சீர்காழியின் வடபால் எழுந்தருளியிருக்கின்ற குமரவேளைக் குறித்துப் பாடப் பெற்ற இரட்டை மணிமாலை. வெண்பாவும், கலித்துறையுமாக இருபது பாடல்கள் அந்தாதியாக அமைந்த பிரபந்தம். காழி முருகப் பெருமான் மீது அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் பாடலும் தரப்பட்டிருக்கிறது. viii. 462/1917/II.

O31,1

உலா

சுப்பிரமணிய கவிராஜ மூர்த்திகள்

1455. i. திருக்கடவூருலா : முதற் பதிப்பு ; ii. அ. சாமிநாத ஓதுவார் மூர்த்தி, திருக்கடவூர் ; மஹாலட்சுமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1917 ; iv. செ. மூ. எ. 5+458+1 ; v. 21×14 செ.மீ.; vi. 1-2-0 ; vii. திருக்கடவூரில் வழிபடுகின்ற சிவனைக் குறித்துப் பாடப்பெற்ற உலாப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இதற்குத் தரங்கம்பாடி ப. சு. முத்துத்தாண்டவராய பிள்ளை, திருப்பனந்தாள் சிதம்பர சுவாமிகள் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். தல விசேடம், உலாவைக் கண்ட பேதை, பெதும்பை முதலிய மகளிரின் நிலைமைகள் முதலியவற்றை விவரிப்பது. viii. 334/1917/III.

O31,1

ஊசல்

அன்னம்மாள், பை.

1456. i. திருக்கடன் மல்லைத் தாயார் ஊசற் பிரபந்தம்: (இலக்குமி வெண்பா வந்தாதி): முதற் பதிப்பு; ii. கந்தசாமி, கினியா நகர் ; முரஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1917 ; iv. செ. மூ. ப. 8 ; v. 22×14 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. இந்நூலில் 'திருக்கடன் மல்லைத்தாயார் ஊசற் பிரபந்தம்' முதலில் உள்ளது. இதனோடு திருக்கடன்மல்லை இலக்குமி வெண்பா வந்தாதி என்பதும் அடங்கியுள்ளது. இருபகுதியிலும் இலட்சுமியைப் பற்றிப் புகழ்ந்து எழுதப் பட்டுள்ளது. வல்லை சண்முகசுந்தர முதலியார், பண்டிதை கிருஷ்ணவேணி அம்மாள் முதலியோர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். ஊசல் பிரபந்தம் பாடல்கள் 'ஆடிரூசல்' என்று வேண்டும் வகையில் முடிவுறுகின்றன. viii. 349/1917/II.

O31,1

**வயித்திதை சர்மா, இராம.**

**1457.** i. மாதர் கீதம்: முதற் பதிப்பு; ii. என். ஆர். கிருஷ்ணசாமி ஐயர், நாகப்பட்டினம்; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டினம்; iii. மே, 1919; iv. செ. மூ. ப. 15; v. 22×15 செ. மீ.; vi. 0–2–0; vii. இது பெண்களுக்குரிய நலுங்கு, ஊஞ்சல், பத்தியம், சம்பந்திப்பாட்டு முதலிய பாடல்களைக் கொண்டுள்ளது. இப்பாட்ல்கள் திருமணக் காலத்தில் பாடப்படுவனவாம். ஈசன், கணேசன், முதலிய தெய்வங்களைக் குறித்த துதிப் பாடல்களும் சில ஈற்றில் இடம் பெற்றுள்ளன. viii. 525/1919/II.

O31,1

i. ஸ்ரீரங்கநாயகர் திரு ஊசல் (தொ. எ. 1647 பார்க்க); ii. நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை, சென்னை; iii. நவம்பர், 1917; iv. செ. மூ. எ. 11; v........; vi........; vii. இது திருவரங்கத்தில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள அரங்கப் பெருமான் மீது பாடப்பெற்ற திரு ஊசல். அரங்கப்பெருமானை ஊஞ்சலிலே எழுந்தருளி ஆடியருளுமாறு வேண்டும் முறையில் பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டது. எனவே, இப்பாடல்கள் 'ஆடிரூசல்' எனும் வேண்டுதலுடன் முடிவு பெறுகின்றன. viii. 1029/1918/III.

O31,1

**எச்சரிக்கை**

**வேதாசல முதலியார், க.**

**1458.** i. திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிப்பெருமாள் தசாவதார எச்சரிக்கை; ii. செங்கல்வராய நாயகர் ஆர்பனேஜ் அச்சியந்திரசாலை; iii. 1916; iv. செ. மூ. உ. எ. 15; v. 14×11 செ. மீ., vi. 0–1–0; vii. திருவல்லிக்கேணியில் கோயில் கொண்டருளும் பார்த்தசாரதிப் பெருமாள் மேல் அமைந்த துதி. ஒவ்வொரு பாடலிலும் 'எச்சரிக்கை' எனக்கூறி முடிக்கிறார். இது கட்டியம் கூறுவதுபோலக் கடவுள் திருமுன்னர்க் கூறப்படுவதோர் வார்த்தை. இது 'எச்சரிக்கைப்பாட்டு' என்று சொல்லப்பெறும். viii. 55/1916/IV.

O31,1

**ஏசல்**

**இராமசுவாமி ஐயங்கார், சி., பாலையூர்**

**1459.** i. வள்ளிக்கும் தெய்வானைக்கும் ஏசல்: முதற் பதிப்பு; ii. அ. மாமுண்டியா பிள்ளை, திருச்சி, சுப்பிரமணிய விலாசம் பிரஸ், தூத்துக்குடி; iii. ஜூன், 1918; iv. செ. மூ. ப. 7; v. 21×14 செ. மீ. vi. 0–1–0 vii. முருகப்

பெருமான் தேவியாராகிய வள்ளிக்கும் தெய்வானைக்கும் நடந்த ஏசலைப் பற்றிப் பாடல்கள் மூலமாக விளக்கப் பட்டுள்ளது. காவடிச்சிந்து வர்ண மெட்டில் இந்நூல் அமைந்துள்ளது. viii. 123/1918/III.

O31,1

## ஏற்றப் பாட்டு

1460. i. விராட பர்வ ஏற்றப் பாட்டு : முதற் பதிப்பு ; ii. என். நாராயணசாமி பிள்ளை & பிரதர், சென்னை ; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1918 ; iv. செ. மூ. எ. 16 ; v. 13×11 செ. மீ. ; vi. 0–0–6 ; vii. இப்புத்தகத்தில் மகாபாரதத்தில் வருகின்ற விராட பர்வதக் கதையினை ஏற்றம் இறைப்பவர்கள் பாடுவதற்கேற்ப ஏற்றப்பாட்டாக இயற்றப்பட்டுள்ளது. படங்களுடன் கூடியது 'செந் நெலுக்குப் பையசல மிறைத்துப் பாங்குடனே உய்ய இந்த ஏற்றப் பாட்டைப் பாடி' எனக் காப்புச் செய்யுள் தரும் குறிப்பும் இங்குக் கவனிக்கத் தக்கது. viii. 1120/1918/III

O31,1

## ஒப்பாரி

### புகழேந்திப் புலவர்

1461. i. மாதர்கள் ஒப்பாரிச் கண்ணி : திருத்திய இரண்டாம் பதிப்பு ; பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. செ. மூ. ப. 47 ; v. 13×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இறந்தவர்களை எண்ணிப் புலம்புகின்ற ஒப்பாரிக் கண்ணியாகும் இந்நூல். இதனைப் புகழேந்திப் புலவர் பாடினார் என்பதற்காதாரம் எதுவும் இல்லை. viii 340/1920/IV.

O31,1

## கட்டியம்

### எம்பார்ஜியர் ஸ்வாமிகள், உ. வே. ம.

1462. i. உடையவர் திருமஞ்சனக் கட்டியம்: முதற் பதிப்பு: ii. வி. சென்னகேசவலு நாயுடு, சென்னை ; ஸ்ரீநிகேதன அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1917 ; iv. செ. மூ. ப. 23 ; v. 12×9 செ. மீ. ; vi. 0–1–0, vii. வசிஷ்டாத் வைதத்தின் ஆசிரியரான ராமானுஜரைப் பற்றிப் பாடப் பெற்ற பாடல்கள் இதில் உள்ளன. உடையவர் வடிவழகில் அடியார்களின் ஈடுபாடும், உடையவர் திருமஞ்சனம் பற்றிக் கூறும் கட்டியவுரைகளும் உள்ளன. கட்டியப் பகுதி 'எச்சரிக்கை' என்றும் 'பராக்' என்றும் கூறி முடிக்கப்பட்டிருக்கின்றன. viii.661/1917/II.

O31,1

கண்டசுத்தி

i. சங்கப்புலவர் கண்டசுத்தி (தொ. எ. 1739 பார்க்க) ii. நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1919; iv. செ. மு. எ. 9; v.......; vi.......; vii. கண்டசுத்தி யாவது ஆசுகவி பாடும்வல்லமையாம். குலோத்துங்கனை முன்னிலைப்படுத்தியும், அகப்பொருட்டுறையாகவும் சில பாடல்கள் அமைந்துள. இறுதிப் பாடல் தமிழுக்கு உரியரல்லாரைக் குறித்துக் கூறுகிறது. viii. 694/1919/IV.

O31,1

கண்ணி

இரத்தினம்ஸாமி, எம்., திருவாரூர்

1463. i. வள்ளிநாயகி திருமணப் பதிகம் (ஸ்ரீசுப்பிரமணியர் ஸ்தோத்திர மணிமாலை); ii. சி. எஸ். இராதாகிருஷ்ணய்யர்; ஆரியன் அச்சுக்கூடம், குடந்தை; iii. ஜூன், 1917; iv. செ. மூ. எ. 19; v. 10×7 செ. மீ.; vi. 0-2-0; vii. சுப்ரமணியர் வள்ளிநாயகியை மணந்ததை விளக்கும் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. நூற்பெயரில் பதிகம் எனக் காணப்படினும் நூல் கண்ணி முறைப் பாடல்களால் அமைந்துள்ளது. இக்கண்ணிகள் எதுகுல காம்போதி இராகம் ஏகதாளத்தில் அமைந்துள. இதனோடு 'ஸ்ரீசுப்பிரமணியர் ஸ்தோத்திர மணிமாலை' என்னும் துதிநூலும் உள்ளது. viii. 1113/1917/III.

O31,1

சோணாசல பாரதி, காஞ்சிபுரம்

1464. i. அண்ணாமலைக் கண்ணி; ii. கே. பொன்னுசாமி முதலியார், காஞ்சிபுரம்; பெருந்தேவி விலாச பிரஸ்; iii. நவம்பர், 1916; iv. செ. மூ. எ. 70; v. 18×11 செ. மீ.; vi. இலவசம்; vii. திருவண்ணாமலையில் விளங்கும் அண்ணாமலையாரைக் குறித்துப் பாடப்பெற்ற பக்திப் பாடல் களைக் கொண்டது. இந்நூல் அண்ணாமலையை முன்னிலைப் படுத்திப் பாடும் கண்ணிமுறைப் பாடல்களைக் கொண்டது. viii. 214/1917/I.

O31,1

நடேச பத்தர், தி.,நாகைவெளிப்பாளையம்

1465. i. மாரியம்மன் தோத்திரம்: முதற் பதிப்பு; ii. நீலலோசனி அச்சியந்திரசாலை, நாகப்பட்டினம்; iii. பிப்ரவரி, 1917; iv. செ. மூ. ப. 16; v. 18×11 செ. மீ.; vi. 0-2-0; vii. நெட்டாலில் டர்பன் நகரைச் சார்ந்த ஸ்பிங்கோவில்

எழுந்தருளியிருக்கும் மாரியம்மனைத் துதித்துப் பாடப்பெற்றது. கண்ணி முறைப் பாடல்கள் முற்பகுதியில் உள. பின்னர், பஞ்ச ரெத்தினப் பாமாலை ஒன்றும், கும்மிப் பாடல்கள் பதினென்றும் உள. நாகை சிங்காரவேலு உபாத்தியாயர் ; ஜே. இராசகோபால் பிள்ளை முதலியோர் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 699/1917/I.

O31,1

மீனாக்ஷிசுந்தர சுவாமிகள்

i. பூரண மணிமாலைக் கண்ணி (தொ. எ. 209 பார்க்க) ; ii. விசேஷசுவாமிகள், அறந்தாங்கி & கே. எ. வடிவேலு செட்டியார் ; சச்சிதாநந்த அச்சுக்கூடம், சென்னை ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 235 ; v........; vi........; vii. 'பூரணமே' என்னும் விளியுடன் முடியும் கண்ணிப் பாடல்களைக் கொண்ட நூல். வாழ்க்கையில் தாம்பட்ட அல்லல்களை ஆண்டவனை நோக்கி முறையிட்டு நற்பேற்றை விழைகிறார், ஆசிரியர். குருவாகி வந்து ஆண்ட குருபரன் பெருமையும் பேசித் துதித்துள்ளார். viii. 8/1916/II.

O31,1

முருகைய நாடார், நாகப்பட்டினம்

1466. i. மாரியம்மன் தோத்திரம்: முதற் பதிப்பு ; ii. முருகய்ய நாடார், நாகப்பட்டினம் ; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டினம் ; iii. எப்ரல், 1917 ; iv. செ. மூ. ப. 8 ; v. 23×15 செ. மீ. ; vi. 0-0-6 ; vii. மாரியம்மனைக் குறித்து எழுதப்பெற்ற தோத்திரப் பாடல்கள் அடங்கியது. கண்ணிமுறையில் அமைந்தது, காவடிச்சிந்து, நொண்டிச்சிந்து சந்தங்களிலும் பாடல்கள் உள. viii. 538/1917/II.

O31,1

விலக்ஷணானந்த சுவாமிகள், தேவாரநகரம்

1467. i. சுவானுபவக் கண்ணிகள் இருநூறு ; ii. விலக்ஷணானந்த சுவாமிகள், திருச்சிராப்பள்ளி ; நடராஜ அச்சுக்கூடம், திருச்சி. ; iii. ஜனவரி, 1918 ; iv. செ. மூ எ. 200 ; v. 13×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. ஆசிரியர் அவ்வப்போது அடைந்த தன்னுடைய அனுபவத்தைக் கண்ணிகள் வடிவில் இதில் தந்துள்ளார். இவ்வகைக் கண்ணிகள் பதினாயிரத்துக்குமேல் உள்ளனவாம். அவற்றினின்றும் எடுத்து வெளியிடப்பட்டனவே இதில் உள்ள இருநூறு கண்ணிகளும். உலகம், உயிர், கடவுள் என்னும் தத்துவங்கள் பேசப்பட்டுள்ளன. viii. 572/1918/I

O31,1

## கலம்பகம்

### தொல்காப்பியத் தேவர்

1468. i. திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் : திருந்திய இரண்டாம் பதிப்பு ; ii. உ. வே. சாமிநாதய்யர், சென்னை ; கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1919 ; iv. செ. மூ. ப. 101 ; v. 18×12 செ. மீ. ; vi. 0–4–0 . vii இந்நூல் திருப்பாதிரிப்புலியூரென்னும் தலத்தில் கோயில் கொண்டெழுந்தருளிய சிவபெருமான் மீது பாடப் பெற்றது. இத்தலம் நடு நாட்டில் உள்ள தேவாரம் பாடப்பெற்ற சிவதலங்களுள் ஒன்று. இத்தலம் ஞான சம்பந்தராலும் திருநாவுக்கரசு சுவாமிகளாலும் பாடப் பெற்ற சிறப்பினை உடையது. இராமச்சந்திராபுரம் நாச்சியப்ப செட்டியாரவர்களாலும், முருகப்ப செட்டியாரவர்களாலும் பொருட் செலவிட்டு வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது. திருப்பாதிரிப்புலியூர்த் தேவாரப் பாடல்களும் முதலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 153/1919/II.

031,1

## கலித்துறை

### கயிலாசம் பிள்ளை, மு., பனையூர்

1469. i. இருக்கன்குடி மாரியம்மன் பேரில் கலித்துறை : [illegible] மு. கயிலாசம் பிள்ளை, பனையூர் ; [illegible] பிரஸ், சாத்தூர் ; iii. 1918 ; iv. செ. மூ. எ. 6+95 ; v. 23×14 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. இதில் இருக்கன்குடியில் விளங்கும் மாரியம்மன் பேரில் பாடப்பெற்ற கலித்துறைப் பாடல்கள் அடங்கியுள்ளன. தேவியின் திருப்புகழைக் கவிஞர் பற்பல வகையாக எடுத்து உரைக்கின்றார். viii. 159/1918/I.

031,1

1470. i. கொடுங்குன்றக் கலித்துறை மாலை : முதற் பதிப்பு ; ii. சேவகப் பெருமாள் ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை ; மதுரை ; iii. செப்டெம்பர், 1920 ; iv செ. மூ. எ. 30 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. பிரான் மலையென்னும் கொடுங்குன்றத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானைப் புகழ்ந்து பாடப்பெற்ற கலித்துறை பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல். இந்நூலாசிரியர் பெயர் உறுதியாய்த் தெரியக்கூடவில்லை என்றும், சிலர் முதலைப் பட்டி வெறிமங்கை பாகப்புலவர் என்று கூறுகின்றனர் என்றும், முகவுரையில் முத்துவருகன் என்பார் குறிப்பிட்டுள்ளார். viii. 23/1920/IV.

031,1

சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்

i. பெரிய நாயகியம்மை கட்டளைக் கலித்துறை (தொ. எ. 1682 பார்க்க) ; ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ. ; மனோன்மணி விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1918 ; iv. செ. மூ. எ. 19 ; v. ....; vi.......; vii. (விருத்தகிரி) பழமலை அல்லது முதுகுன்றம் என்ற தலத்தில் கோயில் கொண்டுள்ள பெரிய நாயகியம்மையைப்பற்றி பாடப் பெற்ற 19 கட்டளைக் கலித்துறைகளால் ஆகிய பாமாலை. viii. 1064/1918/III.

O31,1

கவசம்

i. சக்தி கவசம் (தொ. எ. 1475 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. அ. மகாதேவ செட்டியார், அம்பாள்பேட்டை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1916; iv. செ. மூ. உ. எ. 12; v. ....; vi. ....; vii. தேவியின் அருட்காவலை வேண்டும் பாசுரங்களைக் கொண்டது. தேவர்கள் தங்களுக்கு நெடு நாள் இடரிழைத்திருந்த துர்க்கனென்னும் அவுணனை உமாதேவியானவள் சங்கரித்து அவ்விடரை நீக்கியது கண்டு அத்தேவியை வணக்கம் செய்து துதி செய்தது இக்கவசம் என்பர். காஞ்சீபுரம் இராமாநந்தயோகி என்பார் எழுதிய விருத்தியுரை இதற்கு உளது. viii. 1011/1916/IV.

O31,1

i. சிவ கவசம் (தொ. எ. 1475 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. அ. மகாதேவ செட்டியார், அம்பாள்பேட்டை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை ; iii. 1916 ; iv. செ. மூ. உ. எ. 21 ; v. ....; vi. ....; vii. 'சிவபெருமான் காக்க' என வேண்டும். பிரபந்தம். இராமாநந்த யோகியாரின் விருத்தியுரையுடன் கூடியது. இந்தக்கவசம் பத்திராயு என்னும் இராஜ குமாரனுக்கு விட முனி அருளிச் செய்தது என்று நைமிசாராணிய முனிவருக்குச் சூத முனி அனுக்கிரகித்தார் என்பர். viii. 1011/1916/IV.

O31,1

தேவராய சுவாமிகள்

1471. i. கந்தர் சஷ்டி கவசம் : மூலமும் உரையும் ; முதற் பதிப்பு ; ii. எஸ். சிவசங்கர செட்டி, சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. நவம்பர், 1916 ; iv. செ. மூ. உ. எ. 119 ; v. 16×13 செ. மீ. ;

vi. 0–5–0 ; vii. தேவராய சுவாமிகளால் சுப்பிரமண்ய சுவாமி கள் மீது பாடப்பெற்ற பாடல்களின் மூலமும், அதற்கு செம்பூர் வித்துவான் வீ. ஆறுமுகஞ் சேர்வை என்பார் ஆக்கிய உரையும் இந்நூலில் அடங்கியுள்ளன. அடியார் தம்மை வந்தடையும் துன்பம் நீங்கப்பெற்று நல்வாழ்வு பெறும் பேற்றை அருளுவது. இந்நூலை அன்றாடம் பாராயணம் செய்பவர்களுக்கு விரும்பியன எல்லாம் எய்தும் என்பர் சான்றோர். viii. 1012/1916/IV.

O31,1

1472. கந்தர் சஷ்டி கவசம்: முதற் பதிப்பு; ii. பி. நாராயண சாமி அண்டு பிரதர், சென்னை; நற்றமிழ் விலாச அச்சி யந்திரசாலை, சென்னை; iii. மே, 1920; iv. செ. மூ. ப. 14; v. 14×11 செ. மீ.; vi. 0–0–5; vii. ......; viii. 188/1920/III.

O31,1

1473. i. கந்தர் சஷ்டி கவசம்; முதற் பதிப்பு; ii. டி. எஸ். ராமாநுஜ அய்யங்கார்; திருவொற்றியூர்; ஸ்ரீ ராமானுஜ அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூன், 1920; iv. செ. மூ. ப. 10; v. 13×11 செ. மீ.; vi. 0–1–0; vii. ....; viii. 274/1920/IV.

O31,1

1474. i. கந்தர் சஷ்டி கவசம் (சத்ரு சிங்கார வேற் பதிகம்); ii. கொ. செல்வரங்கம் அண்டு கம்பெனி, சென்னை; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1920; iv. செ. மூ. ப. 25; v. 12×8 செ. மீ.; vi. .........; vii. ........; viii. 707/1920/V.

O31,1

நற்கீர தேவர்

i. விநாயகர் கவசம் (தொ. எ. 1403 பார்க்க); ii. அண்ணாமலை செட்டியார், மூறையூர்; வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி; iii. 1920. iv. செ. மூ. ப. 10; v. ......; vi. ....; vii. இந்நூலைப் படித்தாலும், ஒருவர் சொல்லக்கேட் டாலும் பூசித்தாலும் எப்படிப்பட்ட துன்பமும் நீங்கிப் போகும் என முன்னுரையில் காணப்படுகிறது. ஆதியில் இக்கவசத்தைக் காசிப முனிவர் முற்கல முனிவருக்கு அருளிச்செய்ய, அவர் மாண்டவ்ய முனிவருக்கு உப தேசித்தருள, அவர் பல முனிவர்களுக்குத் திருவாய் மலர்ந்தருளினார் என்பர். இதனை ஓதுவோர் நித்திய

கருமங்களை முடித்து ஒன்றுபட்ட மனத்தோடு விநாயகரைத் தியானித்து இதனைச் செபித்தல் வேண்டும். viii. 216/1920/I.

O31,1

1475. i. விநாயக கவசம் (சிவகவசம், முதலியன): முதற் பதிப்பு; ii. அ. மகாதேவ செட்டியார், அம்மாள் பேட்டை; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. நவம்பர், 1916; iv. செ. மூ. உ. எ. 9; v. 16×12 செ. மீ.; vi. 0–5–0; vii. விநாயகர், சிவன், சரஸ்வதி ஆகியவர்கள் மீது பாடப்பெற்ற தோத்திரப் பாடல்களைக் கொண்ட புத்தகமாகும் இது. இவற்றிற்கு காஞ்சீபுரம் இராமானந்த யோகி என்பார் விருத்தியுரை வரைந்துள்ளார். விநாயகர் தம்மை காப்பாராக என வேண்டும் ஒன்பது பாடல்கள் கொண்ட சிறுநூல். viii. 1011/1916/IV.

O31,1

## காதல்

### சுப்பிரமணியக் கவிராயர், எஸ்., சிவகாசி

1476. i. காளியப்ப நாடார் (சிவகாசி) மீது காதற் பிரபந்தம்; முதற் பதிப்பு; ii. தி. ரா. பெ. காளியப்ப நாடார், சிவகாசி, நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. மார்ச், 1917; iv. செ. மூ. எ. 428; v. 21×14 செ. மீ. vi. இலவசம்.; vii. சிவகாசியைச் சேர்ந்த தி. ரா. பெ. காளியப்ப நாடாரவர்களைப் புகழ்ந்து பேசும் முறையில் எழுதப்பெற்ற சிறு நூல். பாட்டுடைத் தலைவனுக்கு உறுப்பாகிய தசாங்கவருணனையும், பாட்டுடைத் தலைவன் சிறப்புக்களும் முதற்கண் பேசப்பட்டுள்ளன. பிற்பகுதியில் வேட்டை மேல் சென்ற தலைவன் பெண்ணொருத்தியைக் கண்டு மையல் கொண்டு அவளோடு காதல்மொழி புகல்வதாக அமைந்த நூல். இவ்வகையில் 'கூளப்ப நாயக்கன் காதலே' பிற காதல் நூல்களுக்கு வழிகாட்டி என்பர். viii. 78/1917/II.

O31,1

i. திருமலைக் கருப்பன் பேரில் காதல் (தொ. எ. 2465 பார்க்க); ii. பி. சி. சி. பாண்டியன் & பி. வி. சி. பாண்டியன்; மதுரைத் தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ்; iii. 1916; iv. செ. மூ. ப. 28; v. ....; vi. ......; vii. திருமலைப் பாதையில் வாழும் கறுப்பசாமி மேல் அமைந்தது இந்த பிரபந்தம். கறுப்பசாமி திருமலைக்கு வந்த வரலாறும் அவர்தம் பிரதாபங்களையும் விவரிக்கிறது. கறுப்பசாமி காதல் கொண்ட நிகழ்ச்சியையும் விரிவாகக் கூறுகிறது. viii. 49/1916/II.

O31,

## கும்மி

**அம்புஜத்தம்மாள், தேரழுந்தூர்**

**1477.** i. மகாபாரதம் ஆரண்ய பர்வத்தில் மாம்பழக் கும்மி; திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. ஆறுமுக முதலி, பெரம்பூர்; முரஹரி அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. செ. மூ.எ. 20; v. ........; vi. 0–1–0; vii. மகாபாரதத்தில் ஒரு பாகமாகிய ஆரண்ய பர்வத்தில் வரும் நிகழ்ச்சி ஒன்றைக் கும்மி வடிவமாகப் பாடப்பட்ட நூல். 'பழம் பொருந்து சருக்கத்தின்' கதை நிகச்ழ்சியே இது. 20 கட்டங்களாக அமைத்து இக்கதை புனையப்பட்டிருக்கிறது. viii. 917/1916/II.

**O31,1**

**ஈசுரமூர்த்தியா பிள்ளை, மு. பொ., முன்னீர்ப்பள்ளம்**

**1478.** i. நாட்டுப் பெண் கும்மி: முதற் பதிப்பு; ii. மு. பொ. ஈசுரமூர்த்தியா பிள்ளை, முன்னீர்ப்பள்ளம்; பெத்தாச்சி பிரஸ், பாளையங்கோட்டை; iii. டிசம்பர், 1920; iv. செ. மூ. ப. 39; v. 13×11 செ.மீ.; vi. .....; vii. நாட்டுப் பெண்ணின் பெண்மை, கணவனைத் தொழுதல், கல்வி, பூச்சூடல் போன்றவைகளைப்பற்றி 25 அதிகாரங்களாகப் பிரித்துக் கும்மிப் பாடல்கள் மூலமாக இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. மிகவும் பயனுடைய பல ஒழுக்க நெறிகள் இதன் மூலமாக விவரித்துக் கூறப் பட்டுள்ளன. viii. 940/1920/IV.

**O31,1**

**ஐயர், எஸ். ஆர்.**

**1479.** i. பாரத மாதா பலசந்தக் கும்மி: முதற் பதிப்பு; ii. எஸ். ஆர். அய்யர், மாயவரம்; கமலா பிரஸ், மாயவரம்; iii. எப்ரல், 1919; iv. செ. மூ. ப. 16; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0; vii. இதில் பாரதமென்னும் இந்தியத் துணைக் கண்டத்தைத் தாயாகச் சிறப்பித்துப் பாடப் பெற்ற கும்மிப் பாடல்கள் அடங்கியுள்ளன. நாட்டின் சிறப்பையும் மக்களின் கடமையையும் நன்கு எடுத்துக் காட்டும் பாடல்கள் இதன்கண் உள. viii. 178/1919/II.

**O31,1**

**கணபதி நாயகர், செ. கோ.**

**1480.** i. சிறுமியர் மெய்ப் பழக்கும் சித்திரப் பாடலும் கலியாணப் பாடலும்: முதற் பதிப்பு; ii. ஸ்ரீலக்ஷ்மி விலாச புத்தகசாலை, பெங்களூர்; தி பிராக்ரஸிவ் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1917; iv. செ. மூ. எ. 12; v. 15×12 செ.மீ.; vi. 0-1-0; vii. சிறுமியர் பாடத்தக்க சித்திரப் பாடல்களும், கலியாணப் பாடல்களும்

அடங்கியுள்ளன. விக்டோரியா மகாராணியார் வரலாறு உரைக்கும் கும்மிப் பாடலும் ஒன்று உளது. கலியாணப் பாடல்கள் மணப்பெண்ணையும், பிள்ளையையும் பரிகாசம் செய்யும் முறையில் அமைந்துள்ளன. viii. 304/1917/III.

O31,1

**கந்தசாமி பிள்ளை, கவிராஜ்**

1481. i. கற்பின் சாவித்திரி : முதற் பதிப்பு; ii. என். கணபதி முதலியார், சென்னை ; மாணிக்க விலாசப் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1918 ; iv. செ. மூ. ப. 16 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. சாவித்திரியின் கற்பின் சிறப்பினைப் புகழ்ந்து பாடப் பெற்ற காவடிச் சிந்து, கும்மிச் சிந்து ஆகிய பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். இச் சாவித்திரி காலனை வணங்கிக் கணவனைக் காத்த கற்பின் சிறப்பினையுடையாள். viii. 478/1918/III.

O31,1

**கமலவல்லி அம்மாள், ஸ்ரீவில்லிபுத்தூர்**

1482. i. கோபிகா வஸ்திராபஹரணக் கும்மி : முதற் பதிப்பு; ii. பெ. ஆறுமுக முதலியார், சென்னை ; முராஹரி அச்சுக்கூடம் சென்னை ; iii. 1919 ; iv. செ. மூ. எ. 34 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. இதில் கண்ணன் யமுனை நதிக் கரையில் புன்னை மரத்தில் நடத்திய கோபிகா வஸ்திராபகரணக் கும்மிப் பாடல்கள் அடங்கியுள்ளன. 34 கட்டங்களில் இச் சரிதம் அமைக்கப்பட்டுள்ளது. viii. 721/1920/I.

O31,1

**கனகவல்லி அம்மாள், ஸ்ரீவில்லிபுத்தூர்**

1483. i. சூடிக் கொடுத்த நாச்சியார் என்னும் கோதை கல்யாணம். முதற் பதிப்பு ; ii. பெ. ஆறுமுக முதலியார், முராஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1919 ; iv. செ. மூ. எ. 28 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. வில்லிபுத்தூரைச் சேர்ந்த ஆண்டாளின் திருமணம் பற்றிப் பாடப்பெற்ற கும்மிப் பாடல்கள் இவை. 'ஆண்டாள் பரிணயக் கும்மி' என்றும் இதற்குப் பெயர் உண்டு. 42 கட்டங்களாகப் பகுத்து இச் சரித்திரம் பாடப்பட்டுள்ளது. பாடல்களின் சந்த வேறுபாட்டிற்கு இணங்க மெட்டு, இராகம், தாளம் முதலிய குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 199/1919/III.

O31,1

**காதர் முகயித்தின்**

1484. i. நான்கு மந்திரி கும்மிப் பாட்டு : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. காதர் முகயித்தீன் ராவுத்தர், சிதம்பரம் ; குஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. ஏப்ரல், 1919 ; iv.

செ. மூ. எ. 34 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. இது கும்மிப் பாடல்களடங்கிய ஒரு நூல். இதில் எப்படி நான்கு பிரயாணிகள் ஒரு அரசனால் மந்திரிகளாக நியமிக்கப்பட்டார்கள் என்ற கதை விளக்கப்பட்டுள்ளது. 'கந்தனருள் செய்வான் காதர் முகயிதீன், காசினி மீதினிற் பாடினனே' என வரும் ஈற்றிலுள்ள 34 ஆம் கும்மிப் பாட்டின் குறிப்பினால் இதைப் பாடியவர் காதர் முகயித்தீன் என்பது புலனாகிறது. viii. 314/1919/II.

O31,1

**கோபாலகிருஷ்ண அய்யர், அ.கி.ப., சுந்தரபாண்டியபுரம்**

1485. i. ராஜகோபால சுவாமி தெப்பத் திருவிழாக் கும்மியும், கருட சேவைக் காட்சி அலங்காரச் சிந்தும், காவடிச் சிந்தும்; ii. கோமதி விலாஸம் பிரஸ, தென்காசி; iii. 1919; iv. செ. மூ. ப. 24, v. 16×11 செ. மீ., vi........ ; vii. சுந்தரபாண்டியபுரத்தில் எழுந்தருளியுள்ள ராஜகோபாலசுவாமி தெப்பத் திருவிழாக் கும்மியும், கருட சேவைக் காட்சி அலங்காரச் சிந்தும், காவடிச் சிந்தும் இதன்கண் அடங்கியுள்ளன. தென்காசி ஆ. சங்கரலிங்கம் பிள்ளை அவர்கள் தந்த சாத்துக் கவியுடன் கூடியது. viii. 42/1920/I.

O31,1

**கோபாலகிருஷ்ண பாரதியார், ஆனைதாண்டவபுரம்**

i. சிதம்பரக் கும்மி (தொ. எ. 1183 பார்க்க); ii. நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1919; iv. செ. மூ. எ. 40; v. 21×14 செ. மீ.; vi ...... ..; vii. சிதம்பரத்தின் பெருமையினைக் கூறும் கும்மிப் பாடல்களைக் கொண்டது. தில்லைப் பெருமானுக்குத் தினமும் நடக்கும் பூசைச் சிறப்பு முதலியவற்றையும் வர்ணித்துரைத்துள்ளார். viii.720/1919/IV.

O31,1

1486 i. சிதம்பரக் கும்மி: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர்ஸ், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூலை, 1920; iv. செ.மூ.எ. 40; v. 14×12 செ. மீ.; vi. 0–1–0; vii..........viii; 338/1920/IV.

O31,1

**சஞ்சீவியம்மாள், ஏ.கே., ஆரணி**

1487 i. வள்ளியம்மை திருக்கல்யாணக் கும்மிகள்: முதற் பதிப்பு; ii. கே. குப்புசாமி அய்யர், ஆரணி; அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக்கூடம், ஆரணி; iii. நவம்பர், 1916; iv. செ. மூ. ப. 12; v. 17×11 செ. மீ.; vi. 0—1—0

vii. முருகப்பெருமானுக்கும், வள்ளியம்மைக்கும் நடந்த திருமண நிகழ்ச்சிகள் கும்மிப் பாடல்கள் மூலமாக இப் புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ளன. பலவகை மெட்டுகளில் அமைந்த கும்மிப் பாடல்கள் இதில் உள. viii. 464/1916/IV.

O31,1

**சந்தியாகு சுவாமி**

1488 i. வேதோபதேசக் கும்மி; ii. ஜோசப் ஐயர் திருச்சி; செயிண்ட் ஜோசப்ஸ இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப் பள்ளி; iii. ஏப்ரல், 1918; iv. செ. மூ. எ. 332 v. 18×13 செ. மீ.; vi. 0—3—0; vii. இதில், கத்தோலிக்கக் கிறிஸ்துவ மதத்தின் கோட்பாடுகளும், மத வழிபாடுகளும், கும்மி என்ற ஒரு வகைப் பாடல்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளன. இதி லுள்ள பாசுரங்கள் இரட்டித்த எழுசீர் கொண்ட விருத் தங்களாதலால், பொருளுக்குத் தகுந்தாற்போல இராகமும தாளமும் மாறி வரும் எழு பாகங்கள் இதில் அடங்கி யுள்ளன. ஒவ்வொரு பாகத்திற்கு முன்னரும் அப்பாகத்தின் சாரத்தைச் சுருக்கி உரைநடையில் தரப்பட்டுள்ளது. viii. 296/1918/II.

O31,1

**சுப்பிரமணியக் கவிராயர், சே. ரா.**

1489 i. மதுரை மீனாட்சியம்மை கொம்மைத் தமிழ்ப்பாட்டு: முதற் பதிப்பு; ii. எம். ஆர். ஸ்ரீநிவாஸையர், மதுரை, தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. ஜூலை, 1919; iv. செ. மூ. எ. 64; v. 14×11 செ. மீ.; vi. 0—0—6; vii. இதில் மதுரையில் விளங்கும் மீனாட்சியம்மையைக் குறித்துப் பாடப்பெற்ற கும்மிப் பாடல்கள் அடங்கியுள்ளன. கொம்மை கொட்டலாவது கைகுவித்துக் கொட்டல் ஆகும். மதுரையின் மாண்பும், அம்மையின் கருணையும் பலவகையாகப் புகழ்ந்து பாடப்பட்டிருக்கின்றன. viii. 381/1919/III.

O31,1

**சுப்பிரமணிய சுவாமிகள்**

1490 i. உத்தமர்கள் கும்மி; ii. ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச் சியந்திரசாலை; iii. 1919; iv. செ. மூ. எ. 57: v. 20×14 செ. மீ.; vi. 0—2—0; vii. மதுரை ஜில்லா நிலக்கோட்டை தாலுகா விருவீடு கிராமத்தில் மனமொத்த தம்பதிகளாய் வாழ்ந்து வந்த துரைச்சாமியென்கின்ற பெருமாள் கவுண்டரும் அவர்தம் துணைவி சில்லித் திருமலையம்மாளும் ஒரே நாளில் இறைவனடி சேர்ந்ததைப் பற்றி வியந்து பாடிய கும்மிப் பாடல் களைக் கொண்டது இந்நூல். viii. 95/1920/I.

O31,1

**சுப்பிரமணிய தேசிகர். எல்.கே.ஆர்., பூவுற்றகுடி நகரம்**

1491 i. *சீதையம்மன்திருக்கல்யாணக் கும்மி: முதற் பதிப்பு;* ii. எல். கே. ஆர். சுப்பிரமணிய தேசிகர், பூவுற்றகுடி நகரம்; ஸ்ரீ குஞ்சிதசரண அச்சுக்கூடம், சிதம்பரம்: iii. ஆகஸ்ட், 1916: iv. செ. மூ. எ. 109; v. 21×14 செ. மீ.; vi. 0—1—0; vii. இராமாயணத்தில் சீதை இராமபிரான் திருமணத்தை விவரிப்பது. கும்மி வடிவில் அது உள்ளது. இக் கும்மிப் பாடல்கள் கற்பனுலங்காரங்களுடன் சந்த நயமும் வாய்க்கப் பெற்றனவாம். viii. 711/1916/III.

O31,1

**சுப்பிரமணிய பாரதியார். அ.,வரகவி**

i. *கற்பிலக்கணக் கும்மி* (தொ. எ. 2054 பார்க்க) ii. ஸ்ரீபால சுப்பரமணியம் கம்பெனி, இராயப்பேட்டை; சச்சிதானந்தம் பிரஸ், கோமளேசுவரன்பேட்டை, சென்னை; iii. ஆகஸ்ட், 1917; iv, செ. மூ. எ. 30; v.........; vi.........., vii. மாதர்தம் கற்பின் மேன்மையை விளக்கும் கும்மிப் பாடல்களைக் கொண்டது. viii. 1071/1917/III.

O31,1

**சுப்பிரமணியன், டி.**

1492. i. *திருவில்லிப்புத்தூர் சிறப்பு கும்மி: முதற் பதிப்பு;* ii. டி. சுப்பிரமணியம், ஸ்ரீவில்லிபுத்தூர்; ருக்மணிவிலாச அச்சுக் கூடம், சென்னை; iii. செப்டெம்பர், 1919; iv. செ. மூ. ப. 15; v. 17×11 செ. மீ.; vi. 0—1—0; vii. திருவில்லிபுத்தூரின் புனிதத் தன்மையைப் புகழ்ந்து பாடும் கும்மிப் பாடல்களைக் கொண்டது இந்நூலாகும். "பாடிய சுப்பிரமணியன் வாழி" என வரும் நூலிறுதிக் கும்மிப்பாட்டினுல் இவர் பெயர் தெரியவருகிறது. ஜார்ஜ் மன்னர், மேரியரசி ஆகியோரையும் நூலுள் குறிப்பிட்டு வாழ்த்தியுள்ளார். viii. 769/1919/IV.

O31,1

**சோமுதாசர், மு.,திருவாரூர்**

1493. i. *காரைக்கால் ஸ்ரீபுனிதவதி அம்மையின் சரித்திரத் திருப்புகழ்க் கும்மி: முதற் பதிப்பு;* ii. மு. சோமுதாசர், திருவாரூர்; டிசம்பர், 1918; iv. செ. மூ. ப. 33+1; v. 18×11 செ. மீ.; vi. 0-0-6; vii. காரை வனமெனும் காரைக்காலில் தோன்றிய புனிதவதி அம்மையின் சரித்திரம் திருப்புகழ்க் கும்மியாக இந்நூலில் எழுதப்பட்டுள்ளது. இவர் அறுபத்து மூன்று நாயன்மாரில் ஒருவர் ஆவர். காரைக்காலம்மையார் என்றும் போற்றப்படுபவர் இவரே. viii. 757/1919/I.

O31,1

1494 i. ஞானக்கும்மி : புதிய பதிப்பு ; ii. பு. முனிசாமி நாயுடு, சென்னை ; சங்கநிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1916 ; iv. செ. மூ. எ. 185 ; v. 17×11 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. உண்மையான முக்தி நிலையை அடையும் வழியை விளக்கியும் சில விவேகமற்ற முறைகளை இடித்தும் இந்நூலில் ஆசிரியர் கும்மிப் பாடல்கள் வடிவில் கூறியுள்ளார். தத்துவப் பொருள்கள் எளிய முறையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. viii. 800/1917/II.

O31,1

**ஞானப்பிரகாசம் பிள்ளை, சி.எஸ்., பெங்களூர்**

1495 i. மதுவிலக்குக் கும்மி : முதற் பதிப்பு ; ii. சி. எஸ். ஞானப்பிரகாசம் பிள்ளை, பெங்களூர்; பூலோக வியாஸன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1916; iv. செ.மூ ப. 28; v. 18×13 செ.மீ.; vi. 0—2—0; vii. மது அருந்துவதலுல் உண்டாகும் தீமைகளை எடுத்துக் கூறி அதை அகற்றுவதற்கான வழிமுறைகள் கும்மிப் பாடல்கள் மூலமாக விளக்கப்பட்டுள்ளன. அர்ச். அன்னம்மாள் மதுவிலக்குச் சபையின் கருடோத்ஸவ தினத்தன்று இந்நூல் வெளியிடப் பெற்றது. எ.ஆர். ஜான் குருஸ்வாமி, சா. செ. துரைசாமிப் பிள்ளை முதலியோர் இதற்குச் சாற்றுக்கவி பாடியுள்ளனர். viii. 830/1916/III.

O31,1

**தங்கவேலு பிள்ளை, டி.சி., பெங்களூர்**

1496 i. ஆறுமுகன் மீது ஆறுவகைக் கும்மி: முதற் பதிப்பு; ii. டி. சி. தங்கவேலு பிள்ளை, சென்னை; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1918; iv. செ.மூ.ப. 5+90+5; v. 19×12 செ. மீ.; vi. 0—2—0; vii. ஆறுமுகங்களைக் கொண்ட முருகப்பெருமானின் வரலாற்றைப் புகழ்ந்து கும்மிப் பாடலில் தரும் நூல். ஆறுவகைச் சந்தங்களில் கும்மிப்பாடல்கள் இதன்கண் அமைக்கப்பட்டுள்ளன. இதனை அச்சிட்டோர் மேலும் சிவன், சத்தி, விநாயகர், விஷ்ணு, லட்சுமி, அநுமார், மூகம்மது, எசுக்கிறிஸ்து, ஆகியோர்மீதும் அறுவகைக் கும்மி வெளியிடப் போவதாக குறிப்பு எழுதியுள்ளார். viii. 576/1918/II.

O31,1

**தருமலிங்கஞ் செட்டியார், கே.வி..ஆர்.**

1497. i. சௌடாம்பிகை பேரில் மஹாநவமி உற்சவ தபசு மான்மியக் கும்மி : முதற் பதிப்பு; ii. கே. வி. ஆர். தருமலிங்கஞ் செட்டியார்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுபட்டி; iii ஏப்ரல், 1918; iv. செ. மூ. ப. 32;

v. 21×14 செ. மீ.; vi. 0—4—0; ..; vii. திருநல்லையில் கோயில் கொண்டிருக்கும் சௌடாம்பிகைபேரில் மஹா நவமி உற்சவத்தின்போது பாடப்பெற்ற கும்மிப் பாடல்களாகும். தபசு மண்டப வழிநடைக் கும்மியோடு அம்மன் தபசு ஊஞ்சல் பாட்டும் இதில் இடம் பெற்றுள்ளன. அருப்புக்கோட்டை, எஸ். நாகலிங்கம் செட்டியார், சின்னப் புளியம்பட்டி புராணிகர் ஸா. சண்முகசுந்தரம் பிள்ளை, அருப்புக் கோட்டை பூ. ஆ. கந்தசாமி செட்டியார், உறையூர் வாழவந்தான் பண்டாரம், விருதுபட்டி ப. வே. ப. முத்துபபழநி ஆச்சாரி முதலியோர் தந்த சாத்துக் கவிகள் உள்ளன. viii. 78/1918/II.

O31,1

தருமலிங்க முதலியார், ஆ., சென்னை

1498 i. ராமநாம சாராமிர்தம் : முதற் பதிப்பு; ii. ரீட் அண்டு கம்பெனி, மதறாஸ்; iii. அக்டோபர், 1919; iv. செ.மூ.எ. 1+34+1; v. 15×12 செ. மீ.; vi. 0—0—3; vii. இராமனைப் புகழ்ந்து பாடும் அமுதமான பாடல்களைக் கொண்டது, இந்நூல். தோடி ராகம் ஆதி தாளத்தில் இப் பாடல்கள் அமைந்துள. viii. 516/1919/IV.

O31,1

திருவேங்கடக் கவிராயர், சாத்தூர்

1499. i. காத்தாயம்மன் சந்தக்கும்மி: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சென்னை; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii டிசம்பர், 1920; iv. செ.மூ. ப. 16; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. பட்டுக்கோட்டையில் கோயில் கொண்டுள்ள காத்தாயம்மனைப் பற்றிப் பாடப்பட்ட சந்தக் கும்மிப் பாடல்களைக் கொண்டது இந்நூல். viii. 1009/1920/IV.

O31,1

நடேச சாஸ்திரி, டி.எ.

1500. i. ஐரோப்பா யுத்தக் கும்மி; ii. வைசியமித்திரன் பிராஞ்சு பிரஸ், காரைக்குடி; iii. 1917; iv. செ.மூ.எ. 12; v. 21×14 செ. மீ.; vi. 0—2—0; vii. முதல் உலக யுத்தம் என வழங்கும் ஐரோப்பா யுத்தத்தின் போக்கினை விவரிப்பது. யுத்த நிகழ்ச்சிகளைப் பாடலில் தெரிவிக்கிறது. எனவே இது ஒரு வரலாற்றுக் கும்மி நூல் ஆகும். பலவகை மெட்டுகளில் அமைந்த கும்மிப் பாடல்கள் இதில் உள. viii. 858/1917/III.

O31,1

நாகலெக்ஷ்மி அம்மாள், கே.சி., மதுரை

1501. i. சுந்தரேஸ்வரர் பிட்டுக்கு மண் சுமந்த சரித்திரக் கும்மி: முதற் பதிப்பு; ii. கே. சி. நாகலெக்ஷ்மி அம்மாள், மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii.

செப்டம்பர், 1918; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ. மீ. vi. 0—1—0; vii. சிவபெருமான் தன் பக்தருக்கு இரங்கிப் பிட்டுக்கு மண் சுமந்ததைப் பற்றிய கதையினைக் கும்மிப் பாடல் மூலமாக ஆசிரியை விளக்கியுள்ளார். இது திருவிளையாடற் புராணத்தில் வருகின்ற பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலாகும். இது பதினைந்து கட்டங்களைத் தன்பாலுடையது. ஒவ்வொரு கட்டமும் தனித்தனி இசையமைதியுடையது. ஈற்றில் நலுங்கு என்ற தலைப்பில் சில பாடல்கள் அமைந்துள்ளன. viii. 63/1918/IV.

O31,1

1502. i. மஹா பக்த விஜய நாமதேவர் சரித்திரக் கும்மி: முதற் பதிப்பு; ii. கே. சி. நாகலெக்ஷ்மி அம்மாள், மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டம்பர், 1918; iv. செ.மூ.எ. 34; v. 21×14 செ.மீ.; vi. 0—1—6; vii. விஷ்ணுபக்தரான நாமதேவரின் வரலாறு கும்மிப் பாடல்கள் மூலமாக விளக்கப்பட்டுள்ளது. 34 கட்டங்களையுடையது இந்நூல். ஒவ்வொரு கட்டமும் வேறுபட்ட இசையினையுடையது என்பது குறிப்பிடத்தக்கது viii. 64/1918/IV.

O31,1

**நாராயணசாமி பண்டிதர், எம்., நாகப்பட்டினம்**

i. மாரியம்மன் கும்மி (தொ. எ. 1736 பார்க்க); ii. எம். நாராயணசாமி பண்டிதர், நாகப்பட்டினம்; நீலலோசனி அச்சுக்கூடம், நாகை; iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.எ. 51; v....; vi....; vii. தஞ்சை மாவட்டத்திலே மாயூரத்தைச் சார்ந்த கிழையூர் உப்புச்சந்தை மாரியம்மன் பேரில் பாடப்பெற்ற கும்மிப் பாடல்களாகும். தேவியின் மகிமையைப் பல வகையில் கூறிப் புகழ்கிறது. viii. 54/1917/I.

O31,1

**நாராயணராயர்**

1503. i. கிருஷ்ணலீலை; முதற் பதிப்பு; ii. நாராயணராயர், ஸ்ரீவைகுண்டம்; ஸ்ரீகானவித்யா அச்சியந்திரசாலை, ஸ்ரீவைகுண்டம்; iii. அக்டோபர், 1919; iv. செ.மூ.ப. 8; v. 15×12 செ. மீ.; vi. 0—2—0; vii ஸ்ரீகண்ணனின் லீலைகளைப் பற்றி விளக்கும் கும்மிப் பாடல்களைக் கொண்டது இந்நூல், முதலில் "சீர் சிறக்குமேனிப் பசேர் பசேரென" என்னும் மெட்டில் ஒரு திருப்புகழ்ப்பாடல் உளது. viii. 466/1919/IV.

O31,1

i. பச்சைநாயகி பட்டுக்கோட்டையுற்ற வரலாறு (தொ. எ. 1740 பார்க்க); ii. எஸ்.கே. சொக்கலிங்கம் பிள்ளை,

ம. வடிவேல்சாமி பிள்ளை, திரிசிராமலை, யாதவர்புரம் நடராஜா அச்சுக்கூடம், திருச்சி; iii. 1917; iv. செ.மூ.எ. 1+31 ; v....; vi....; vii. பச்சைநாயகி அம்மன் பட்டுக் கோட்டைக்கு எழுந்தருளிய வரலாற்றை உரைப்பது. இந்த அம்மனைப் பூசித்து வந்த குமரப்ப பூசாரி என்பவரால் அம்மன் திருக்கோயில் பட்டுக்கோட்டையில் ஏற்பட்டதாம். நொண்டிச் சிந்து ஒயில் கும்மி மெட்டுகளிலும் பாடல்கள் உள. viii. 732/1917/III.

O31,1

பத்மாஸனி அம்மாள், இராமநாதபுரம்

1504. i. அற்புத இராமாயண சரித்திரக் கும்மி : முதற் பதிப்பு ; ii. பத்மாஸனி அம்மாள், இராமநாதபுரம் ; ஷம்ஸியா அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜூன், 1919 ; iv. செ.மூ.எ. 20 ; v. 14×11 செ.மீ ; vi........... ; vii. இராமா யணக் கதை இந்நூலில் கும்மிப்பாடல்கள் வடிவில் கூறப்பட் டுள்ளது. 20 கட்டமாகப் பாகுபடுத்தி இச்சரிதம் அமைக்கப் பட்டுள்ளது. viii. 952/1919/II.

O31,1

1505. i. அனுசூயை சரித்திரக் கும்மி (கோராக்கும்பர் சரித்திரக் கும்மி) : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. ஷம்ஸியா அச்சுக் கூடம், மதுரை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. செ.மூ.எ. 23 ; v. 20×14 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. அனுசூயை அத்திரி முனிவரின் பத்தினி ; கற்பின் மகிமையால் அற்புதங்கள் நிகழ்த்தியவள். இவளுடைய வரலாற்றைக் கும்மிப் பாடல் மூலமாக ஆசிரியை விளக்கியுள்ளார். 23 கட்டங்களாகப் பாகுபாடு செய்து இச்சரித்திரம் தரப்பட்டிருக்கிறது. viii. 780/1918/III.

O31,1

i. கோராக்கும்பர் சரித்திரக் கும்மி (தொ.எ. 1505 பார்க்க); ii. ஷம்ஸியா அச்சுக்கூடம், மதுரை ; iii. ஆகஸ்ட், 1918 , iv. செ.மூ.எ. 6; v. ; vi..;vii. கோராக்கும்பர் என்பார் ஒரு குலாலர் ; திருமாலடியார். உண்மையான பக்தி பூண்டு திருமாலினருட்குப் பாத்திரமானவர். அவரது வரலாறு கும்மிப் பாடலாக இங்கே தரப்பட்டுள்ளது. viii 780/1918/III.

O31,1

1506. i. நாரதர் விஜயம் என்னும் கும்மி : முதற் பதிப்பு ; ii. பத்மாஸனி அம்மாள், இராமநாதபுரம் ; ஷம்ஸியா அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. செ.மூ.எ. 20 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–1–6;

vii. கண்ணனுடைய திருமணத்தின் போது நாரதர் அங்கு விஜயம் செய்ததைப் பற்றிக் கும்மிப் பாடலாகப் பாடப்பட்டுள்ளது. இஃது இருபது கட்டங்களையுடையது. பாடல்களுக்கு உரிய மெட்டுகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. viii. 561/1918/III.

O31,1

**பத்மாஸனி அம்மாள், கண்ணனூர்**

[1]507. i. வத்சலா கல்யாணக் கும்மி: முதற் பதிப்பு; ii. பத்மாசனி அம்மாள், கண்ணனூர்; ஜி. ஆர். ஸி. பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. செ. மூ. ப. 84; v. 14×11 செ. மீ.; vi. 0–6–0; vii. வத்சலா அபிமன்யுவை மணந்த கதை இதில் விளக்கப்பட்டுள்ளது. கும்மிப் பாடல்களால் ஆயது. 43 கட்டங்களாக அமைத்து இச்சரிதம் தரப்பட்டுள்ளது. viii. 901/1920/III.

O31,1

[1]508. i. ஸாவித்திரி சரித்திரக் கும்மி: முதற் பதிப்பு; ii. இ. மா. கோபால கிருஷ்ணக் கோன், மதுரை; பிரஸன்ன வெங்கடேஸ்வர பிரஸ், மதுரை; iii. ஆகஸ்ட், 1918; iv. செ.மூ.ப. 38; v. 23×14 செ.மீ.; vi. 0–6–0; vii. புராண வரலாறன சத்தியவான் சாவித்திரியின் சரித்திரம் கும்மிப் பாடல்கள் மூலமாக விளக்கப்பட்டுள்ளது. 49 கட்டங்களாகப் பிரித்து இச்சரித்திரம் அமைக்கப்பட்டுள்ளது. இசைப் பாடல்களுக்குரிய இராக தாளக் குறிப்புக்களும் அங்கங்கே சுட்டப்பட்டிருக்கின்றன. viii. 860/1919/I.

O31,1

**பன்னிருகைப் பெருமாள் கவிராயர், கு.**

1509. i. திருச்செந்தூர் கந்தர் அற்புதமாலை: முதற் பதிப்பு; ii. எ. வெங்கடாசலம் பிள்ளை, தூத்துக்குடி; வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி; iii. அக்டோபர், 1920; iv. செ.மூ.எ. 1+83+33; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. இது திருச்செந்தூரில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானைப் போற்றிப் புகழ்ந்திடும் பாக்களைக் கொண்ட புத்தகமாகும். இதில் அற்புதக் கும்மிப் பாடல்கள் அமைந்துள. செந்தூரில் நிலவும் தீர்த்தங்களின் வரலாறுகளும் தரப்பட்டுள்ளன. viii. 483/1920/IV.

O31,1

**பார்த்தசாரதி உபாத்தியாயர், வல்ல., வெ.**

1510. i. பொக்காபூர் மாரியம்மன் பேரில் புதுமைக் கும்மி ii. வல்ல. வெ. பார்த்தசாரதி உபாத்தியாயர், பொக்காபூர் கமர்ஷியல் பிரஸ், உதகமண்டலம்; iii. பிப்ரவரி, 1918

iv. செ. மூ. எ. 8; v. 22×14 செ. மீ.; vi. 0–0–9; vii. நீலகிரி உதகமண்டலத்திற்கடுத்த பொக்காபூரில் விளங்கும் மாரியம்மனைப் போற்றி எழுதப்பெற்ற கும்மிப் பாடல்கள். இப் புதுமைக் கும்மி நீலகிரி திரு. முனிசாமி நாயுடு கோரிக்கைப்படி நீலகிரியில் தமிழ் விலாசம் நாடகம் கற்பிக்கும் வே. பார்த்தசாரதி உபாத்தியாயரால் இயற்றப்பட்டது. முனிசாமி நாயுடு முதலிய இந்நூல் அச்சிடுவதற்குக் காரணமாயிருந்தவர்களைப் பாராட்டும் வாழ்த்துதல் கும்மியும் உண்டு. நூல் முடிவில் பொக்காபூர் பாடலுக்கு உதவிய கையொப்பக்காரர்கள் பெயர்கள் அச்சிடப்பட்டுள்ளன. viii. 1123/1918/I.

O31,1

பாலசுப்பிரமணிய ஐயர், சி., காரைக்குடி

1511. i. காரைக்குடி கொப்புடை நாயகியம்மன் பேரில் வேதாந்தக் கும்மி, நவராத்திரிக் கும்மி பிரபந்தங்கள்: முதற் பதிப்பு; ii. 'ஞானம்பிகா' பிரிண்டிங் வொர்க்ஸ், காரைக்குடி; iii. ஜூன், 1918; iv. செ.மூ.ப. 59; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. காரைக்குடியில் கோயில்கொண்டுள்ள கொப்புடைநாயகியம்மன் பேரில் பாடப்பட்ட, சிங்காரக் கும்மி ஆகிய பிரபந்தங்களைக் கொண்டது. ஆசிரியர் தம்மைப் 'பாலகவி' என நூலுள் குறிப்பிடுகின்றார். சிலேடைப் புலி அஷ்டாவதானம் சாமிநாத ஐயர், காரைக்குடி சுப்பராம ஐயர் என்ற இராமசாமி ஐயர் முதலியோர் தந்த சாற்றுக் கவிகளைக் கொண்டுள்ளது இந்நூல். viii. 953/1918/II.

O31,1

பாலுசாமி நாயுடு, கி., திருவையாறு

1512. i. திருவையாறு ஸ்ரீநந்திகேசுவரர் திருமணச் சிறப்புக் கும்மி: முதற் பதிப்பு; ii. அழகர்விலாஸ அச்சுயந்திர சாலை, திருவையாறு; iii. மார்ச், 1917; iv. செ.மூ.ப. 12; v. 13×11 செ. மீ.; vi. 0–0–6; vii. சிவபெருமானின் வாகனமாகிய நந்திகேசுவரர் திருமணத்தைப் பற்றியன, இக் கும்மிப் பாடல்கள். திருமழபாடியில் நடைபெறும் இந்த விழாவினைத் தரிசிக்க வருவார்க்கு நந்திகேசுவரர் சரித்திரம் தெரியும் பொருட்டாக எழுதப்பெற்ற சிறு நூல். viii. 240/1917/II.

O31,1

பெரியசாமி ஆச்சாரி, வி. ஆர்.

1513. i. துர்க்கை தியாகேஸ்வரி பேரில் இயற்றிய கவன ஒயிற் கும்மி, பஞ்ச ரத்தனப் பதிகம்; ii. ....................; iii. 1916; iv. செ.மூ.ப. 12; v. .........; vi. .........; vii. கள்ளக்குறிச்சித் தாலுகாவிலுள்ள தியாசபாடியில்

அமைந்தருளும் துர்க்கை தியாகேஸ்வரியம்மையைத் துதித்துப் போற்றும் பாட்டு. இதனைக் கவன ஒயிற் கும்மி என்கிறார் பதிப்பாசிரியர். இதனோடு பஞ்சரத்தினப் பதிகமும் உளளது. viii. 666/1916/I.

031,1

**மதுராம்பாள், வி.எஸ்., திருவையாறு**

1514. i. மஹாபாரத காலவரிஷி அல்லது கந்தர்வ சித்திர சேனன் கும்மி (கீர்த்தனங்கள்) ; ii. வி. எஸ். மதுராம்பாள், திருவையாறு ; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை ; iii. 1918 ; iv. செ. மூ. எ. 17 ; v. 18×11 செ.மீ. ; vi. ........ ; vii. இதில் மகாபாரதத்தில் காணப்படும் கந்தர்வ சித்திர சேனனது செயல்கள் கும்மிப் பாடலாகப் பாடப்பட்டுள்ளன. 17 கட்டங்களாக இக்கதை அமைத்துத் தரப்பட்டுள்ளது. viii. 1072/1918/III.

031, 1

**முகியித்தீன் பக்கீர் புலவர், பி., முத்துமாநகர்**

1515. i. காரணக் கும்மி : முதற் பதிப்பு ; ii. முகமது காட்டுவா மரைக்காயர், முத்துப்பேட்டை ; எட்வர்டு அச்சுக் கூடம், திருவாரூர் ; iii. பிப்ரவரி, 1918 ; iv. செ. மூ. எ. 116 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. முத்துப்பேட்டையைச் சார்ந்த ஜாம்புவானகர் ஹஜரத் ஷெய்கு தாவுது ஒலி ஆண்டவர் அவர்கள் பேரில் பாடப்பட்ட காரணக் கும்மியாகும் இது. ஆண்டவரின் சிறப்புக்கள் இதன்கண் பலபடியாகச் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன. viii. 907/1919/I.

031,1

**முத்துராமையா, நா. பெ. நா. மு., கண்டனூர்**

1516. i. சுந்தரராஜப் பெருமாள் கும்மி : முதற் பதிப்பு ; ii. இராமசாமிச் செட்டியார் ; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. செ. மூ. ப. 15 ; v. 16×11 செ.மீ. ; vi. .......... ; vii. புதுவயலில் கோயில் கொண்டுள்ள சுந்தரராஜப் பெருமானின் பெருமை, கும்மிப் பாடல்கள் மூலமாக இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. லால்குடி சுப்பிரமணிய சாஸ்திரிகள், வித்தியாசாலை கிருஷ்ண சாஸ்திரிகள் முதலியோர் தந்த அபிப்ராயப் பாடல்களும், அரங்கேற்றச் சிறப்புக்கவி வெண்பாவும், கண்டனூர் இராமாயண வித்துவான் திரு. செல்லமையங்கார் இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடலும் இதில் உள்ளன. viii. 894/1920/IV.

031,1

**முருகதாச சுவாமிகள், கீழக்கடலூர்**

1517 i. இராமாயணக் கும்மி: முதற் பதிப்பு ; ii. மு. நாராயணை பிள்ளை, கீழக்கடலூர் : சாரதா அச்சாபீஸ், பாளையங் கோட்டை ; iii. 1920 ; iv. செ. மூ. எ. 344 ; v. 20×13 செ.மீ. : vi. 0–2–0 ; vii. இராமனுஜம்புதூர் செல்வ விநாயகர் பேரில் ஆசிரிய விருத்தப் பாடல்களும் இராமாயண வரலாற்றைக் கூறும் கும்மிப் பாடல்களும் இதில் அடங்கியுள்ளன: இராமாயண ஆறுகாண்டக் கதைப் பகுதிகளும், 344 கும்மி மெட்டுக் கண்ணிகளில் அமைத்துப் பாடப்பட்டிருக்கிறது. இவ்வாசிரியரின் இயற் பெயர் ஆழ்வாரப்பன் என்பதாம். viii. 2/1920/IV.

O31, 1

1518. i. முருகர் ஒயிற் கும்மி: முதற் பதிப்பு ; ii. த. இராமசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; ஸ்ரீலட்சுமி நாராயண விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜுன், 1917 ; iv. செ. மூ. ப. 24 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. முருகனைக் குறித்து பாடப் பெற்ற ஒயிற் கும்மிப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இதனை "ஒயிற் கும்மி சங்கீதம்" என ஆசிரியர் குறிப்பதனால் இது இசைப் பாட்டாதல் விளங்கும். முருகன் வள்ளியம்மையாரை மணந்த செய்தி விவரிக்கப்பட்டிருக்கிறது. viii. 300/1917/III.

O31, 1

**ரங்கநாயகி அம்மாள், ஸ்ரீரங்கம்**

1519. i. அநுசூயா சரித்திரக் கும்மி: முதற் பதிப்பு ; ii. லக்ஷ்மீ விலாஸ் அச்சுக் கூடம்; திருச்சி ; iii. மார்ச், 1920 ; iv. செ. மூ. எ. 16 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-2–0 ; vii. அத்திரி என்னும் முனிவரின் மனைவியான அநுசூயாவின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் கும்மிப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. 29 கட்டங்களாகப் பகுத்து இச்சரித்திரம் தரப் பட்டுள்ளது. viii. 179/1920/II.

O31,1

1520. i. ஆண்டாள் கல்யாணம் என்னும் கோதை பரிணயக் கும்மி : முதற் பதிப்பு ; ii. ரங்கநாயகி அம்மாள் ; டாட்சன் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1916 ; iv. செ. மூ. ப. 22 ; v. 22×14 செ.மீ. ; vi. ........ ; vii. திருவில்லிபுத்தூரில் திருமாலுக்கும் ஆண்டாளுக்கும் நடந்த திருமணத்தைக் குறித்த புராணக் கதை. பல கட்டங்களாகப் பாகுபடுத்தி இச்சரிதத்தை விவரிக்கிறது. viii. 487/1916/I.

O31,1

1521. i. ஆண்டாள் கல்யாணம் என்னும் கோதை பரிணயக் கும்மி : திருத்திய மூன்றும் பதிப்பு ; ii . ரங்க நாயகி அம்மாள், ஸ்ரீரங்கம் ; சண்முக விலாச பிரஸ், திருச்சி ; iii . செப்டம்பர், 1918 ; iv . செ. மூ. ப. 24 ; v. 21 × 13 செ. மீ. ; vi 0-3-0 ; vii. இரங்கநாதனுக்கும் ஆண்டாளுக்கும் நடந்த திருமணத்தைக் கும்மிப் பாடல்கள் மூலம் ஆசிரியை விளக்குகின்றார். 'ஆண்டாள் கல்யாணம் என்னும் கோதை பரிணயக் கும்மி' என்பது இந்நூலின் முழுப் பெயர். 43 கட்டங்களாகப் பாகுபடுத்தி இச்சரித்திரம் எழுதப் பட்டிருக்கிறது. viii. 1011/1918/III.

O31,1

1522. i. கண்ணன் லீலே காகூஷியோடக் கும்மி : இரண்டாம் பதிப்பு ; ii. ரங்கநாயகி அம்மாள், திருச்சிராப்பள்ளி ; லக்ஷ்மி விலாஸ அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி ; iii. ஜூன், 1917 ; iv. செ. மூ. எ. 35 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-3-6 ; vii. ஓடத்தில் கிருஷ்ணன் கோபியருடன் பயணம் செய்ததை யொட்டி அமைந்த கும்மிப் பாடல்கள். 35 சந்தங்களில் கும்மிகள் இதில் உள. சந்தம் மாறும் இடங்களில் 'வேறு கும்மி' என்று குறிப்புக் கொடுத்துள்ளார். 'நௌகா சரிதம்' என்றும் இதற்குப் பெயர் உண்டு. viii. 361/1917/III.

O31,1

1523. i. கண்ணன் லீலே காகூஷியோடக் கும்மி : மூன்றும் பதிப்பு ; ii. ரங்கநாயகி அம்மாள், ஸ்ரீரங்கம் ; சண்முக விலாஸ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. அக்டோபர், 1918 ; iv. செ. மூ. ப. 24 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-3-6 ; vii .......... ; viii. 328/1918/IV.

O31,1

1524. i. கோபிகா வஸ்திராபஹரணக் கும்மி ; ii. சுந்தரராஜு அய்யங்கார் ; பாகவத வர்த்தினி அச்சுக்கூடம், கோயம்புத்தூர்; iii. 1916 ; iv. செ. மூ. ப. 16; v. 21×14 செ. மீ. ; vi. 0-2-0; vii. யமுனா நதி தீரத்தில் கண்ணன் கோபிகளுடன் நடத்திய லீலேகளைக் கும்மியாகப் பாடுவது. 34 கட்டங்களாக இச் சரித்திரம் வகுக்கப்பட்டிருக்கிறது. பாடல்களுக்கு உரிய மெட்டுகளும் சுட்டப்பட்டிருக்கின்றன. viii. 717/1916/I.

O31,1

1525. i. கோபிகா வஸ்திராபஹரணக் கும்மி : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. ரங்கநாயகி அம்மாள், திருச்சிராப்பள்ளி லக்ஷ்மி விலாஸ அச்சுக் கூடம், திருச்சி ; iii. ஜூலை, 1917 ; iv. செ. மூ. எ. 34 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. ............ ; viii. 360/1918/III.

O31,1

1526. i. கோபிகா வஸ்திராபஹரணக் கும்மி: இரண்டாம் பதிப்பு ii. லக்ஷ்மி விலாஸ அச்சுக் கூடம், திருச்சி ; iii. ஜூன், 1918 ; iv. செ. மூ. ப. 16 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–6 vii. ...... .. ; viii. 153/1918/III.

O31,1

1527. i. கோபிகா வஸ்திராபஹரணக் கும்மி: திருத்திய நான்காம் பதிப்பு ; ii. எல்.வி. பிரஸ், திருச்சி ; iii. 1919 : iv. செ. மூ. ப. 16 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. .......... ; viii. 178/1920/II.

O31,1

1528. i. வத்சலா கல்யாணக் கும்மி: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. ரங்கநாயகி அம்மாள், ஸ்ரீரங்கம் ; ஷண்முக விலாச அச்சுக் கூடம், திருச்சி ; iii. டிசம்பர், 1919 ; iv. செ. மூ. ப. 28 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. புராண வரலாற்றில் உள்ள வத்சலா திருமணத்தைப் பற்றிய செய்தி கும்மிப் பாடல்கள் மூலமாக இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. 56 கட்டங்களாகப் பிரித்து இச்சரித்திரம் உரைக்கப் பட்டுள்ளது. கதைப் போக்கினைத் தெரிவிக்கும் தலைப்புகளும், பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1062/1919/IV.

O31,1

லெக்ஷ்மி அம்மாள்

1529. i. அனிருத்தன் கும்மி ; ii. லெட்சுமியம்மாள் ; விநாயக விலாச அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. மார்ச், 1916 ; iv. செ. மூ. எ. 36 ; v. 13×11 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. பாணாசுரனின் மகளாகிய உஷாவுக்கும் கண்ணன் பேரனாகிய அனிருத்தனுக்கும் நடந்த திருமண வைபவத்தை விளக்குவது. viii. 1023/1916/I.

O31,

வாலைசாமி

1530. i. ஞானக்கும்மி ; ii. நற்றமிழ் விலாசம் பிரஸ், சென்னை ; iii. 1919 ; iv. செ. மூ. எ. 185 ; v. 18×11 செ. மீ. ; vi.......... ; vii. ஞானத்தைப் பற்றி ஓரளவு செய்யுள் வடிவில் கூறப்பட்டுள்ளது. பாடல்கள் ஒவ்வொன்றும் "ஞானப்பெண்ணே" என்னும் முடிவுடன் அமைந்துள. நூலின் நான்காவது பாடலிலும் ஈற்றுப் பாடலிலும் வாலை சுவாமியென்பவர் இந்நூலைச் செய்ததாகக் குறிக்கப் பட்டுள்ளது. viii. 334/1920/I.

O31,1

விசுவநாத கனபாடிகள், எ. எஸ். ஸர்வமான்யம்புத்தூர்

1531. i. நடராஜர் பேரிலும் சிவகாமி பேரிலும் பாடிய அருள் அகராதிக் கும்மி: முதற் பதிப்பு ; ii. விசுவநாத கனபாடிகள், ஸர்வமான்யம்புத்தூர் ; பிரேஸர் அச்சுக்கூடம், குனனூர் ; iii. செப்டம்பர், 1919 ; iv. செ. மூ. எ. 83 ; v. 14×11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. சிதம்பரத்தில் கோயில் கொண்டுள்ள நடராஜர் பேரிலும், சிவகாமி பேரிலும் பாடியுள்ள அருள் அகராதிக் கும்மியாகும் இந்நூல். கும்மிப் பாடல்களின் தொடக்கம் அகரம் முதலிய எழுத்து வருக்கங்களைக் கொண்டு அமைந்துள்ளது. இவ்வெழுத்துக்கள் தடித்த எழுத்தாக அகராதி முறை எளிதில் புலப்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. viii. 39/1919/IV.

O31,1

வீரபத்ர சிவாநந்த யோகி, திருமங்கலம்

532. i. ஜெயவீரபத்திர காளியம்பாள் சந்தக் கும்மியும் பதிகமும் ; ii. இ. ராம. குருசாமிக் கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1916 ; iv. செ. மூ. ப. 11 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. திருமங்கலத்திலுள்ள ஜெயவீர பத்ரகாளி யம்பாளைக் குறித்துப் பாடப்பெற்ற சந்தக் கும்மியும் பதிகமும் இதில் அடங்கியுள்ளன. பதிகப் பாடல்கள் 'ஜெயவீர பத்திரகாளி சிம்ம வாகனத்தேவி மகமாயி உமையே' என்னும் சிறப்பு விளியுடன் முடிவுறுகின்றன. viii. 45/1917/III.

O31, 1

வீராச்சாமி நாயுடு, திருப்பொற்கோட்டை

1533. i. திருப்பொற்கோட்டை மாரியம்மன் கும்மி ; ii. சோ. முத்தழகுக் கோனார் ; எஸ்டேட் பிரஸ், தேவக்கோட்டை ; iii. அக்டோபர், 1917 ; iv. செ. மு. எ. 70 ; v. 16×10 செ. மீ. ; vi. ....... ; vii. இதில் திருப்பொற்கோட்டை மாரியம்மனைக் குறித்துப் பாடப்பெற்ற கும்மிப் பாடல்கள் அடங்கியுள்ளன. வைகாசி மாதம் வளர்பிறைப் பக்கம் மங்கள வாரத்தில் இத்தேவிக்கு நடைபெறும் வழிபாடும் பிறவும் குறிக்கப்பட்டுள்ளன. viii. 372/1917/IV.

O31,1

வெங்கடேச சாஸ்திரிகள், எஸ். மஞ்சபுத்தூர்

1534. i. துரோபதா, சுபத்திரா, வத்ஸலா திருக்கலியாணக் கும்மிகள் : முதற் பதிப்பு ; ii. வீராசாமி அய்யர், திருவண்ணா மலை ; நேஷனல் அச்சுக்கூடம், திருவண்ணாமலை ; iii. ஜூலை, 1920 ; iv. செ. மூ. எ. 62 ; v. 22×15 செ. மீ. ;

vi. 0-2-0 ; vii. இந்நூலில் மகாபாரதக் கதையில் சொல்லப்படும் துரோபதை, சுபத்திரா, வத்சலா ஆகியோர் களின் திருமணங்களை விவரிக்கும் சரிதங்கள் பற்றிய கும்மிப் பாடல்கள் அடங்கியுள்ளன. viii. 242/1920/III.

O31,1

**வேதநாயக சாஸ்திரி, சுவிசேடக் கவிராயர்**

1535. i. சாஸ்திரக் கும்மி : திருத்திய எட்டாம் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி — தி மெட்ராஸ் ரிலிஜியஸ் டிராக்ட் அண்டு புக் சொசைட்டி ; சி.எல்.எஸ்.பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. செ.மூ.எ. 850 ; v. 12×9 செ. மீ.; vi. 0—4—0 ; vii. இந்து மதத்தில் உள்ள மூடநம்பிக்கைகளை வெளிப்படுத்தும் பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல். ஒவ்வொரு பாடலும் 'ஞானப் பெண்ணே' என்னும் விளியுடன் முடிவுறுவதால் இதனை 'ஞானப்பெண் கும்மி' என்றும் கொள்ளலாம். இந்நூல் கிறித்துவ மதப் பிரசாரத்திற்காகச் செய்யப்பட்டமையின் இந்துக்களிடையே நிலவி வரும் நல்ல பழக்க வழக்கங்கள் எல்லாம் மூடநம்பிக்கையெனக் குறிப்பிடப்பட்டுள்ளன. உதாரணமாக வைசூரி வந்த வீட்டில் வேப்பிலையை வைத்திருத்தல் மிகவும் பயனுடையது என்பதையுணராது அதையும் மூடநம்பிக்கையின் பாற்படுத்துவது வியப்பாயுள்ளது. "வேதநாயகனாகிய நானிதை வேதசாஸ்திரத்தின் படியே யோதினேன்" (849) என்பது கொண்டும் இந்நூற் சொன்னேன் சிறப்பு என்னும் தலைப்பில் வரும் பாடல்களைக் கொண்டும் (432—437) இந்நூலின் ஆசிரியர் வேதநாயக சுவிசேடக் கவிராயர் என்பது விளங்கும். தொடக்கப் பாடலில் "வேதநாயக சாஸ்திரி விளம்பும் வேத சாஸ்திரக் கும்மி" என்று தம் பெயரைக் குறிப்பிடுதலும் கருதத்தகும். viii. 613/1919/IV.

O31, 1

**வைதிகலிங்கம் ஆச்சாரியார்**

1536. i. புதுமை நகரில் வாழும் வடக்கு வாச் செல்லியம்மன் கொம்மி ; ii. லெக்ஷ்மி விலாஸம் பிரஸ், சாத்தூர் ; iii. 1919 ; iv. செ. மூ. ப. 35 ; v. 17×11 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. இது புதுமை நகரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள வடக்குவாச் செல்லியம்மன் மீது பாடப் பெற்ற கொம்மி, முல்லைநகரம் சமஸ்தான வித்வான் திரு. சின்னச்சாமி ஆச்சாரியார், பண்ணை மூணடைப்பு திரு. சின்னச் சிவனடியாத் தேவர் குமாரர் சந்தனத் தேவர் முதலியோர் இந்நூலுக்குச் சாத்துக் கவிகள் தந்துள்ளனர். viii. 177/1920/I.

O31,1

ஸ்வாமி குணனந்தா

1537. i. திருவேளூர் வைத்தீஸ்வரர் சமேத தையநாயகிக கும்மி : இரண்டாம் பதிப்பு ; ii. கொ. செல்வரங்கம்மாள் அண்டு கோ. ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1918 ; iv. செ. மூ. எ. 25 ; v. 14×11 செ. மீ. ; vi. 0—1—0; vii. திருவேளூரில் கோயில் கொண்டுள்ள தைய நாயகியைப் போற்றிப் பாடப்பெற்ற கும்மிப்பாடல்கள் இருபத்தைந்து அடங்கிய புத்தகம். இது கு. தையநாயகி அம்மாள் அவர்கள் வேண்டுகோட்படி அச்சிடப்பட்டதாகத் தெரிகிறது. வைத்தீஸ்வரன் கோயிலைப் பற்றிய விளக்கப்படமொன்று நூன் முகப்பில் உள்ளது. “தையத்தாண்டவ குணனந்த கும்மி” என்று இக்கும்மிப்பாட்டுக்கு வேறு ஒரு பெயரும் உண்டு. viii. 110/1918/II.

O31,1

குறம்

இலக்குமண பாரதியார், மடவளாகம்

1538. i. சிவமலைக் குறவஞ்சி : முதற் பதிப்பு. ii. தி. அ. முத்துசாமிக் கோனர்; விவேகதிவாகரன் அச்சுக்கூடம், திருச்செங்கோடு. iii. ஜுன், 1918; iv. செ. மீ. ப. 76 ; v. 21×14 செ. மீ. vi. 1—0—0 ; vii. சிவமலைக் குறவஞ்சி என்பது சிவமலையிலெழுந்தருளியுள்ள சிவசுப்பிரமணியக் கடவுளைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்டு எழுதப்பட்ட குறவஞ்சிப் பாடல்களைக் கொண்டது. ‘சிவமலை’ என்பது பட்டாழி என்னும் நகரத்தைச் சேர்ந்த மலையாகும். ஊற்றுக் குழி ரயில்வே நிலையத்திலிருந்து காங்கேயம் வரும் வழியில் காங்கேயத்திற்கு வடக்கே மூன்று மைல் தூரத்தில் உள்ளது. அருணகிரிநாதரின் திருப்புகழ் இத்தலத்துக்கு உள்ளது. நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கமும் நூல் முகப்பில் அமைந்து உள்ளது. இந்நூலாசிரியர் 1767 முதல் 1859 வரை வாழ்ந்திருந்தார் என்று தெரிய வருகிறது. viii. 554/1918/IV.

O31,1

கவிகுஞ்சர பாரதி, பெருங்கரை

1539. i. அழகர் குறவஞ்சி : முதற் பதிப்பு ; ii. நா. கோடீசுவரய்யர் ; ஸ்காட்டிஷ் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ. மூ. ப. 81 ; v. 22×15 செ.மீ. ; vi. 0—8—0 ; vii. குறவஞ்சி என்பது நாடகத் தமிழ்ப பிரபந்தங்களுள் ஒன்று. இது, மதுரைக்கருகிலுள்ள அழகர் கோயிலென்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் சுந்தரராஜப் பெருமாள் மீது இயற்றப்பட்டது. இதிலமைந்துள்ள

யாகப்ப உபாத்தியாயர் ச.வு.யா., மங்கலம்

1642. i. ஒரியூர் அருளானந்த கோயில் வழி நடையலங்காரம் ; முதற்பதிப்பு ; ii. அ.ச. வெள்ளைசாமி உபாத்தியாயர், பாரதி பிரஸ், மன்னார்குடி ; iii. செப்டம்பர், 1917 ; iv. செ.மூ.ப. 10 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—0—6 ; vii. ஓரியூரில் வழி பட்ட அருளானந்தர் என்பவரைப் போற்றி எழுதப்பட்ட பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இது சிந்து மெட்டுப் பாடல்களைக் கொண்டது ; ஆதலின், இதனை வழிநடைச் சிந்து என்றும் கூறுவர். viii. 1054/1017/III.

O31,1

வேளாங்கண்ணி, எஸ்., திண்டுக்கல்

1643. i. கோவை அர்ச். பிராஞ்சிஸ்டு சவேரியார் கோவில் வழி நடைச் சிந்து; ii. எம். சவுரிநாயகம் உபாத்தியாயர், திண்டுக்கல்; நேட்டிவ் ராயல் அச்சியந்திரசாலை, திண்டுக்கல், iii. 1920; iv. செ.மூ.எ. 100+6+4; v. 21×13 செ.மீ.; vi......; vii. கோவை அர்ச். பிராஞ்சிஸ்டு சவேரியார் கோவில் வழி நடைச்சிந்துப் பாடல்களால் ஆகியது இந்நூல். சவேரியாரின் ஜீவிய சரித்திரமும் நன்கு தெளிவுறக் கூறப்பட்டிருக்கிறது. viii. 266/1920/I.

O31,1

## சிலேடை

கந்தசாமிக் கவிராயர், மு.ரா., மதுரை

i. மதுரைச் சிலேடை வெண்பா (தொ. எ. 1544 பார்க்க). முதற் பதிப்பு; ii. மு.ரா. கந்தசாமிக் கவிராயர், மதுரை; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. மே, 1917; iv. செ.மூ.எ. 100; v....................; vi.................; vii. மதுரையின் பெருமையை விளக்கும் பாடல்கள். முதல் இரண்டடிகளில் சிலேடை பொருள்கள் அமைந்துள. பன்னிரண்டடிகளில் மதுரைப் பெருமானுடைய பல சிறப்புக்களையும் பேசுகின்றார். சிலேடைப் பொருள் விளக்கம் அவ்வப்பாடல்களை அடுத்துத் தரப்பட்டுள்ளது. viii. 575/1917/II.

O31,1

## தர்க்கம்

கந்தசாமி தேசிகர், தஞ்சை

1644. i. வள்ளிக்கும் தெய்வானைக்கும் சக்களத்தி போராட்டம்—தர்க்கம்; முதற் பதிப்பு; ii. கே.எம். பரலசுப்பிரமணிய பிள்ளை, தஞ்சாவூர்; ஸ்ரீ கிருஷ்ண விலாசம் அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி iii. ஏப்ரல், 1917; iv. செ.மூ.ப. 8; v. 22×13 செ.மீ.; vi. 0—0—6; vii. முருகனின் இரு மனைவியரான வள்ளி, தெய்வானை இருவருக்குமிடையே நடந்த வாக்குவாதத்தை

விவரிக்கின்றது. சுப்பிரமணியருக்கும் தெய்வானைக்கும் நிகழ்ந்த தர்க்கமும் தரப்பட்டிருக்கிறது. 'திருவெற்றிலைகு சுங்கை' என வரும் காவடிச் சிந்து மெட்டிலும், நொண்டிச் சிந்து மெட்டிலும் இதில் பாடல்கள் உள. viii. 113/1917/II.

O31,1

## தாலாட்டு

**கணேச பண்டிதர், வ. ஞா., யாழ்ப்பாணம், வலன.வ**

1645. i. திருக்குறள் அதிகாரச் சாரமாகிய நன்னெறித் தாலாட்டு; ii. ஆர். அரியநாயகம் பிள்ளை, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1919; iv. செ.மூ.எ. 6+210+1; v. 21×14 செ.மீ.; vi. 0—4—0; vii. திருக்குறளின் பல தெளிந்த கருத்துக்கள் இதில் தாலாட்டுப் பாடலாகத் தரப் பட்டுள்ளன. ஒவ்வொரு தாலாட்டுக் கண்ணியிலும், ஒரு திருக்குறள் பொதிந்துள்ளமை அறிந்தின்புறத் தக்கது. 133 அதிகாரத்திலுமாக 208 குறள்களைத் தெரிந்தெடுத்து, தாலாட்டு மெட்டில் அமைத்துள்ளார் ஆசிரியர். சென்னை தி. சபாபதி பிள்ளை முதலியோர்கள் தந்த சாற்றுக் கவிகளுடன் கூடியது. viii. 828/1919/III.

O31,1

1646. i. **மாரியம்மன் தாலாட்டு**: முதற் பதிப்பு; ii. கே. செல்வ ரங்கம் அண்டு கம்பெனி, சென்னை; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. செ.மூ.ப. 48; v. 14×11 செ.மீ.; vi 0—1—0; vii. மாரியம்மன் மீது பாடப் பெற்ற பக்திப் பாடல்களைக் கொண்டது, இப்புத்தகம். 'எத்தேசங்களிலும் இடைவிடாமற் சிந்தித்து வரும் மாரியம் மன் தாலாட்டு' என்பது இதன் முழுப்பெயர். இந்நூலில் மாரியம்மையின் வல்லபங்களைப் பலவகையாகப் பாராட்டிக் கவிஞர் பாடுகின்றார். viii. 786/1918/III.

O31,1

1647. i. ராமர் தாலாட்டு (ஸ்ரீரங்க நாயகர் திரு ஊசல்): முதற் பதிப்பு: ii. பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர்; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. நவம்பர், 1917; iv. செ.மூ.எ. 31; v. 14×11 செ.மீ.; vi. 0—0—3; vii. இராமபிரானின் மீது பாடப்பெற்ற தாலாட்டுப் பாடல்களு[illegible] ஸ்ரீரங்கநாயகர் மீது பாடப் பெற்ற திரு ஊசல் பாடல்க[illegible] இதில் உள்ளன. சிறு குழந்தையைத் தொட்டிலில் இ[illegible] தாய்மார் ஆட்டும்போது பாடும் பாடல் வகைத் தாலா[illegible] குழந்தையின் சிறப்புக்களைக் கூறும் போது தெய்வக் கு[illegible]

யாகப் பாவித்துப் பாடுதலும் மரபாகும். இங்கே இராமவதார நிகழ்ச்சிகள் பலவும் எடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. 'ஊசல்' என்பது பெரிய குழந்தைகள் தாமே ஊஞ்சலில் ஏறியாடும் விளையாட்டினைக் குறிப்பதாகும். viii. 1029/1918/III.

O31,1

**ராமஸ்வாமி அய்யர்**

1648. i. தாலாட்டு : முதற் பதிப்பு; ii. எஸ். வெங்கடாசல சாஸ்திரி, பாலக்காடு; வித்தியா கல்பதரு அச்சுக்கூடம், கல்ப்பாத்தி; iii. அக்டோபர், 1919; iv. செ.மூ.ப. 7; v. 15×12 செ.மீ.; vi. 0—0—6; vii. கண்ணனின் பிறப்பினைப் பற்றியும், அவரது பெருமையினைப் பற்றியும் புகழ்ந்து பாடும் தாலாட்டுப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். viii. 464/1919/IV.

O31,1

## திருப்புகழ்

**அருணகிரிநாதர்**

i. திருப்புகழ் (தொ.எ.1672 பார்க்க): முதற் பதிப்பு; ii. ஆ.மெ. மு. சாமிநாதஞ் செட்டியார்; அலெக்ஸாண்ட்ரா அச்சாபீஸ், கும்பகோணம்; iii. எப்ரல்; 1917; iv. செ.மூ.எ. 42; v. ..; vi. ..; vii. முருகனைக் குறித்து எழுதப்பெற்ற பாடல்கள் இதில் அடங்கியுள்ளன; திருவேரகத் திருப்புகழ்களே பெரும்பான்மை. திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, குன்றுதோறுடல். பழமுதிர்ச் சோலை ஆகிய தலங்களுக்குரிய திருப்புகழ்களும் ஒவ்வொன்று சேர்க்கப்பட்டுள்ளன. viii. 259/1917/II.

O31,1

1649. i. திருப்புகழ்—முதற் பாகம் : இரண்டாம் பதிப்பு; ii. மு. ரா. கந்தசாமிக் கவிராயர், மதுரை; எக்ஸெல்ஸியர் அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஆகஸ்ட், 1918; iv. செ.மூ.எ. 637; v. 21×14 செ.மீ.; vi. 2—8—0; vii. பல புண்ணியத் தலங்களில் கோயில் கொண்டுள்ள முருகனைப் புகழ்ந்து அருணகிரிநாதரால் பாடப்பெற்றதாகும் இத்திருப்புகழ். இப் புத்தகம் நூலின் முதல் பாகம் ஆகும். சந்தக் குழிப்பும், அரும்பதவுரையும் அடங்கிய திருத்தமான புதுப்பதிப்பாகும் இது. திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம் இந்நூலின் முதற்கண் அமைந்துள்ளது. நூலாசிரியரின் சரித்திரச் சுருக்கமும், திருவண்ணாமலைத் திருக்கோயிலின் படமும் இதன்கண் உண்டு. திருப்புகழ்ப் பாடல்களின் முதற்பாகமாகிய இதன்கண் காப்பு உட்பட 637 செய்யுட்கள் அடங்கியுள்ளன. தல அகராதி, பாட்டு முதற்குறிப்பு அகராதி ஆகியவையும் அடங்கியுள்ளன. பதிப்பாசிரியர் முந்தியத் திருப்புகழ்ப் பதிப்புக்களின் நிலைமையைப் [illegible]திப்புரையில் விளக்கியுள்ளார். பெண்களின் தனத்தைக் [illegible]ரிக்கும் முலை என்பதனை 'முகை' எனத்தாம் மாற்றி[illegible]த்தலையும் அதற்குரிய காரணத்தையும் விளக்கியுள்ளார். [illegible] 203/1918/IV.

O31,1

1650. i. திருப்புகழ்: திருத்திய பதிப்பு ; ii. ஸ்ரீகௌமார சமயத் திருப்புகழ்ச் சங்கம், சென்னை ; இந்தியன் பிரிண்டிங் பிரஸ்; சென்னை; iii. 1918; iv. செ. மீ. ப. 16 ; v. 18×14 செ.மீ.; vi. 0-1-0; vii. அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழி லிருந்து தொகுத்த பாடல்களைக் கொண்டது இவ்வெளியீடு. வருகைப் பதிகங்கள், அருள் வேண்டல் பதிகங்கள் என்னும் இருபெருந் தலைப்புகளில் பாடல்கள் அடைவுபடுத்தப் பெற்றுள் ளன; viii. 345/1918/IV.

O31,1

1651. i. திருப்புகழ்—முதற் பாகம் மூலமும் உரையும்: நான்காம் பதிப்பு ; ii. புருஷோத்தம் அண்டு கம்பெனி, சென்னை ; ஸ்ரீலட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1918 ; iv. செ. மூ. உ. எ. 100 ; v. 16×13 செ. மீ. ; vi. 0-12-0; vii. திருப்புகழின் நூறு பாடல் களின் மூலமும் உரையும் இப்புத்தகத்தில் அடங்கியுள்ளன. இவ்வுரையினை எழுதியவர் மாங்காடு வடிவேலு முதலியார் ஆவர்; viii. 365/1918/IV.

O31,1

1652. i, திருப்புகழ்: முதற் பதிப்பு; ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ, சென்னை; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1918; iv. செ. மூ. எ. 200; v. 13×11 செ. மீ. ; vi. 0-6-0; vii. திருப்புகழில் இருநூறு பாடல்களைக் கொண்டது இப்புத்தகமாகும். பாடல்களுக்குரிய சந்தக் குழிப்புகள் அந்தந்தப் பாடலின் தொடக்கத்தில் அமைக் கப்பட்டுள்ளன. viii. 58/1919/I.

O31,1

1653. i. திருப்புகழ்: இரண்டாம் பதிப்பு; ii. மு. ரா. கந்த சாமிக் கவிராயர், மதுரை ; எக்ஸெல்ஸியர் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. நவம்பர், 1918; iv. செ. மூ. எ. 611; v. 21×14 செ. மீ. ; vi. 2-8-0 ; vii. அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ் தொகுப்பில் இது இரண்டாம் புத்தக மாகும். சந்தக் குழிப்பும், அரும்பதவுரையும் அடங்கிய திருத்த மான புதிய பதிப்பாகும். இந்நூல் கிடைத்த சில பிரதிகளை வைத்துப் பரிசோதித்து இயன்றவரை திருத்தங்கள் செய்துள் ளார் பதிப்பாசிரியர் இதற்கு முன் அச்சிடப்பெறாத இரண்டு செய்யுட்கள் இதன் இறுதியில் முதன் முறையாகச் சேர்க்கப் பட்டுள்ளன. அங்கங்கே அடிக்குறிப்பில் அரும்பதக் குறிப்புரை யும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஸ்தல அகராதி, பாட்டு முதற் குறிப்பு அகராதி ஆகியவையும் சேர்க்கப்பட்டுள்ளன. ஸ்தலப் பாடல்களுக்குப் பின்னர் பொதுப்பாடல்கள் தொகுத்துத் தரப் பட்டுள்ளன. viii. 166/1919/I.

O31,1

1654. i. திருப்புகழ்: முதற் பதிப்பு; ii. பீர்லஸ் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1920; iv. செ. மூ. ப. 35; v. 18×12 செ.மீ.; vi. 0–1–0; vii. திருப்புகழ்ப் பாடல்களில் சில இந்நூலில் உள்ளன; திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரமும் இதன்கண் உண்டு; viii. 104/1920/IV.

O31,1

1655. i. திருப்புகழ் சுவாமி மலை: முதற் பதிப்பு; ii. எண். எஸ். இரத்தினசபாபதி, சென்னை; iii. ஜூலை, 1920; iv. செ. மூ. ப. 30; v. 18×12 செ. மீ.; vi. 0–1–0; vii. முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளில் ஒன்றான சுவாமிமலையினைப் பற்றிய திருப்புகழைத் தொகுத்துஇதில் வெளியிடப்பட்டுள்ளது. திருவேரகச் சிறப்பும் இதனகண அமைந்துள்ளது; viii. 103/1920/III.

O31,1

1656. i பஞ்சரத்னத் திரு புகழ்; ii. பகடால. முனிரத்தினம் நாயுடு, இராயவேலூர், கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், வேலூர்; iii. 1916; iv. செ.மூ.எ.; v. 14×11செ.மீ.; vi....; vii. அருண கிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய திருப்புகழ் என்னும் பக்தி மாலையின் ஒரு சிறு தொகுப்பு நூல். "மடி வயிற்று மகன் போல" எனத் தொடங்கும் பாடல் தொடக்கமாக ஐந்து பாடல்கள் கொண்டது இப்பஞ்சரத்தினம்; viii. 839/1916/1.

O31,1

1657. i. பஞ்சரத்னத் திருப்புகழ்; ii. ஜி. எம். மீனாக்ஷிசுந்தர முதலியார், மதுரை; சூரியோதயம் பிரஸ், மதுரை; iii. செப்டம்பர், 1917; iv. செ. மூ. ப. 8; v. 13×11 செ. மீ. vi. 0-0-6; vii. ......; viii 349/1917/IV.

O31,1

1658. i. பஞ்சரத்னத் திருப்புகழ்: முதற் பதிப்பு; ii. பி. நாரா யணசாமி பிள்ளை அண்டு பிரதர், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1918; iv. செ. மூ. எ. 40; v. 13×11 செ. மீ.; vi. 0–0–3; vii. ......; viii. 1109/1918/III.

O31,1

1659. i. பஞ்சரத்னத் திருப்புகழ்: முதற் பதிப்பு; ii. நா. கிருஷ்ண சாமி நாயுடு, மதுரை; எக்ஸெல்ஸியர் அச்சகம், மதுரை; iii. ஜூன், 1919; iv. செ. மூ. ப. 8.; v. 14×11 செ. மீ.; vi. 0–0–3; vii. ......; viii. 99/1919/III.

O31,1

1660. i. இராமசெயத் திருப்புகழ்: முதற் பதிப்பு; ii. சி. எஸ். முருகேச முதலியார், சென்னை; கணேச அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1918; iv. செ. மூ. உ. எ. 73; v. 23×15 செ. மீ; vi. 0–12–0; vii. இராமாயணத் திருப்புகழ் என வழங்கும் இராமசெயத் திருப்புகழின் பாலகாண்டமும், அயோத்தியா காண்டமும் தரப்பட்டுள்ளன. மூலமும் உரையும் உண்டு. நம்மாழ்வார் காப்பும், அனுமார், காப்பும் அவையடக்கமும் நூன் முகப்பில் அமைந்துள்ளன. பாடல்களுக்கு உரிய சந்தக்குழிப்புகளும் அவ்வப்பாடல் முதலில் கொடுக்கப் பட்டுள்ளன. இதற்கு உரை எழுதியவர் செ. மு. வேணு முதலியார் ஆவர்; viii. 600/1918/I.

031,1

**கிருஷ்ணசாமிதாஸ், வா.**

1661. i. ராமாயணத் திருப்புகழ்; ii. கு. ஆ. கிருஷ்ணசாமி முதலியார், இராஜ ராஜேஸ்வரி பிரஸ், கும்பகோணம்; iii. 1916; iv. செ. மூ. ப. 28; v. 21×13 செ. மீ.; vi. 0–4–0; vii. ராமாயணத்தில் க்ஷீராப்யதிசனம் முதல் பாதுகை பட்டாபிஷேகம் வரையிலுள்ள பாகம் இந்நூலில் வ்விரிக்கப்பட்டுள்ளது. கதிர்வேல் என்பாரது சாற்றுக்கவியும் இதில் இடம் பெற்றுள்ளது. திருப்புகழ்ச் சந்தத்தில் காவடிச் சிந்துமெட்டில் அமைந்தது. இதன் ஆசிரியர் ஜெயங்கொண்டபுரத்தில் 'சந்தச் சரபம்' எனப் புலவர்களால் போற்றிப் புகழப்பட்டவராவர்; viii. 923/1916/II.

031,1

**சபாபதிபிள்ளை, வெ. நா., விஜயபுரம்**

1662. i. ராமாயண திருப்புகழ் லங்காதகன காவடிச் சிந்து: முதல் பதிப்பு; ii. கு. அ கிருஷ்ணசாமி முதலியார்; இராஜராஜேஸ்வரி பிரஸ், கும்பகோணம்; iii. ஆகஸ்ட், 1916; iv. செ. மூ. ப. 24; v. 21×13 செ. மீ.; vi. 0–4–0; vii. இராமாயணக் கதையில் வருகின்ற நிகழ்ச்சியான, அநுமன் இலங்கையைத் தீக்கிரையாக்கிய காட்சியினை விளக்கும் காவடிச்சிந்துப் பாடல் களைக்கொண்டது. திருப்புகழ்ச் சந்தத்திலும் பாடல்கள் உள, ஒயிற்கும்மி, லாலி மெட்டுகளிலும் இறுதியில் சில பாடல்கள் உள; viii. 561/1916/IV.

031,1

**துரைசாமி நாயுடு, உடையார்பாளையம்**

1663. i. பாண்டவாள் சரித்திர பாரத திருப்புகழ்: முதற் பதி[illegible] ii. இ. ராமசாமிக்கோனார், மதுரை; எக்ஸெல்ஸியர் பி[illegible] மதுரை; iii. டிசம்பர், 1917; iv. செ. மூ. ப. 24; v. 2[illegible] செ. மீ.; vi. 0–3–0; vii. மகாபாரதத்தில் வரும் பா[illegible]

களைப்பற்றியும் குறிப்பாக துரோபதை துகிலுரியும் பகுதியும் காவடிச்சிந்தும் பாடல்களால் விளக்கப்பட்டுள்ளன. கதைப் போக்கினைப் புலப்படுத்தும் தலைப்புகள் இடையிடையே உண்டு. viii. 189/1918/I.

031,1

1664. i. பாண்டவாள் சரித்திர பாரதத் திருப்புகழ்: முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. இ. ராமசாமிக் கோனார், மதுரை; எக்ஸெல் ஸியர் பிரஸ், மதுரை; iii. 1919; iv. செ. மூ. ப. 24; v. 21×14 செ. மீ.; vi. 0-3-0; vii. பாரதக் கதையில் வரும் பாண்டவர்களின் சரித்திரம் பற்றி இதில் காவடிச் சிந்துப்பாடல்கள் மூலம் சித்தரிக்கப்பட்டுள்ளது. இதில் திரௌபதி திருக்கல்யாணம் வரையுள்ள சரிதமே உளது. எனவே, ஆசிரியர் இதனை முதற் பாகம் என்று குறிப்பிட்டுள்ளார் viii. 105/1919/III.

031,1

### தேவராஜ முனிவர்

1665. i. ஜிநேந்திர ஞானத்திருப்புகழ்: முதற் பதிப்பு: ii. சக்கர வர்த்திநாயினார், மேல்மின்னல்; அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக்கூடம், ஆரணி; iii. ஜூன், 1920; iv. செ. மூ. ப. 79; v. 19×13 செ. மீ.; vi. 0-8-0; vii. இந்நூல் அருக தேவன் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய பல தலங்களின் சிறப்புக்களையும் அக்கடவுள் மகிமைகளையும் விளக்கமாகக் கூறுகிறது. பொருள் விளக்கத்துடன் கூடியது. viii. 572/1920/III.

031,1

### விசுவநாதையர், எ. எஸ்.

1666. i. ஆண்டவன் திருப்புகழும் பல தலங்களின் திருப்புகழும்: முதற் பதிப்பு; ii. சின்னச்சாமி ஜோசியர்; சச்சிதாநந்தம் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1918; iv. செ. மூ. ப. 8; v. 18×13 செ. மீ.; vi. இலவசம்; vii. திருவல்லிக்கேணியில் சின்னச்சாமி ஜோசியர் இல்லத்தில் எழுந்தருளியிருக்கும் ஆண்டவனாகிய, சுப்பிரமணியசுவாமி மீது பாடப்பெற்ற பாடல் களும் மற்றப் புண்ணிய தலங்களைப் பற்றின திருப்புகழும் இதில் அடங்கியுள்ளன. முருகப்பெருமான் திருவுருவப்படத் துடன் கூடியது. அனைத்தும் இசைப்பாடல்கள். viii. 310/1918/IV.

031,1

## தூது

### கவிராசன் பண்டாரம், தென்காசி

i. பெரியசாமி செம்புலிச் சின்னணைஞ்சுத் துரையவர்கள் பேரில் விறலி விடு தூது (தொ. எ. 2465 பார்க்க); ii. பி. சி. சி. பாண்டியன் அண்டு பி. வி. சி. பாண்டியன்; மதுரைத் தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ. மூ. ப. 58; v. ........................; vi. ..................; vii. பெரியசாமி செம்புலிச் சினணைஞ்சுத்துரையவர்கள்மீது தென்காசிக் கவிராச பண்டாரமவர்களால் பாடப்பட்ட காதற் பிரபந்தம். கலிவெண்பாவில் அமைந்தது. தென்கிழுவைப் பெரியசாமித்துரையின் புகழ்களைப் பலவிதமாக பாராட்டிப் பேசுகிறது. அவனுக்குரிய தசாங்கங்களும் விவரிக்கப்பட்டுள்ளன. அவர் செய்த தான தருமங்கள் முதலியனவும் குறிப்பிடப் பட்டுள்ளன. viii. 49/1916/II.

031,1

i. சவ்வாது விடு தூது (தொ. எ. 2465 பார்க்க); ii. பி. சி. சி. பாண்டியன் அணடு பி. வி. சி. பாண்டியன் ; மதுரைத் தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ்; iii. 1916; iv. செ.மூ.ப. 13 ; v. .... .. ........ .....; vi. ............... .. ..; vii. சிலை குற்றாலலிங்கசுவாமி கோயில் தூணில் சிலை வடிவில் காட்சியளிக்கும் திரிகூட ராஜகோபால துரை அவர்கள் மீது பாடப்பெற்றதுஇந்நூல். viii. 49/1916/II.

031,1

### சுந்தரநாத பிள்ளை, அமிர்தம், திரிசிரபுரம்

1667. i. பொன் விடு தூது: முதற் பதிப்பு; சுந்தரநாத பிள்ளை, அமிர்தம், திரிசிரபுரம்; வெட்னெஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப் பள்ளி; iii. மார்ச், 1917; iv. செ. மூ. எ. 2+350+1; v. 21×14 செ. மீ.; vi. 0-6-0; vii. திருவாடு துறை ஆதீனத்துப் பண்டாரசந்நிதியார் அம்பலவாண தேசிகர் அவர்களைப்பற்றிப் பாடப்பெற்ற நூல். திருவரங்கம் தமிழ்ப் புலவர் குரு. சுப்பிர மணிய ஐயர் முதலியோர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடி யுள்ளனர். viii. 39/1916/II.

031,1

## தெம்மாங்கு

### சுப்பராய பிள்ளை, ம., நிமிரி

1668. i. இருளகலுவன் தெம்மாங்கு முதற்பாகம்: முதற் பதிப்பு ii. சுப்பிரமணிய விலாசம் பிரஸ், சென்னை; iii. ஜூன் 1919; iv. செ. மூ. ப. 8; v. 21×14 செ. மீ.

vi. 0–0–6. vii. கானுங்காடு, கடுவனூர், பெருங்குளத்தூர் ஆகிய காடுகளில் வசித்திருந்த பெயர் பெற்ற கள்ளனுகிய இருளகனுவனின் வீர வரலாற்றினைத் தெம்மாங்குப் பாடல்கள் மூலமாகத்தரும் நூல். இவன திருட்டுத்தொழிலில் ஈடுபட்டும் சிறைவாசம் பெற்றும், சிறையிலிருந்து தப்பிச்சென்று பிடிபட்டும் தன் வாணுளை வீணுளாக்கினவன். viii. 860/1919/IV.

O31,1

## நவமணிமாலை

**கந்தசாமிக் கவிராயர், மு. ரா.**

i. சண்முகாநந்த நவமணிமாலை (தொ. எ. 565 பார்க்க), ii. மு. ரா. கந்தசாமிக் கவிராயர், மதுரை; டாட்ஸன் பிரஸ், திருச்சி; iii. டிசம்பர், 1916; iv. செ. மூ. எ. 9; v. ....; vi.....; vii. ஸ்ரீசண்முகாநந்த குருவின் மகிமையைப் புகழும் ஒன்பது துதிப்பாடல்கள் கொண்ட சிறு நூல். viii. 126/1917/I.

O31,1

**கிருஷ்ணமாசாரியர், பி. ஆர்.**

i. நவமணிமாலை (தொ. எ. 1451 பார்க்க) : முதற் பதிப்பு; ii. தமிழ்ச்சங்க முத்திரசாலை, மதுரை; iii. நவம்பர், 1920; iv. செ. மூ. எ. 1+9+1; v. ; vi. ; vii. ஆண்டிப்பட்டி சமஸ்தானத் தலைவரும் மதுரைத்தமிழ்ச் சங்க உபாக்கிராஸனுதிபதியுமாகியபெருங்கொடை வள்ளல் பெத்தாச்சி செட்டியவர்களைப் புகழ்ந்து பாடப்பெற்ற இரட்டைமணிமாலைநவமணிமாலை ஆகிய பிரபந்தங்கள் இதன்கண் அடங்கியுள்ளன. மதுரைத் தமிழ்சங்கத்துச் சைவ நூற்பரிசோதகரும் திருவாவடுதுறை ஆதீன வித்வானுமாகிய ஸ்ரீமத். சே. ர. சுப்பிமணியக்கவிராயர் சாத்துக்கவியுடன் கூடியது. viii. 668/1920/IV.

O31,1

**குமாரசுவாமி பிள்ளை, த.**

1169. i. கயிலாயநாதன் நவமணிமாலை; ii. பாலசுப்பிரமணிய பிள்ளை, சிதம்பரம்; ஸ்ரீகுஞ்சிதசரண பிரஸ், சிதம்பரம்; iii. 1917; iv. செ. மூ. எ. 1+9+1; v. 22×13 செ. மீ.; vi......; vii. கடக்கைவிநாயகநல்லூரில் எழுந்தருளியிருக்கும் கயிலாயநாதன் சிறப்புக்களைப் புகழ்ந்து பாடுவது. ஒன்பது கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் ஆயது. viii. 737/1917/III.

O31,1

**சிவப்பிரகாச சுவாமிகள்**

1670. i. இரங்கோன் போகலயினின் கண்திருக்கோயில் கொண்டிலகும் ஸ்ரீ பெரியபாளையத்தம்மனின் மீது செழும்பாத் தொடையல்; ii. ஸ்ரீஜெய விநாயக சிவப்பிரகாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1917; iv. செ. மூ. எ. 1+9+3; v. 21×14 செ. மீ.; vi.......; vii. இந்நூலாசிரியருக்குச் சிவப்ரகாச தேசிக சுவாமிகள் என்னும் பெயர் உண்டு. இவர் பாடிய பெரியபாளையத்தம்மை துதிப்பாட்டு நவமணிமாலையாக உள்ளது. இந் நவமணிமாலைப் பாடல்கள் பன்னிரு சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தப்பாவால் அமைந்துள்ளன. ஈற்றில் ஒரு கீர்த்தனையும், போற்றி விருத்தம், வாழிவிருத்தம் எனனும் பாடல்களும் உள. viii. 833/1917/III.

O31,1

**சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்**

i. பழமலைநாதர் பிக்ஷாடன நவமணிமாலை (தொ. எ. 1682 பார்க்க): திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. கொ. செல்வ ரங்கம் அண்டு கோ.; மனோன்மணி விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1918; iv. செ. மூ. எ. 1-9; v.....; vi.....; vii. பழமலைநாதர் பிச்சாடன வேடங்கொண்ட நிலை யினைப்பற்றிப் பாடப்பெற்ற ஒன்பது பாடல்களைக் கொண்டது இப்பாமாலை. viii. 1064/1918/III.

O31,1

**சுப்பிரமணிய அய்யர், பி. வி.**

1671. i. குன்றக்குடி நவமணிமாலை: முதற் பதிப்பு; ii; சுல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர்; ii. மார்ச், 1919; iv. செ. மூ. எ. 6+9+1; v. 14×11 செ.மீ.; vi. 0—1—0; vii. இதில் குன்றக்குடியில் விளங்கும் சுப்பிரமணியக் கடவுளைக் குறித்து எழுதப்பெற்ற துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன. திரு. நயம் அ. நரசிம்மபாரதி, கோவிலூர் சாமிநாத பிள்ளை முதலியோர் பாடிய சாற்றுக் கவிகள் இதன்கண் உள. குன்றைமா நகர்வநத் கொன்றைவேணியர்தந்த குன்றுதோறுறை கந்தனே" என்பதனை ஒவ்வொரு பாடலும் ஈற்று மகுடமாகக் கொண்டு அமைந்துள்ளது. viii. 853/1919/III.

O31,1

1672 i திருவேரகமென்னும் சுவாமிமலை நவரத்னமாலையும் திருப்புகழும்: முதற் பதிப்பு; ii. ஆ. மெ. மு. சாமிநாதஞ் செட்டியார்; தேவகோட்டை; அலெக்ஸாண்ட்ரா அச்சாபீஸ், கும்ப

கோணம் iii. எப்ரல், 1917; iv. செ.மூ.எ· 9; v. 19×12 செ.மீ. vi.......; vii. முருகனைக் குறித்து எழுதப் பெற்றப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியடியும் 'வளர்சாமி நாத குருவே' என்று இறும் ஒன்பது ஆசிரிய விருத்தங்களால் ஆகியது. viii. 259/1917/II.

O31,1

நாமாவளி

1673 i. அஷ்டோத்ரஸத நாமாவளி; ii. எம்.மாசிலாமணி முதலியார், சென்னை; ஆனந்த போதினி அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1919; iv. செ.மூ.ப. 32; v. 8×13 செ.மீ.; vi. 0–1–0; vii. விநாயகர் சோடச நாமாவளி, நிர்க்குண அஷ்டோத்ர சத நாமாவளி, பகவத் பாதாசாரியாய அஷ்டோத்ர சத நாமாவளி, தோடக சந்த ஸ்தோத்திரம், சரஸ்வதி அஷ்டோத்ர சத நாமாவளி, விஷ்ணு அஷ்டோத்திர சத நாமாவளி, இலக்குமி அஷ்டோத்திர சத நாமங்கள், கிருட்டிணஷ்டோத்திர நாமங்கள் ஆகியன இதன்கண் அடங்கியுள்ளன. இவை அருச்சனைக்கெனவமைந்த துதி மந்திரங்களாகும். viii. 208/1920/I.

O31,1

இரத்தினம், ஆரூர்

1674. i நாமாவளி: முதற் பதிப்பு; ii· ஆர்.நடேச அய்யர், சென்னை; பி. ஆர். இராம ஐயர் கம்பெனி, சென்னை; iii. பிப்ரவரி, 1920; iv. செ.மூ.ப. 16; v. 12×10 செ.மீ·; vi. ......; vii. இதில் திருமாலின் திருப்பெயர் பற்றிய தோத்திரப் பாடல்கள் அடங்கியுள்ளன. viii. 35/1920/II.

O31,1

இராமச்சந்திர முதலியார், வி.கே., வேலூர்

1675. i. அற்சனுஷ்தோத்தர சத நாமாவளி: இரண்டாம் பதிப்பு; ii. வி.கே. இராமச்சந்திர முதலியார், வேலூர்; பச்சையப்பா பிரஸ், வேலூர்; iii. பிப்ரவரி, 1920; iv. செ.மூ.ப. 12; v. 11×8 செ.மீ.; vi. இலவசம்; vii. இந்நூல் இராமனைப் பற்றிய துதிகளைக் கொண்டுள்ளது. அர்ச்சனைக்கும் பாராயணத்திற்கும் உபயோகமாகும் வகையில் இயற்றப் பெற்றது. viii. 715/1920/I.

O31,1

1676. i. அஷ்டோத்தர சத நாமாவளி: முதற் பதிப்பு; ii. பு.க ஸ்ரீநிவாஸாசாரியார், வேலூர்: பச்சையப்பன் அச்சியந்திரசாலை, வேலூர்; iii. ஜனவரி, 1919; iv. செ. மூ. ப. 12; v. 17×11 செ.மீ.; vi. இலவசம்; vii. ஸ்ரீஇராமனுடைய மற்ற 108

பெயர்களையும் இப்புத்தகத்தில் ஆசிரியர் குறிபிட்டுள்ளார். இராமாயணம் பாராயணம் செய்ய விரும்புகிறவர்கள் எளிதில் வசனம் போன்ற செய்யுள் நடையில் சில நிமிடங்களில படித்து முடித்துக் கொள்ளும்படி இந்நூல் இயற்றப்பட்டது. viii. 493/1919/I.

O31,1

இராமலிங்க அடிகளார்

1677. i. சிவ நாமாவளித் திரட்டு; ii. நற்றமிழ் விலாசம் பிரஸ், சென்னை; iii. 1919; iv. செ. மூ. ப. 36; v. 18×10 செ.மீ vi........ . ; vii. இந்நூலின் முதலில் அமைந்துள்ள ஓரிருபாடல்களைத் தவிர மற்றையண இராமலிங்க அடிகளார் அவர்களால் பாடப்பட்டன. நாமாவளி, ஆனந்தக் களிப்பு, கண்ணி, கும்மி மெட்டுகளில் அமைந்த பாமாலைகளும் முறை யீடுகளும் தெரிந்தெடுத்துத் தரப்பட்டுள்ளன. viii. 336/1920/I.

O31,1

இராஜகோபால் ஐயர், பி.ஆர்., பாபநாசம்

i. உயிர் வருக்க நாமாவளி (தொ. எ. 1701 பார்க்க); ii.பி. ஆர். இராஜகோபால ஐயர், பாபநாசம்; கிருஷ்ணவிலாச. பிரஸ், கும்பு கோணம்; iii. 1919; iv. செ.மீ.எ. 1; v.....;vi.....; vii. உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டும் முறையே அடிகளின் முதலெழுத்தாக வரத் தொடுக்கட்பட்ட தோத்திரப்பாக்களைக் கொண்டது. முருகப்பெருமானின் அருள்திறங்களைப் புகழ்ந்து நாமாவளியாகப் பாடப்பெற்றது இந்நூல். viii. 823/1919/IV.

O31,1

வைத்திநாத சர்மா, இ.ராம.

1678. i. சிவராம நாமாவளி: முதற் பதிப்பு ; ii. என். ஆர். கிருஷ்ணசாமி ஐயர், நாகபட்டிணம்; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகபட்டிணம்; iii. மாாச், 1920; iv. செ.மூ.எ. 40+30; v. 15×12 செ.மீ.; vi 0–0–6; vii. இதில் சிவனைப்பற்றியும் இராமனைப்பற்றியும் பாடப்பெற்ற துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன சிவ நாமாவளியில் சிவம் என்றும் ராம நாமாவளியில் ராம் என்றும் நாமாவளிகள் முடிவுறுகின்றன. viii. 96/1920/II.

O31,1

ஸத்குருஸ்வாமிகள், திருவண்ணாமலை

1679. i. திருநாம சங்கீர்த்தனை: முதற் பதிப்பு ; ii. வ. நா. நடேசமுதலியார் பிள்ளை, சிதம்பரம்; விறாடகசுந்தர விலாஸ

அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மே, 1917; iv. செ.மூ.எ.201; v. 14×11 செ.மீ.; vi.........., vii. சிவனைக் குறித்து எழிபடும் சிறப்பினை ஆசிரியர் இதில் கூறுகிறார். நாமாவளி முறையில் பாடல்கள் அமைந்துள்ளன. இறைவன் பெருமையை எடுத்துக் கூறுவதோடு பற்பல தத்துவ உண்மைகளும் பேசப்பட்டுள்ளன. ஸத்குரு ஸ்வாமிகளின் திருவுருவப் படமும் முதலில் கொடுக்கப் பட்டிருக்கிறது. viii. 748/1917/II.

O31,1

## நான்மணிமாலை

### இராமலிங்கம் பிள்ளை, தி. அ. சோ.

1680. i. திரிசிரபுரம் மேல வயலூர் முருகன் நான்மணிமாலை; ii. டி எஸ். தியாகராஜ பிள்ளை, மேல வயலூர்; நடராஜ பிரஸ், திருச்சி; iii. மார்ச், 1919; iv. செ.மூ.எ. 7+1+40; v. 14×11 செ.மீ.; vi. 0-0-3; vii. இதில் திருச்சியைச் சார்ந்த மேல வயலூர் முருகனைக் குறித்துப் பாடப் பெற்ற பக்திப் பாடல்கள் அடங்கியுள்ளன. வெண்பா, கட்டளைக்கலித்துறை, விருத்தம், அகவல் ஆகிய பாவகைகள் முறையே வர நாற்பது பாடல்கள் அடங்கிய நூலுக்கு நான்மணிமாலை என்று பெயர். இந்நூலின் 26-ம் பாடலில் முருகனைத் ''திராவிட முன்னவன்'' என்று இந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். viii. 206/1919/II.

O31,1

### கோவிந்தராசன், மயிலை

1681. i. திரு மயிலை நான்மணிமாலை: முதற் பதிப்பு; ii. எம் சீனிவாச நாயகர், சென்னை; கணேச அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1918; iv. செ.மூ.எ. 40; v. 15×12 செ.மீ. vi. 0-2-0; vii. மயிலாப்பூரின் சிறப்பினைப் பற்றியும் அங்கு கோயில் கொண்டுள்ள கபாலீசர் பெருமை பற்றியும் நான்மணி மாலையாக மிகவும் அழகாக விளக்கியுள்ளார். நான்மணிமாலை என்பது தமிழ்ப் பிரபந்தவகை தொண்ணூற்றாறினுள் ஒன்றாகும். இது நால்வகை மணிகொண்டு நிரல்படக் கோத்த மாலை போன்று நால்வகைப் பாக்களை நிரல்பட வைத்து யாத்த நூலிற்குப் பெயராயிற்று. மயிலை என்பது மயிலாப்பூரின் மரூஉ; தொண்டை நாட்டுப் பாடல்பெற்ற தலங்களில் ஒன்று. வடக்கில் திருவொற்றியூரையும், தெற்கில் திருவான்மியூரையும் பெற்றுள்ளது. உமாதேவியார் மயிலுருவாக இருந்து உமாபதியாரைப் பூசித்தலின் மயிலாப்பூர் என்று பெயர் பெற்றது. திருமயிலையைப் பற்றிய பழைய பிரபந்தங்களின் விவரங்களை முகவுரையில் காணலாம். viii. 149/1918/II.

O31,1

**சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்**

1682. i. நால்வர் நான்மணிமாலை (பெரியநாயகி விருத்தம் பெரியநாயகி கலித்துறை, பிக்ஷாடன நவமணி மாலை); ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ.; மனோன்மணி விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1918; iv. செ. மூ. எ. 40; v. 14×11 செ. மீ.; vi. 0-1-0; vii. சைவ சம யாச்சாரியர் நால்வரையும் போற்றித் துதிக்கும் துதி நூல். விருத்தகிரி பெரியநாயகியம்மை விருத்தம், பெரியநாயகி கலித்துறை, பிச்சாடன நவமணிமாலை ஆகியனவும் இதில் அடங்கியுள்ளன. viii. 1064/1918/III.

O31,1

**முருகேச உபாசகர், பெ., பிரம்பை**

1683. i. கோவிந்த நான்மணி மாலை: முதற் பதிப்பு; ii. அமெரிக்கன் டைமெண்ட் பிரஸ், சென்னை; iii. மே, 1919; iv. செ. மூ. எ. 1+40+1; v. 16×11 செ. மீ.; vi. இலவசம்; vii. இந்நூல் கோவிந்தனைப் பற்றிய துதிப் பாடல்கள் கொண்டது. கோவிந்தன் என்பார் நூலாசிரியரின் குருவாவர்; திருமால் அடியார். இவர் தம் வரலாறு குறித்தும் சிறப்புக்களைக் குறித்தும் ஆங்கங்கே பாடல்களில் சுட்டியுரைத்துள்ளார். viii. 218/1919/III.

O31,1

**வடிவேல்சாமி, ம., திரிசிராமலை யாதவபுரம்**

1684. i. காமாக்ஷியம்மன் நான்மணிமாலை: முதற் பதிப்பு; ii. அமிர்தம் சுந்தரநாத பிள்ளை, திருவாவடுதுறை; நடராஜா பிரஸ், திருச்சி; iii. மார்ச், 1918; iv. செ. மூ. எ. 5+1+40; v. 14×11 செ. மீ.; vi. 0-2-0; vii. ஓமாந்தூரில் விளங்கும் காமாட்சியம்மன் பேரில் பாடப் பெற்ற துதிப் பாடல்கள். இதற்குத் திருச்சி மீனாட்சிசுந்தரம் பிள்ளை உட்பட நால்வர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். நான்கு வகை மணிகளால் தொடுக்கப்பெற்ற மாலை போன் றலின் நான்மணிமாலை என்னும் பெயர்த்தாயிற்று. viii. 1059/1919/I.

O31,1

**வேதநாயகசுவாமி, எம்.**

1685. i. நெட்டூர் அப்பராணந்தர் நான்மணிமாலை (அப்ப ராணந்தர் தோத்திரப் பாமாலை]; ii. எம். வேதநாயக சுவாமி, சிந்து பூந்துறை; பெண்ட்லெண்ட் பிரஸ், திருநெல் வேலிப் பாலம்; iii. மார்ச், 1917; iv. செ. மூ. எ. 1+40; v. 18×11 செ. மீ.; vi. 0-2-0; vii. நெட்டூர் அப்பராணந்த சுவாமிகளைப் பற்றிய பாடல்களைக் கொண்டது.

சுவாமிகளின் வாழ்க்கைச் சரிதம் முதற்கண் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவர் இல்லறம் புகுந்து, பின் உலகியலைத் துறந்த துறவு நிலை ற்று ஞானியாக விளங்கியவர். சிந்துபூந்துறை நாராயணசுவாமி நாயுடு, ஆற்றூர் இராமலிங்கம் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இச்சுவாமிகளைக் குறித்த தோத்திரமாலை ஒன்றும் இறுதியில் உளது. viii. 1179/1917/I.

O31,1

1686. i. குழுமியாநந்த சுவாமிகள் நான்மணிமாலை ; ii, வெங்கடசாமி நாட்டார், திருச்சிராப்பள்ளி ; டாட்சன் பிரஸ். திருசிரபுரம் ; iii. செப்டெம்பர், 1917 ; iv. செ. மூ. எ. 40 ; iv. 22×14 செ. மீ. ; v........... ; vii. vi......... ; திரிசிரபுரம் வரகனேரி குழுமியானந்த சுவாமிகள் மீது புகழந்து பாடப்பெற்ற பாடல்கள் உள்ளன. நடுக்காவேரி மு. வெங்கடசாமி நாட்டார், ஆத்தங்குடி எம். சுப்பராய அய்யர் ஆகிய இருவர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 90/1917/IV.

O31,1

**பஞ்சகம்**

**அப்பாவையர், மணி பண்ருட்டி.**

1687. i. வருகைப் பஞ்சகம் : முதற் பதிப்பு ; ii. அப்பாவையர், மணி. பண்ருட்டி ; கிருஷ்ணவிலாசம் பிரஸ், திருப்பாதிரிப்புலியூர் ; iii. ஆகஸ்ட், 1916 ; iv. செ. மூ. எ. 5+10 ; v. 17×11 செ. மீ. ; vi............. ; vii. விலங்கல் பட்டில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானைப் போற்றிப் புகழ்ந்திடும் ஐந்து பாக்கள் கொண்ட சிறு நூல். இத்தலம் கெடில நதி தென் கரையில் நெல்லிக்குப்பத்துற்குத் தெற்கே இரண்டு மைலில் உள்ளது. உத்தர தணிகாசல மலையில் வந்தெய்துமாறு முருகனது வருகையை வேண்டிப் பாடிய பாடல்களைக் கொண்டது. viii. 1043/1916/III.

O31,1

**சாமிநாத பிள்ளை, வி.; கருந்திட்டைக்குடி, முதலியோர்**

1688. i. திருவருணைப் பஞ்சகங்கள் : முதற் பதிப்பு ; ii. ஷண்முக பக்த ஜன சபையார், சென்னை ; சச்சிதானந்த அச்சியந்திர சாலை ; iii. டிசம்பர், 1916 ; iv. உ. ப.+செ. மூ. ப. 9 ; v. 19×11 செ. மீ ; vi இலவசம் ; vii. திருவண்ணாமலையில் கோயில்கொண்டுள்ள அருணாசலேஸ்வரர் மீது பத்தியுடன் பாடப்பெற்ற ஐந்து பாடல்கள் கொண்ட சிறு நூல்களின் தொகுப்பாகும் இந்நூல். இவற்றை ஆக்கியோர் ருந்

திட்டைக்குடி வி. சாமிநாத பிள்ளை, திருமயிலைப் பாலசுந்தரச் செட்டியார், சென்னை கோ. ப. ரங்கவேலுப் பிள்ளை, சிந்தாதிரிப்பேட்டை சி. கல்யாணசுந்தரச் செட்டியார், புதுவை இராஜலிங்க முதலியார் என்போராவர்; viii. 950/1916/IV.

O31,1

**சுப்பா அய்யர், வி.**

1689. தோத்திரப்பாமாலை: முதற் பதிப்பு; ii வி. சுப்பா அய்யர், வேலூர்; விக்டோரியா பிரஸ், வேலூர்; iii. நவம்பர், 1917; iv. செ. மூ ப. 28; v. 20×13 செ. மீ.; vi. 0–6–0; vii. சமயகுரவர், விநாயகர், கலைவாணி, கார்த்திகேயர் இன்னும் பல தெய்வங்களைப் பற்றிய பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இவர் தம் நூல் முற்றும் பஞ்சகம் பாமாலைகளாக உள்ளன. ஆதலால், இதனைப் பஞ்சகக் கொத்து என்னலாம்; 19 பஞ்சகங்களும் 111 பாக்களும் இதில் உள. இந்து சமயப் பெரியார்களுக்குக் காப்புக் கூறியதைப் போன்றே, பௌத்த மதத் தலைவருக்கும், சமண மத முதல்வருக்கும், ஸோராஸ்டர் மதத்தாருக்கும், முகமது கிறிஸ்து முதலியவகளுக்கும் காப்புக் கூறியுள்ளதிலிருந்து இந்நூலாசிரியர் எம்மதமும் சம்மதம் என்ற கொள்கையுடையவர் என்பது புலனாகின்றது. நூலாசிரியரின் சரித்திரச் சுருக்கமும் பண்டிட் எம். வி. சபாபதி முதலியார் எழுதிய முகவுரையும் தரப்பட்டிருக்கின்றன. வேலூர் பி. கே. ஸ்ரீநிவாஸாச்சாரியார், நாமக்கல் கவிஞர் வி. ராமலிங்கம் பிள்ளை என்னும் இருவரின் சாற்றுக் கவிகளும் திருச்சி பீர்முகம்மது புலவரின் சிறப்புப் பாயிரமும் இடம் பெற்றுள்ளன. viii. 664/1917/IV.

O31,1

**முத்துசாமி உடையார், பாதாங்கி**

i. பாதாங்கி விஸ்வநாதீஸ்வரர் பஞ்சகம் (தொ. எ. 1752 பார்க்க, முதற் பதிப்பு; ii. கு. முத்துசாமி உடையார், பாதாங்கி ( ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மார்ச். 1917; iv. செ. மூ. எ. 1+5+1; v.........; vi........; vii, பாதாங்கி விஸ்வநாதீஸ்வரரைக் குறித்துப் பாடப்பெற்ற பக்திப் பாடலகள் ஐந்து கொண்ட சிறு பிரபந்தம். vii;i 1085/1917/I.

O31,1

பஞ்சரத்னம்

**ஆறுமுகம் பிள்ளை, ஏ., கோயம்புத்தூர்.**

1690. i. கோயம்புத்தூர் ஸ்ரீ சவுடாம்பிகை பஞ்சரதனம; ii. சோ. வீரபத்திர பிள்ளை திரிசிரபுரம்; வித்தியாபானு அச்சியந்திரசாலை, கோயம்புத்தூர்; iii. 1916; iv. செ. மூ. எ.

5+1 ; v. 14×11 செ. மீ. ; vi. 0—0—3 ; vii கோயம் புத்தூர் சவுடாம்பிகை பேரில் பாடப்பட்ட தோத்திரமாலை. ஐந்து ஆசிரிய விருத்தங்களால் ஆகியது இம்மாலை. ஒவ் வொரு பாட்டும் "தமிழ் பூத்த கோவைத்தலம் பூத்தவன்னையே சவுடாம்பிகா தேவியே" என்பதை மகுடமாய்ப் பெற்று வருகிறது. திரிசிரபுரம் வரகனேரி வித்வான் சோ. வீரபத்திர பிள்ளை என்பவர் இதற்குச் சாத்துக்கவி பாடியுள்ளார். 'வாழ்த்து வெண்பா' ஒன்றும் ஈற்றில் உளது. viii. 182/1916/II.

O31,1

இரங்கசாமி ஆச்சாரி, அ., கீழ்எடையாலம்.

1691. தேவி சுப்ரமண்யர் பேரில் பஞ்சரத்தினம் ; ii. சத்தாரியா பிரஸ், திண்டிவனம் iii. 1919 ; iv. செ. மூ. எ. 5+2 ; v. 1 ×1. செ. மீ. ; vi...... ; vii. திருமயிலத்தில் கோயில்கொண்டெ ழுந்தருளியுள்ள ஸ்ரீசிவசுப்பிரமணியர் பேரில் பாடப்பெற்ற விருத்த ங்களைக் கொண்டது இந்நூல். பஞ்சரத்தினமாக அமைந்த ஐந்து பாடல்களோடு, முருகனையும் குருவையும் குறித்து வேறு இரண்டு பாடல்களும் இதன்கண் உள. குருவணக்கப் பாடலில் ஆசி ரியர் தமது பெயரையும் குறிப்பிட்டுள்ளார். viii. 91/1920/I.

O31,1

கணேச பிள்ளை, டி. எஸ்.

1692. i. தேவி பஞ்சரத்தினம் : முதற் பதிப்பு ; ii. வி. எஸ்; கிருஷ்ணஸ்வாமி அய்யர், திருச்சிராப்பள்ளி, வெட்னஸ்டே ரிவ்யூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஏப்ரல், 919 ; iv. செ. மூ. உ. ப. 17 ; v. 18×11 செ. மீ. ; vi. 0--2—0 ; vii. இது தேவியைக் குறித்து ஆசிரியர் பாடிய பாடல்களும் அவற்றிற்கான பொருளுரையும் கொண்டுள்ளது. 'ஐம்மணி பனுவல்' என்றும் கூறப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் திரு வாங்கூரில் சிலாசாசன பரிசோதகராயிருந்தவர், பேராசிரி யர் சுந்தரம் பிள்ளையவர்கள், கே. ஜி. சேஷையர் முதலியோர் களால் நன்கு மதிக்கப்பெற்றவர். 1916 ஆம் ஆண்டு வரை வாழ்ந்தவர். இவருடைய மருகர் இதனை வெளிப்படுத்தியுள் ளார். இவர் எழுதிய முகவுரையில் நூலாசிரியர் எழுதி வைத்துள்ள "தமிழ்த் தோற்றத் தேற்றம்" என்னும் மொழி இலக்கண நூலைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார், viii. 624/1919/II.

O31,1

களைக்கோட்டிலிங்கக் கவிராஜ மூர்த்தி, புதுவை.

1693. i. முகையதீன் ஆண்டவர் பேரில் பஞ்சரத்னப் பாமாலை முதற்பதிப்பு ; ii. களைக்கோட்டிலிங்கக் கவிராஜமூர்த்தி' புதுவை ; காந்திமதி விலாஸம் பிரஸ், திருநெல்வேலி '

iii. மே, 1918 ; iv. செ. மூ. எ. 1+5+5 ; v. 16×10 செ.மீ., vi. 0—1—0 ; vii. பொட்டல்புதூர் என்று பெயர் வழங்கிய புதுவை மாநகரில் மகிமையுடன் வாழும் முகையதீன் ஆண்டவர் பேரில் புகழ்ந்து பாடப்பெற்ற விருத்தப் பாக்களை உடையது இப்புத்தகமாகும். ஐந்து இரத்தினங்களைக் கோத்துச் செய்யப்பட்ட இரத்தினமாலை போன்று ஐந்து சிறந்த விருத்தப் பாக்களாகிய பாமாலையாகலின் இந்நூல் பஞ்சரத்தின பாமாலையென்னும் பெயரினைப் பெற்றுள்ளது; viii. 38/1918/II

O31,1

சிவகுருநாத பிள்ளை, நல்லிச்சேரி

1694. i. ஆனந்தவல்லியம்மை பஞ்சரத்தினமும் ஸ்ரீ சிங்காரவடிவேலர் பஞ்சரத்தினமும்; ii. ஆர். நாராயணச்சாரியார், கும்பகோணம், சாரதாவிலாஸ அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. ஆகஸ்ட், 1919 ; iv. செ. மூ. எ. 1+5, 1+5 ; v. 14×11 செ. மீ. ; vi. . . . .; vii. இதில் திருக்கூந்தலூரில் விளங்கும் ஆனந்தவல்லியம்மையைக் குறித்தும் சிங்கார வடிவேலரைக் குறித்தும் பாடியுள்ள பஞ்சரத்தினப் பாடல்கள் அடங்கியுள்ளன. படங்களுடன் கூடியது. காப்புச்செய்யுள் வெண்பாவாகவும் ஏனைய ஐந்தும் ஆசிரிய விருத்தமாகவும் அமைந்துள்ளன; viii. 697/1919/III.

O31,1

சுப்பராய முதலியார், தி.

1695. i. பொன்னியம்மன் மீது பஞ்சமணிமாலை : முதற் பதிப்பு ii. தி. சுப்பராய முதலியார் ; இந்தியன் பிரஸ், செங்கற்பட்டு ; iii. ஆகஸ்ட், 1919 ; iv. செ. மூ. ப. 6 ; v; 14×11 செ. மீ. ; vi . . . . . ; vii. செங்கல்பட்டில் ஏரிக் கரையிலே எழுந்தருளியுள்ள பொன்னியம்மன் என்னும் தெய்வத்தின் மீது பாடப்பெற்ற ஐந்து விருத்தப் பாக்களையும் காப்பாக ஒரு வெண்பாவினையும் கொண்டுளது. இந்நூல் 'பஞ்சரத்தினம்' என்பதனையே "பஞ்சமணிமாலை" என்னும் பெயரால் இவ்வாசிரியர் குறிப்பிடுகிறார். viii. 807/1919/IV.

O31,1

பாலுசாமி நாயுடு, எம்., மதுரை

1696. i. காரைக்குடி கொப்புடையம்மன் பஞ்சரத்தினம் : முதற் பதிப்பு ; ii. சர்க்கரை உபாத்தியாயர், காரைக்குடி, வைசியமித்திரன் பிராஞ்சு பிரஸ், காரைக்குடி ; iii. மே. 1919 ; iv. செ. மூ. எ. 1+5+1 ; v. 14×11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. காரைக்குடியில் விளங்கும் கொப்புடையம்மனைப் பற்றிய பஞ்சரத்தினத் துதிமாலை இதில் அடங்கியுள்ளது; viii. 176/1919/III.

O31,1

முத்துகிருஷ்ணம்மாள்

i. சதுரகிரி சுந்தர மகாலிங்க சுவாமி பேரில் பஞ்சரத்தினம் (தொ. எ. 1558 பார்க்க) : முதற் பதிப்பு; ii. ஸ்ரீ ராமச்சந்திரவிலாசம் அச்சியந்திரச்சாலை, மதுரை; iii. செப்டம்பர், 1917; iv. செ. மூ. எ. 5; v..... vi..... vii..... சதுரகிரிசுந்தர மகாலிங்க சுவாமி பேரில் பாடப்பெற்ற பஞ்சரத்தினம். "சதுரகிரி தன்னில் வளர் சுந்தரமகாலிங்க சச்சிதானந்த சிவமே" என முடியும் ஐந்து ஆசிரிய விருத்தங்கள் கொண்டது; viii. 29/1917/IV.

O31,1

ரமணமகரிஷி

i. அருணசல பஞ்சரத்னம் (தொ. எ. 1793 பார்க்க): முதற் பதிப்பு; ii. எஸ். நாராயண ரெட்டி; மினர்வா அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. செ. மூ. எ. 5; v......... vi.........vii. அருணசலீஸ்வரரைக் குறித்துப் பாடப் பெற்ற ஐந்து பக்திப் பாடல்கள் கொண்ட சிறு நூல்; viii.238/1917/I.

O31,1

வெங்கடாசலம் பிள்ளை, பி. எம்., திண்டுக்கல்.

i. பஞ்சரத்னப் பாமாலை (தொ. எ. 1764 பார்க்க); ii. கே. வீராசாமி பிள்ளை, திண்டுக்கல்; அபிராமி விலாசம் பிரஸ், திண்டுக்கல்; iii. டிசம்பர், 1916; iv செ. மூ. எ. 5; v......... vi.........;vii. அபிராமி அம்மனைக் குறித்துப் பாடப்பெற்ற பக்திப்பாடல்கள் கொண்டது. திண்டுக்கல் 'பிளீடர்' வெங்குஸாமி ஐயரவர்கள் இயற்றிய சாத்துக்கவி நூன் முதலில் உள்ளது. இந்தப் பஞ்ரத்தினப் பாடல்கள் ஒவ்வொன்றும் "அரிய மறை முடியினுயர் அதிநடன மிடு குமரி, யழகு நிறை அபிராமியே" என்று முடிவுறுகின்றது; viii. 327/1917/I.

O31,1

ஸ்வாமிநாதன்

1697. i. அருட் பஞ்சரத்னம்: முதற் பதிப்பு; ii. லக்ஷ்மி பிரஸ். சென்னை; iii. ஜூன், 1919; iv. செ. மூ. எ. 5; v. 21×14 செ. மீ.; vi. இலவசம்; vii. அருட் பஞ்சரத்னம் என்னும் இந்நூலில், இறைவனை வழிபாடு செய்கின்ற பொழுது உச்சரிக்கின்ற ஐந்து எழுத்துக்களைப் பற்றிய முழு விவரங்களும் காணலாம். மௌன குரு ஸ்தோத்திரம், விநாயகர் துதி, சுப்ரமணியர் துதி, திரிகூடாசல ஸீதாராம் பரதிஷ்டா வைபவ வர்ணம், திரு மந்திரம் என்னும் ஐந்து பொருள் பற்றி அமைந்த அகவற் பாடல்கள் கொண்டது. இவற்றுள் இறுதியில் உள்ள திருமந்திரம் அஷ்டோத்தர தியான பரமாய் அமைக்கப் பெற்றுள்ளது; viii. 920/1919/IV.

O31,1

## பதிகம்

**அங்கமுத்து முதலியார், டி. எஸ்.**

1698. i. துரோபதையம்மன் பதிகம் : முதற் பதிப்பு ; ii. டி. எஸ். அங்கமுத்து, சென்னை ; ஸ்ரீ சுந்தர விலாஸ அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1917 ; iv. செ. மூ. எ. 1+12+2+8; v. 18×11 செ. மீ. ; vi 0–0–6 ; vii. நிண்ணை யூரென வழங்கும் நிண்ணை நகரில் விளங்கும் துரோபதை யம்மனைக் குறித்து எழுதப் பெற்ற தோத்திரப் பாடல்கள் இதில் உள்ளன. இதனோடு கணேசன் பஞ்சரத்தின் வாழ்த்துப் பாவும் உண்டு. கொம்மி மெட்டு இசையிலும் சில பாடல்கள் உள; vii. 48/1917/III.

O31,1

i. அறைகண்டநல்லூர் வள்ளியம்மன் பதிகம் (தொ. எ. 1740 பார்க்க) ; ii. எஸ். கே. சொக்கலிங்கம் பிள்ளை & ம. வடிவேல் சாமி பிள்ளை, திருசிராமலை, யாதவர்புரம்; நடராஜா அச்சுக் கூடம், திருச்சி ; iii. 1917 ; iv. செ. மூ. எ. 1+10 ; vii. அறைகண்டநல்லூரில் கோயில்கொண்டருளும் வள்ளி யம்மையைக் குறித்த தோத்திரம். 'அச்சுதன் குமரியே பச்சைமலை மருகியே அழகு குறவள்ளிமயிலே' என்னும் மகுடத்தைப் பெற்று இப்பதிகப் பாடல்கள் முடிவு பெறுகின் றன; viii. 732/1917/III.

O31,1

**ஆழ்வார் பிள்ளை, நா.**

1699. i. ஐயனார் பதிகம் : முதற் பதிப்பு ; ii. அ. அய்யாசாமி பிள்ளை; தூத்துக்குடி ; சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. அக்டோபர், 1917 ; iv. செ. மூ. எ, 4+10 ; v. 10×16 செ. மீ. ; vi ...... ; vii. இதில் வைப்பாற்றில் வில்லாயுதத்துடன் விளங்கும் ஐயனாரைப்பற்றிய 10 பாடல்கள் உள்ளன; viii. 607/1917/IV.

O31,1

**ஆறுமுக ஆச்சாரி, ச.**

1700. i. தியாகேசர் பதிகம் : முதற் பதிப்பு ; ii. டி. இராம சுவாமி நாயுடு சன்ஸ், சென்னை ; ஸ்ரீலட்சுமிநாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1918 ; iv. செ.மூ.உ.எ. 16 ; v. 13×11 செ.மீ. ; vi. 0—1—0 ; vii. திருவொற்றி யூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் புகழ்ந்து எழுதப் பெற்ற பதிகங்களைக் கொண்டது இப்புத்தகம். பாடல்களுக்கு விளக்க உரைகளும் இதில் உள்ளன. உமாதேவியார் சிவ பெருமானின் இடப் பக்கத்திலிருந்து நீங்கியமை பற்றியும், சிவ

பெருமான் கணபதிக்குக் கங்கா பவானியினுடைய சரித்திரத்தைத் தெரிவிப்பது பற்றியும் இதில் கூறப்பட்டுள்ளன ;viii. 85/1918/IV

O31,1

**இராஜகோபால ஐயர், பி. ஆர்., பாபநாசம்**

1701. i. குருபரன் பதிகம் (மணிப்பதிகம் உயிர்வருக்க நாமாவளி) ; முதற் பதிப்பு ; ii. பி. ஆர். இராஜகோபால் ஐயர், பாபநாசம் ; கிருஷ்ண விலாச பிரஸ், கும்பகோணம் ; iii. நவம்பர், 1919 . iv. செ.மூ.எ. 10 ; v. 14×11 செ.மீ. ; vi. 0—1—0 ; vii. முருகக் கடவுளைப் போற்றிப் புகழ்ந்திடும் பதிகத்தினைக் கொண்டது இந்நூலாகும். சேலம் கல்லூரி உதவித் தமிழ்ப் பண்டிதர் திரு. சே. ரா. திம்மப்பையர், கரூர் நகரமன்ற உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் மாணிக்கம் முதலியார், வேம்பத்தூர் மகாதேவ பாரதியார் முதலியோர் இதற்குச் சாற்றுக்கவிகள் தந்துள்ளனர். viii. 823/1919/IV.

O31,1

i. மணிப் பதிகம் (தொ. எ. 1701 பார்க்க) ; ii. பி. ஆர் இராஜகோபால ஐயர், பாபநாசம் ; கிருஷ்ண விலாசம் பிரஸ், கும்பகோணம் ; iii. 1919 ; iv. செ.மூ எ. 10 ; இந்நூல் பத்துப் பாடல்களைக்கொண்டது. ஒவ்வோர் அடியினிறுதியிலும் மணியே என முடிதலால் இந்நூல் மணிப்பதிகம் என்னும் பெயரினை யெய்துவதாயிற்று. முருகப் பெருமானைப் புகழ்ந்து பாடப்பெற்ற துதிப்பாடல்களைக் கொண்டது இந்நூல்; viii. 823/1919/IV.

O31,1

**கிருஷ்ண சாஸ்திரி, ஆத்ரேய.**

1702. i. நாகை நீலாயதாக்ஷியம்மை பதிகம் : முதற் பதிப்பு ; ii. ஆத்ரேய கிருஷ்ண சாஸ்திரி, திருச்சிராப்பள்ளி ; சதர்ன் ஸ்டார் அச்சுக்கூடம், திருச்சி ; iii. மே, 1919 ; iv. செ.மூ.உ. ப. 29 ; v. 14×10 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. நாகப் பட்டினத்தில் விளங்கும் நீலாயதாட்சியம்மையைக் குறித்துப் பாடப்பெற்ற துதிப் பாடல்களைக் கொண்டுள்ளது இந்நூல். வல்லின எழுத்துக்கள் மருவா வண்ணம் பாடப்பட்டுள்ளமை அறிந்து மகிழ்தற்குரிய ஒன்றாகும். அம்மையின் திருநாமமாகிய நீலாயதாக்ஷி எனும் பெயர் அமைய 'நீலமா விழியினாளே' என இப்பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றும் முடிவதும் கவனிக்கத்தக்கது. நாகை நீலலோசனி பத்திராதிபரும் தமிழ்ச் சங்கப் புலவரும் பண்டிதருமாகிய ஜி. சதாசிவம் பிள்ளையவர்கள் தந்த சாற்றுக் கவியுடன் கூடியது; viii. 883/1919/II.

O31 1

**கண்ணதாசர், கிளியாறு நகர்**

1703 i. நீரடிவாசியம்மன் திருப் பதிகம் : முதற் பதிப்பு ; ii. வேங்கட சுப்பராயப் பிள்ளை, பெருங்கோழி, இந்தியன் அச்சுக் கூடம், செங்கற்பட்டு ; iii. ஜூன், 1920 ; iv. செ.மூ.ப. 17 ; v. 15×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. செங்கல்பட்டு மாவட்டம் உத்திரமேரூரில் விளங்கும் நீரடிவாசியம்மனைக் குறித்துப் பாடப் பெற்ற தோத்திரப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. காஞ்சித் தாலூகா பெருங்கோழி வரகவி வெங்கட சுப்பராயப் பிள்ளை அவர்கள் தந்த சாத்துக் கவியுடன் கூடியது. வாசியம்மன் எச்சரிக்கை, ஊசல், லாலி என்னும் வகைகளிலும் பாடல்கள் அமைந்துள. viii. 53/1920/III.

O31,1

**கண்ணப்ப சோதிடர், கீழ் ஆயக்குடி**

i. பொன்னம்பல சுவாமிகள் பேரில் பதிகமாலை, (தொ. எ. 1704 பார்க்க) ; ii. கே. ஆர். ரெங்கநாதம் அண்டு பிரதர்ஸ். மதுரை; iii. 1919; iv. செ.மூ.எ. 1+30 ; v. ....; vi. ....; vii. பொன்னம்பலத்தே விளங்கும் பெருமானைப் பற்றிய தோத்திரம். இது முப்பது பாடல்களைக் கொண்டது ; ஒவ்வொரு பாடலும் "பொன்னம்பலத்தின்றேவே" என்னும் விளியினைக் கொண்டு முடிவுறுகின்றது. viii. 53/1919/IV.

O31,1

1704. i. பொன்னம்பலநாதர் பதிகம் (பொன்னம்பல சுவாமிகள் பேரில் பதிக மாலை) : முதற் பதிப்பு ; ii. கே. ஆர். ரெங்கநாதம் அண்டு பிரதர்ஸ், மதுரை ; iii. அக்டோபர், 1919 ; iv. செ.மூ.எ. 1+10 : v. 21×14 செ.மீ. ; vi. விற்பனைக்கில்லை ; vii. ...... ; viii. 53/1919/IV. O31,1

**கந்தசாமிக் கவிராயர், அ., விருதுப் பட்டி**

1705. i. வாலையானந்தர் பதிகம் : முதற் பதிப்பு ; ii. பெ. பெரிய கருப்ப நாடார், விருதுப் பட்டி : டார்லிங் பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. ஜூலை, 1918 ; iv. செ.மூ.எ. 1+10 ; v. 16×13 செ. மீ.; vi. 0– 0 –9 ; vii. வாலையானந்த சுவாமிகள்மீது பாடப்பெற்ற பதிப் பாடல்களைக் கொண்டது, குரு தோத்திரமாக அமைந்துள்ளது. viii. 296/1918/III.

O31,1

i. காவிரிப் பதிகம் (தொ. எ. 2491 பார்க்க) ; ii. வீரசுப்பய்ய சுவாமிகள் & கே. சுவாமிநாதஞ் செட்டியார், தேவகோட்டை ; கணேச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜனவரி, 1918 ; iv. செ.மூ.எ. 10 ; v. ....; vi. ......; vii. காவிரி நதியைப் புகழ்ந்து பாடிய பத்துப் பாடல்களைக் கொண்டது. காவிரியை அன்னையாகப் பாவித்துப் பாடப்பட்டிருக்கிறது. இப்பதிகம் ஜகந்நாத பண்டிதராஜர் என்பார் பாடிய ஸ்ரீகங்காலகரியோடு சேர்த்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. viii. 601/1918/I. O31, 1

குஞனந்தா ஸ்வாமி, தனியூர்

1706. i. மஹா கௌரி மாயூர அபயாம்பிகைப் பாமாலே : முதற் பதிப்பு; ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ., சென்னை; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1918; iv. செ.மூ.ப. 8; v. 13×11 செ.மீ.; vi. 0–0–6; vii. மாயவரத்தில் கோயில் கொண்டுள்ள கௌரி அம்பிகை மீது பாடப்பெற்ற பக்திப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். பண்டிட் எஸ். வேலாயுத முதலியார், மாயூரம் முன்சீப் கோர்ட்டு நியாயவாதி எ. நடேச பிள்ளை, டாக்டர் தஞ்சை சண்முகம் பிள்ளை முதலியோர் இந்நூலுக்குச் சாத்துக் கவிகள் தந்துள்ளனர். viii. 383/1918/III.

O31,1

குப்புசாமி நாயுடு

i. சதுரகிரி பலாவடி கருப்பண சுவாமி பதிகம் (தொ. எ. 1558 பார்க்க); ii. குருசாமிக் கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1917; iv. செ.மூ.எ. 10; vii. இதில் சதுரகிரி பலாவடியைச் சார்ந்த கருப்பண சுவாமியைப் பற்றிய பாடல்கள் உண்டு. இத்தெய்வம் சதுரகிரியின் காவல் தெய்வம். 'பத்தியொடு சதுரகிரி மத்தியிற் காவல் புரி பலாவடிக் கருப்ப மூர்த்தியே' என்னும் மகுடத்தைப் பெற்று இப்பதிகப் பாடல்கள் முடிவுறுகின்றன. viii. 29/1917/IV.

O31,1

குப்புசாமி பிள்ளை, புதுவை

1707. i. சேமாத்தம்மன் பதிகம்: முதற் பதிப்பு; ii. நாதமுனி முதலியார், திருமயிலை; ஆர். விவேகானந்தா பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. ஜூலை, 1919; iv. செ.மூ.எ. 3+10; v. 22×14 செ.மீ.; vi. 0–3–0; vii. இதில் பிரம்பைச் சேமாத்தம்மனைக் குறித்துப் பாடப்பெற்ற துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன. சேமாத்தம்மன் உருவப் படமொன்றும் உண்டு. viii. 351/1919/III.

O31,1

கெங்காதர ரெட்டியார்

1708. i. செல்லியம்மன் துலுக்காணத்தம்மன் பதிகம்: முதற் பதிப்பு; ii. எஸ்.பி. இராஜாராம், சென்னை; ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1916; iv. செ.மூ.எ. 11; v. 15×12 செ.மீ; vi. 0–0–6; vii. ஒண்டிக்குப்பத்தில் கோயில் கொண்டுள்ள துலுக்காணத்தம்மன் மீது பாடப்பெற்ற பக்திப் பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல். ஆசிரிய விருத்தப் பாவாலாகியது. 'துலுக்காண மாரி உமையே' என ஒவ்வொரு பாடலும் முடிவு பெறுகின்றது. viii. 1025/1916/III.

O31,1

1709. i. கெருடப் பத்து, கஜேந்திர மோக்ஷக் கிர்த்தனை; ii. பகடால முனிரத்தினம் நாயுடு, இராயவேலூர்; கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், இராயவேலூர்; iii. 1916; iv. செ.மூ.எ. 13; v. 14×11 செ.மீ.; vi. 0—0—3; vii. திருமாலைத் துதிக்கும் தோத்திரப் பாமாலை, 'கெருடன் மீதில் அன்புடன் ஏறி வந்து அருள் செய்வாயே' எனத் திருமாலை வேண்டும் வகையில் இப் பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன. 'கஜேந்திர மோக்ஷக் கிர்த்தனை' ஒன்று நூலிறுதியில் உள்ளது. viii. 837/1916/I.

O31,1

கோபாலகிருஷ்ணையர், அ.கி.ப., சுந்தரபாண்டியபுரம்

i. சுந்தரபாண்டியபுரம் இராஜகோபாலசுவாமி பதிகம் (தொ.எ 1710 பார்க்க); முதற் பதிப்பு; ii. தி.பெ. சாமிநாத பிள்ளை, கும்பகோணம்; கோமதி விலாசம் அச்சியந்திரசாலை, தென்காசி; iii. மார்ச், 1917; iv. செ.மூ.எ. 2+1+11; v. . . . . .; vi. . . . .; vii. சுந்தர பாண்டியபுரத்தில் விளங்கும் இராஜகோபால சுவாமியைக் குறித்துப் பாடப்பெற்ற பதிகம். பதினான்குசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. கும்பகோணம் தி. பெ. சாமிநாத பிள்ளை என்பாரும் தென்காசி ஆ. சங்கரலிங்கம் பிள்ளை என்பாரும் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 994/1917/I.

O31,1

1710. i. சுந்தரபாண்டியபுரம் சண்பக விநாயகர் வெண்பாப் பதிகம் (இராஜகோபால சுவாமி பதிகம்): முதற் பதிப்பு; ii. தி. பெ. சாமிநாத பிள்ளை, கும்பகோணம்; கோமதி விலாசம் அச்சியந்திர சாலை, தென்காசி; iii. மார்ச், 1917; iv. செ. மூ. எ. 10; v. 14×11 செ. மீ.; vi. 0-1-0; vii. விநாயகரைத் துதிக்கும் நேரிசை வெண்பாக்கள் பத்துக்கொண்ட துதிமாலை. சுந்தரபாண்டியபுரம் இராஜகோபால சுவாமியைப் புகழ்ந்து பாடப்பெற்ற பதிகமும் இதனோடு உள்ளது. கும்பகோணம் தி. பெ. சாமிநாதப் பிள்ளை, புதுவை அருணாசலக் கவிராயர் முதலிய நால்வர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். viii. 994/1917/I.

O31,1

சங்கர சதாசிவ முதலியார், குன்னத்தூர்

1711. i கோமதியம்மன் பதிகம்; ii. ம. காளத்தியப்ப முதலியார்; குன்னத்தூர்; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை, iii. மார்ச், 1919; iv. செ.மூ.எ. 1+11; v. 14×11 செ.மீ.; vi. 0—0—6; vii. சங்கரநயினார்கோவிலென்னும் வரை ராஜயம்பதி கோமதியம்மன் பேரில் பாடப்பெற்ற பத்துப் பாடல்கள் உள்ளன பத்துப் பாடல்களைக் கொண்டு அமைகின்ற நூல் பதிகம் எனப் படும். viii. 43/1919/II.

O31,

**சங்கரலிங்க நாடார், ச.ப.,**

**i.** விசாலாக்ஷியம்மன் பதிகம் (தொ.எ. 1711-A பார்க்க): முதற் பதிப்பு; ii. கு. முத்துசாமி உடையார், பாதாங்கி மாநகர்; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, விருதுப் பட்டி; iii. 1916; iv. செ.மூ.எ. 1+10+1; v... ; vi.....; vii. பாதாங்கி மாநகரில் கோயில் கொண்டிலங்கும் விஸ்வநாதீஸ்வரரைக் குறித்துப் பாடப்பெற்ற தோத்திரமாலை. ஆசிரியவிருத்தத்தால் ஆகியது. பாதாங்கிமாநகர் கு. முத்துசாமி உடையார், விருதுப் பட்டி பூ. மு. நாச்சியப்ப நாடார் முதலியோர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். நூலிறுதியில் அநுபந்தமாக சிவசுப்பிரமணியர் தோத்திரமாக அமைந்த சிந்துப் பாடல் ஒன்றும் உளது. viii. 423/1916/III.

O31,1

**1711-A.** i. விஸ்வநாதீஸ்வரர் பதிகம் (விசாலாக்ஷியம்மன் பதிகம்) ii. கு. முத்துசாமி உடையார், பாதாங்கிமாநகர்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுப் பட்டி; iii 1916; iv. செ.மூ.எ. 6+10; v. 21×14 செ.மீ.; vi. 0–0–6; vii. பாதாங்கி மாநகரில் கோயில் கொண்டிலங்கும் விஸ்வநாதரைக் குறித்த தோத்திரமாலை: viii. 423/1916/III.

O31,1

**சண்முகதாசப் பிள்ளை, ச., கோபாலசமுத்திரம்**

**1712.** i. பெருமாள் பதிகம்: முதற் பதிப்பு, ii. மு. இராமலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. செப்டம்பர், 1920; iv. செ.மூ.ப. 4; v. ... vi. இலவசம்; vii. நெல்லையைச் சார்ந்த திருவேங்க... கோயில் கொண்டுள்ள பெருமாள் மீது பாடப்பெற்... கொண்டது இந்நூலாகும். இதனேடு மயேந்திர கி... மும் உள்ளது. viii. 3/1920/IV.

thiruvengada
natha puram

O31,1

**சாமிநாத ஐயர், சித., காரைமாநகர்**

**1713.** i. காரை மாநகர்க் கொப்புடையநாயகி பதிகம்: முதற் பதிப்பு, ii. கே. அச்சுத மேனன் அண்டு வி.எஸ். சோமசுந்தர தேசிகர்; திருவெண்காடு; ஞானம்பிகா பிரிண்டிங் ஒர்க்ஸ், காரைக்குடி.; iii. டிசம்பர், 1917; iv. செ.மூ.ப.16; v.14×11 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் காரைக்குடியில் கோயில் கொண்டுள்ள கொப்புடைய நாயகியின் பேரில் பாடப்பெற்ற துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன. இந்நூற் பயன் என்ற தலைப்பில் அம்பிகையின் திருவருளை முன்னிட்டு இப்பதிகம் வெளிவந்திருப்பதால் இதைத் தினந்தோறும் பக்தியுடன் பாராயணஞ் செய்பவர்கள் விரும்பியதைப் பெறுவாரென்பது திண்ணம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மழவை சதாவதான பிரம்ம ஸ்ரீ பாலசுப்ரமணிய ஐயர், சிவகங்கை சமஸ்தான ராஜகுரு ஸ்ரீமத் தெய்வ சிகாமணி ஐயர் முதலிய பல பேர் இந்

நூலுக்குச் சாத்துக் கவிகள் தந்துள்ளனர். இதனிறுதியில் கீர்த்தனம் ஒன்றும் 'காரைமாநகர் மஹா காளர் ஸ்துதி' என்ற தலைப்பில் ஆறு விருத்தங்களும் காணப்படுகின்றன. viii. 809/1918/I.

O31,1

மெய்ப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்

i. பெரிய நாயகியம்மை விருத்தம் (தொ. எ. 1682 பார்க்க); ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ.; மனோன்மணி விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1918; iv. செ.மூ.எ.10; v.....; vi.... ; vii. (விருத்தகிரி) பழமலை அல்லது முதுகுன்றத்தில் எழுந்தருளியுள்ள பெரியநாயகியம்மையைப் பற்றிப் பாடப்பெற்ற பத்து விருத்தங்களால் ஆகியது இப்பதிகம். இப்பதிகப் பாடல் ஒவ்வொன்றும் 'கிளர் மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரிய நாயகியே' என்று முடிவுறுகின்றன. viii. 1064/1918/III.

O31,1

சின்னக்கனி நாடார், தூ. ச.

1714. i. சிவகாசி சிவசுப்பிரமணியக் கடவுள் மீது பதிகம்: முதற் பதிப்பு; ii. சின்னக்கனி நாடார், சிவகாசி; ஆண்டவன் பிரஸ், பாளையங்கோட்டை; iii. பிப்ரவரி, 1918; iv. செ.மூ.எ.6+10+1; v. 22×14 செ.மீ.; vi..........; vii. சிவகாசியில் கோயில் கொண்டுள்ள சிவசுப்பிரமணியக் கடவுள் மீது பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டது இந்நூல். சிவகாசி இந்து நாடார் விக்டோரியா உயர்நிலைப் பள்ளித் தமிழ் ஆசிரியர் மதுரகவி எஸ். சுப்பிரமணியக் கவிராயர் சிறப்புப் பாயிரமும் திருநெல்வேலி முருகதாச சுவாமிகளின் பாதசேகரர் ஆகிய பா. மு. பார்த்தசாரதி நாயுடு முதலியோர் இந்நூலுக்குச் சாத்துக் கவிகளும் தந்துள்ளனர். viii. 363/1919/IV.

O31,1

சுந்தரப் பிள்ளை, வி., திருவிரிஞ்சிபுரம்

1715. i. வல்லண்ட ராமம் பொற்கோடீஸ்வரி பதிகம்; முதற் பதிப்பு; ii. நடேச செட்டியார், வேலூர்; பச்சையப்ப அச்சியந்திர சாலை, வேலூர்; iii. பிப்ரவரி, 1917; iv. செ.மூ.எ. 10+1; v. 14×11 செ மீ.; vi. இலவசம்; vii. வல்லண்ட ராமத்தில் விளங்கும் பொற்கோடீஸ்வரியைக் குறித்துப் பாடப்பெற்ற பாடல்கள் இதில் உள்ளன. "புகழ் கொண்ட வல்லண்ட ராமதில் வாழ்கின்ற பொற் கோடீஸ்வரி பாலியே" என்பதனை மகுடமாகக் கொண்டு ஒவ்வொரு பாடலும் முடிவுறுகின்றது. viii. 689117/I.

031,1

சுந்தரராஜுலு நாயுடு, கோ., முத்துப்பேட்டை

1716. i. தாடாளப்பெருமாள் தோத்திரப் பதிகம்; முதற் பதிப்பு; ii. பி. முத்திருளப்ப மார்த்தாண்டம் பிள்ளை, விஜய நாராயணம்; சக்கரவர்த்தி அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. செ.மூ.எ.11; v. 13×11செ.மீ.; vi.0—3—1; vii. திருமாலைத் தாடாளப்பெருமாளாகப் பாவித்து அவன் மீது பாடப்பெற்ற தோத்திர மாலை. இப்பெருமாள் காழிச்சீராம விண்ணகரத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியாவர். விஜயநாரணம் வித்துவான் பி.முத்திருளப்ப மார்த்தாண்டம் பிள்ளை இதற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். viii. 778/1918/III.

031,1

சுப்பிரமணிய சுவாமி, என்.

1717. i. குன்னூர் ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் பதிகம்; முதற் பதிப்பு; ii. என். சுப்பிரமணிய சுவாமி; நடேச பிரஸ், கோயம்புத்தூர்; iii. 1916; iv. செ.மூ.எ. 1+10; v.20×12 செ.மீ.; vi.....; vii.குனூரில் கோயில் கொண்டிருக்கும் ஆறுமுகனைக்குறித்துப் பாடப்பட்ட தோத்திர மாலை. பன்னிருசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தத்தால் ஆகியது. அ. கந்தசாமி பிள்ளை, இராமசாமிச் சிவாச்சாரியர், சுப்பிரமணிய சுவாமிகள், வீரபத்திர பிள்ளை என்போர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 298/1916/I.

031,1

சுப்பிரமணியஞ் செட்டியார்

1718. i. காமாட்சியம்மன் பதிகம்; முதற் பதிப்பு; ii. நடராஜ அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி; iii. பிப்ரவரி, 1920; iv. செ. மூ. எ. 10; v. 14×11 செ. மீ. ; vi. இலவசம்; vii. இஃது ஓமந்தூரில் விளங்கும் காமாட்சியம்மனைப் பற்றிய பதிகம். மு. வேங்கடசாமி நாட்டார் உட்பட மூவர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளார்கள்: viii. 743/1920/I.

031,1

சுப்பிரமணியஞ் செட்டியார், தி. மு.

1719. i. மாரியம்மன் பதிகம்; முதற் பதிப்பு; ii. ந. வே. நடேசம் பிள்ளை & சோமசுந்தரம் பிள்ளை; விவேகபானு அச்சாபீஸ், திருச்சி; iii. 1915; iv. செ. மூ. எ. 8+10; v. 16×12 செ. மீ. ; vi.. ....; vii. திரிசிரபுரம் கிருஷ்ண புரத்தில் எழுந்தருளியிருக்கின்ற மாரியம்மன்மேல் தோத்திரப் பதிகம். இப்பதிக ஆசிரியர் மகாவித்துவான் பிள்ளையுபுராணம் புலவரின் மாணாக்கரில் ஒருவராவர். பிரமாதீச வருஷம் தை மாதம் 19 ஆம் நாள் தர்மலிங்கக் கொத்தனுர் கனவில் கண்ட வண்ணம் இந்த அம்மன்

திருவுருவம் பூமியினுள்ளிருந்து தோண்டி எடுக்கப்பட்டது. பிரமாதீசு ஆண்டு மாசித் திங்கள் 25-ஆம் நாள் ஆதி வாரம் அம்மன் திருவுரு நிறுவப் பெற்று, பின் திரு விழா முதலிய சிறப்புக்களும் நடைபெற்றனவாம். தே. பெரியசாமிப் பிள்ளை, வி. ஆ. குப்புவேல் பிள்ளை முதலி யோர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர்; viii. 19/1916/I.

O31,1

சுப்பிரமணிய பிள்ளை, அ., முதுகுளத்தூர்

1720. i. பூலாருடையவர் பேரில் ஆசிரியப் பதிகம்: முதற் பதிப்பு ; ii. ஸ்ரீராமசந்திர விலாசம் பிரஸ், மதுரை ; iii. ஜூன், 1917 ; iv. செ. மூ. எ. 1+10 ; v. 13×11 செ.மீ. ; vi........ ; vii. திருநெல்வேலி மாவட்டத்தில் சீவலப்பேரி மலையிலெழுந்தருளிய பூலாருடையவர் பேரில் பாடப்பெற்ற பக்திப்பாடல்களைக் கொண்டது. "சீவலப்பதி மலையில் மேவுகற்பகமனைய தேவ பூலாருமணியே" என இப்பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றும் முடிவுறுகின்றன: viii. 47/1917/III.

O31,1

சுப்புதாஸ் நாயுடு, வி., எட்டறை

1721. i. கொன்னுகைகீ ஆயா உமையவள் பேரிலும் சங்கிலி யாண்டவன் பேரிலும் பத்துப் பதிகம் ; ii. வி. சுப்புதாஸ் நாயுடு, எட்டறை ; iii. 1919 ; iv. செ. மூ. ப. 8 ; v. 23×15 செ. மீ. ; vi. இலவசம் ; vii. எட்டறை மாநகரில் கோயில் கொண்டுள்ள கொன்னுகைகீயம்மை பேரிலும் சங்கிலியாண்டவர் பேரிலும் பக்தியுடன் பாடப்பெற்ற தோத்திரப் பதிகப் பாடல்கள் கொண்ட நூல்: viii. 568/1919/IV.

O31,1

1722. i. சூரிய நமஸ்காரப் பதிகம்: முதற் பதிப்பு ; ii. பகடால முனிரத்தினம் நாயுடு, இராயவேலூர் ; கிருஷ்ண விலாஸ அச்சுக்கூடம், இராயவேலூர் ; iii நவம்பர், 1916 ; iv. செ. மூ. எ. 10 ; v. 14×11 செ. மீ. ; vi........ ; vii. வைகறைப் பொழுதில் குளித்தபின் கதிரவனை வணங்கு தற்குரிய சில பக்திப் பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல். "துலங்கு கதிர் மதியென விளங்கு சிவசங்கர சூரிய நாராயண சுவாமியே" எனச் சூரியனைப் பாடல் தோறும் விளித்து அவனுடைய சிறப்புக்களைக் கூறித் தமது வணக்கத்தினை ஆசிரியர் புலப்படுத்துகின்றார். viii. 774/1916/IV.

O31,1

**1723.** i. **சூரிய நமஸ்காரப் பதிகம்**: முதற் பதிப்பு; ii. பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1918; iv. செ. மூ. எ. 10; v. 13×11 செ. மீ.; vi. 0–0–3; vii........; viii. 1104/1918/II.

O31,1

**தண்டபாணி சுவாமிகள் & செந்திநாயகம் பிள்ளை**

**1724.** i. மதுரைப் பாக்கத்துப் பதிகங்கள்: முதற் பதிப்பு; ii. செந்திநாயகம் பிள்ளை; கலாரத்தினாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. செ. மூ. ப. 21; v. 14×12 செ. மீ.; vi........; vii. மதுரைப் பாக்கத்தில் வழி பட்டு வந்த பல தெய்வங்களைப் பற்றிய பதிகங்கள். மதுரைப் பாக்கம் என்பது நடுநாட்டுச் சிவத்தலங்களில் ஒன்றாகிய புறவார் பனங்காட்டூருக்குக் கிழக்கே ஐந்து மைல் தூரத்தில் உள்ளது. துரைசாமி ரெட்டியார் என்பாரின் முயற்சியாலும் அவர்தம் குடும்பத்தாராலும் கோயில் திருப்பணி செய்யப் பெற்றது. இங்கே பெருங் குடமுழுக்கு விழாவும் நடைபெற்றது. சிவபெருமான் தோத்திரமான பதிகம், முருகன் சந்தக்கவி, சத்தி பஞ்சகம், மதுரைப் பாக்கம் பதிகம், மதுரைப்பாக்கம் மாயவன் பதிகம் ஆகியவை இதில் உள்ளன: viii. 456/1916/III.

O31,1

**தருமலிங்கஞ் செட்டியார், கே.வி.ஆர்.**

**1725.** i. சௌடாம்பிகை பேரில் பதிகம்: முதற் பதிப்பு; ii. கே. வி. ஆர். தருமலிங்கஞ் செட்டியார், அருப்புக் கோட்டை; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுப் பட்டி; iii. ஜூலை, 1917; iv. செ. மூ. எ. 7+10+3; v. 13×11 செ.மீ.; vi. 0–1–0; vii. போடிநாயக்கனூரென விளங்கும் தென்காசையம்பதியிலெழுந்தருளிய சௌடாம்பிகை பேரில் அமைந்தது இப்பதிகம். கஞ்சமாநகரம் வித்வான் எஸ். சங்கரலிங்கம் செட்டியார் முதலிய ஐவர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். அம்மை துதியான சந்தப்பாக்களும் இதில் உள: viii. 97/1917/III.

O31,1

**1726.** i. **திருநாம பதிகம்**: புதிய பதிப்பு; ii. டி. ஆர். வெங்கடேச முதலியார், சென்னை; கலைக்கியான முத்திராக்ஷர சாலை, சென்னை; iii. நவம்பர், 1916; iv. உ. ப. 8; v. 14×11 செ. மீ.; vi. 0–0–3; vii. திருமாலைக் குறித்துப் புகழ்ந்து பாடப்பெற்ற பக்திப்பாடல்கள் இதில் உள்ளன. திருமாலின் திருப்பெயர்கள் பலவும் சிறப்பித்துப் பேசப் பட்டுள்ளன. viii. 672/1917/III.

O31,1

1727. i. திருநாமப் பதிகம்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜுன், 1920; iv. செ.மூ.எ. 10; v. 14×11 செ.மீ.; vi. 0–0–3; vii........; viii. 191/1920/I.

O31,1

1728. i. திருவண்ணுமலை அருணுசலேசர் பதிகம், உண்ணுமுலையம்மன் பதிகம்: முதற் பதிப்பு; ii. பகடால முனிரத்தினம் நாயுடு, இராயவேலூர்; கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், வேலூர்; iii. டிசம்பர், 1917; iv. செ.மூ.எ. 1+11+1; v. 14×11 செ.மீ.; vi. 0–0–3; vii. திருவண்ணுமலையில் விளங்கும் அருணுசலேசர், அவர்தம் அருட்சக்தி உண்ணுமுலையம்மன் ஆகியோர் பேரில் பாடிய பதிகங்கள் இந்நாலில் அடங்கியுள்ளன: viii. 203/1918/I.

O31,1

துரைசாமி தம்பிரான், கு.

1729. i. அற்புத கற்பக விநாயகர் பேரில் பத்துப் பதிகம்: முதற் பதிப்பு; ii. கு. குருசாமி தம்பிரான், வாலாஜா; கிருஷ்ண விலாஸ அச்சுக்கூடம், வேலூர்; iii. மார்ச், 1917; iv. செ.மூ.எ. 1+11; v. 14×11 செ.மீ.; vi. 0–0–3; vii. வாலாஜா தாலுகா விலாரி மாநகரத்தைச் சேர்ந்த சொக்கன் குளத்தருகில் எழுந்தருளிய அற்புத கற்பக விநாயகர் பேரில் பாடப்பெற்ற தோத்திர நூல். தலச்சிறப்பு, சுவாமி சிறப்பு, வாத்தியச் சிறப்பு முதலியவற்றைத் தெரிவிக்கும் பாடல்கள் உள: viii. 993/1917/I.

O31,1

தேவராய சுவாமிகள்

i. சத்ரு சங்காரவேற் பதிகம் (தொ. எ. 1474 பார்க்க); ii. கே. செல்வரங்கம் அண்டு கம்பெனி, சென்னை; மனேன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1920; iv. செ.மூ.எ. 1+10; v........; vi.......; vii. தேவராய சுவாமிகள் அருளிச்செய்த கந்தர் சஷ்டிக் கவசமும், சத்ரு சங்கார வேற்பதிகமும் இந்நாலில் உள்ளன. இந்நூல்களைக் காலை மாலை ஓதின் விரும்பியது எய்தப் பெறும் என்பர் சான்றேர்: viii. 707/1920/IV.

O31,1

i. நடராஜ பத்து (தொ. எ. 1739 பார்க்க); ii. நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1919; iv. செ. மூ. எ. 11; v........; vi........; vii........; viii. 694/1919/IV.

O31,1

நடராஜன், எம்.

1730. i. கன்னியம்மன் பேரில் பதிகம்: முதற் பதிப்பு: ii. செங்கல்வராய சுவாமி, திருவொற்றியூர்; கலைக்கியான முத்திராக்ஷரசாலை, சென்னை; iii. மே, 1917; iv. செ. மூ. எ. 3+10; v. 14×11 செ. மீ.; vi. 0-0-3; vii. திருவொற்றியூரில் விளங்கும் கன்னியம்மனைக் குறித்து எழுதப்பெற்ற பக்திப் பாடல்களை இதில் காணலாம். இப் பதிகம் எழு கன்னியர்களின் சிறப்புக்களைப் பேசுகின்றது. இப்பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றும் 'தவமிக்க கன்னியர்கள். மிகமெச்சு மன்னையர்கள் ஜெய சப்த கன்னியர்களே' என்னும் முடிவினைப் பெற்றுள்ளன. viii. 674/1917/III.

O31,1

...ச படையாக்ஷி, முடிகண்டநல்லூர்

1731. i. முடியனூர் கெங்கையம்மன் பதிகம்: முதற் பதிப்பு; ii. விநாயகசுந்தர விலாசம் பிரஸ், சிதம்பரம்; iii. மார்ச், 1917; iv. செ. மூ. எ. 11; v. 20×13 செ. மீ.; vi.........; vii. முடியனூரில் விளங்கும் கெங்கையம்மனைக் குறித்துப் பாடப்பெற்ற பக்திப் பாடல்கள் இவை. முடியனூருக்கு 'நல்லூர்', 'சதாசிவபுரம்' என்னும் பெயர்களும் உண்டு. கெங்கையம்மனை ஒவ்வொரு பாடலிலும் 'கெங்கை உமையே' என விளிக்கின்றனர். viii. 14/1917/II.

O31,1

நடேசானந்தர்

1732. i. யோகானந்த அம்மையார்மீது தோத்திரப் பதிகம்: முதற் பதிப்பு; ii. யோகானந்தாஸ்ரம சாது சங்கம், வெள்ளக்குட்டை; அமெரிக்கன் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. செப்டெம்பர், 1919; iv. செ. மூ. எ. 3+10+1; v. 19×11 செ. மீ.; vi. 0-1-0; vii. வாணியம்பாடிக் கடுத்த வெள்ளக்குட்டையில் ஜெயசுந்தர விநாயகர் மடாலயத்திலெழுந்தருளியிருக்கும் யோகானந்த அம்மையார்மீது புகழ்ந்து பாடப்பெற்ற தோத்திரப் பதிகமும் குருபூஜாகிரமங்களும் இந்நூலில் அடங்கியுள்ளன. மகா குருபூஜையிற்

செய்யும் கிரியை, நிர்க்குண அஷ்டோத்திரம் ஆகிய இரண்டும் இதன் இறுதியில் அமைந்துள்ளன. விவேக சட்கம் என்ற தலைப்பில் ஆறு பாடல்கள் தனியாக அமைந்துள்ளன. viii. 212/1919/IV.

O31,1

நரசிம்ம பாகவதர், தி.

1733. i. எல்லையம்மன் பேரிற் பதிகம்: முதற் பதிப்பு; ii. எஸ். வீ. மாணிக்கச் செட்டி, பரங்கிப்பேட்டை; விநாயக சுந்தர விலாசம் அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. செப்டெம்பர், 1917; iv. செ. மூ. உ. ப. 18; v. 21×14 செ. மீ.; vi இலவசம்; vii. இந்நூலில் பரங்கிப்பேட்டை என்று வழங்கும் முத்துக் கிருஷ்ணபுரி எல்லையம்மன் பேரில் பாடப்பெற்ற பக்திப் பாடல்கள் உண்டு. 'முத்துக்கிருஷ்ணபுரிவாழ் மாரி சுகுமாரி கருணரிவரதாரியருண்மாரி எல்லம்மை உமையே' என்பதை மகுடமாகக் கொண்டு இப்பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன. viii. 94/1917/IV.

O31,1

1734. i. சிவசரவணப் பெருமான் பதிகம்: முதற் பதிப்பு; ii. வி. சோணசல நாயக்கர், திருக்கோவலூர்; கலைக்கியான முத்திராக்ஷரசாலை, சென்னை; iii. மே, 1919; iv. செ. மூ. எ. 1+11; v. 11×11 செ. மீ.; vi. 0-0-3; vii. திருவெண்ணெய்நல்லூரில் வழிபாடு செய்யப்பட்டு வருகின்ற சிவசரவணப் பெருமானைப் போற்றிப் புகழ்ந்திடும் பதிகத்தினைக் கொண்டது இந்நூல். viii. 742/1919/IV.

O31,1

1735. i. திருவண்ணாமலை ஸ்ரீ கன்னிகா பரமேச்வரி பதிகம்; ii. கோவிந்தசாமிப் பிள்ளை, திருவண்ணாமலை & ஸ்ரீமதேயாதி இராமாநுஜாசார்ய ஸ்வாமிகள்; மனோன்மணி நர்த்தனம் அச்சுக்கூடம், திருவண்ணாமலை; iii. 1917; iv. செ. மூ. எ. 1+11+1; v. 14×11 செ. மீ.; vi................; vii. திருவண்ணாமலையில் விளங்கும் கன்னிகா பரமேச்வரியின் மீது அமைந்த தோத்திரப் பாடல் - எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தத்தாலாகியது. இதிலுள்ள பாடல்கள் 'மாசிலாக் குண சாலி கேசவார்ப்பித சீலி வாசவாம்பிகையம்மையே' என்பதனை மகுடமாக பெற்றுள்ளன. viii. 813/1917/III.

O31,1

நாரணப்ப நாயக்கர், இ.விஜயரங்கபுரம்

i. சீனிவாசகப் பெருமான் பதிகம் (தொ. எ. 1422 பார்க்க):, முதற் பதிப்பு; ii. குருசாமி நாயுடு; அஷ்டலக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ. மூ. எ. 1+10; v.

22 × 14 செ. மீ.; vi . . . . .; vii. திருப்பதி ஸ்ரீனிவாசப்பெருமாள் பேரில் பாடிய தோத்திரமாலை. விருத்தப்பாவால் ஆகியது. viii. 603/1916/I.

O31,1

**நாராயணசாமி பண்டிதர், எம்., நாகப்பட்டினம்**

1736. i. மாரியம்மன் திருவருட் பதிகம் (கும்மிச் சிந்து]) ii. எம். நாராயணசாமி பண்டிதர், நாகப்பட்டினம்; நீலலோசனி அச்சுக்கூடம், நாகை; iii. டிசம்பர், 1916 ; iv. செ.மூ.எ. 11+9+2+51; v. 18×11 செ. மீ.; vi. 0–1–0; vii. தஞ்சை மாவட்டத்திலே மாயூரத்தைச் சார்ந்த மேலப்பாதிக் கிராமம் நாகார்ச்சுன திருத்தலத்தின் மத்தியில் காவேரி நதியின் உத்தரவாகினி வடபுறமிருக்கும் கிழையூர் உப்புச்சந்தை மாரியம்மன் பேரில் பாடப்பெற்ற பதிகம் முதலில் உளது. “வேதாந்தப் பொருள் முடிவில் நாதாந்த சத்தியாய் விளங் குப்புச் சந்தையுமையே” என இப்பதிகப் பாடல்கள் முடிவுறு கின்றன. அடுத்து ஒன்பது விருத்தப் பாக்கள் கொண்ட தோத்திரமாலை உளது. பின்னர் நொண்டிச்சிந்து மெட்டில் இரு பாடல்கள் உள. இறுதியில் கும்மிப் பாடல்கள் 51 அமைந்துள. viii. 54/1917/I.

O31,1

**நாராயண செட்டியார், பி., வளவனூர்**

1737 i. பாஞ்சாலியம்மன் பதிகம் : முதற் பதிப்பு; ii. சி. வரத ராஜுலு நாயுடு, அப்புசம்பாளையம்; ருக்மணிவிலாசம் பிரஸ், விழுப்புரம்; iii. 1920; iv. செ. மூ. எ. 10; v. 22×14 செ. மீ.; vi. . . . . . . . .; vii. இதில் தென்னாற்காடு மாவட்டம், விழுப்புரம் தாலூகா அப்புசம்பாளையத்தில் விளங்கும் பாஞ்சாலியம்மனைப்பற்றிய துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன. புதுவை சாப்புக்கடை திரு. முத். ராமசாமி நாயுடு, வளவ னூர் குமாரகுப்பம் திரு. மாணிக்க உபாத்தியாயர் முதலி யோர் தந்த சிறப்புப் பாயிரத்துடன் கூடியது. viii. 719/1920/I.

O31,1

**பக்தவச்சலு செட்டியார், நா.**

1738. i. அற்புத சித்தி விநாயகரின் பேரில் பத்துப் பதிகம்; முதற் பதிப்பு; ii. ந. பக்தவச்சலு செட்டியார், பூண்டி. ஷண்முக ஆனந்த அச்சுக்கூடம், போளூர்; iii. 1917; iv. செ. மூ. எ. 1+10+2; v. 14×11 செ. மீ.; vi. இலவசம்: vii. இந்நூலில் வட ஆற்காடு மாவட்டம்,போளூர் வட்டம்,பூண்டிக் கிராமத்தைச் சார்ந்த செய்யாற்றின் வடகரையில் விளங்கும் சித்தி விநாயகரைத் துதித்து எழுதப்பட்ட பக்திப்பாடல்கள் உள்ளன. viii. 151/1918/I.

O11,1

1739. i. பஞ்சாட்சரப் பதிகம் (நடராஜப்பத்து, சங்கப்புலவர் கண்ட சுத்தி); ii. நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1919; iv. செ.மூ.எ.5; v. 21×14 செ.மீ.; vi. 0–0–6; vii. சிவபெருமானை வழிபாடு செய்கின்றபொழுது கூறுகின்ற ஐந்து புனித எழுத்துக்களைப் பற்றியும் தில்லையில் கோயில் கொண்டுள்ள நடராஜப் பெருமானைப் பற்றியும் பாடிய பாடல்கள் இந்நூலின்கண் அடங்கியுள்ளன. இதில் உள்ள பாடல்கள் ஐந்தும் "அன்பிலுறை நடன பதியே" என்னும் முடிவினைக் கொண்டு அமைந்துள. viii. 694/1919/IV.

O31,1

1740. i. பட்டுக்கோட்டை பச்சை நாயகியம்மன் பதிகம் (அறை கண்டநல்லூர் வள்ளியம்மன் பதிகம், பச்சைமலை நாயகி அஷ்டதோத்திரம், பச்சைநாயகி பட்டுக்கோட்டையுற்ற வரலாறு); ii. எஸ். கெ. சொக்கலிங்கம் பிள்ளை, ம. வடிவேல் சாமி பிள்ளை, திரிசிராமலை, யாதவர்புரம், நடராஜா அச்சுக்கூடம், திருச்சி; iii. 1917; iv. செ.மூ.எ. 2+2+11; v. 15×12 செ.மீ.; vi.........; vii. பட்டுக்கோட்டையில் விளங்கும் பச்சைநாயகி அம்மனைக் குறித்த தோத்திரம். 'அரியச் சுதன் தங்கை அரன்குடி சடைக் கங்கை அருள் பச்சைமலை மங்கையே' என்னும் விளித்தொடருடன் முடிகிறது இப்பதிகம். viii. 732/1917/III.

O31,1

பரமேஸ்வரன், கொடிமங்கலம்

1741. i. இராமேஸ்வரம் ஸ்ரீஇராமநாதசுவாமி, ஸ்ரீபருவத வர்த்தனி அம்மாள் பதிகம், முதற் பதிப்பு; ii. எஸ். நாக லிங்கம் பிள்ளை, பரமக்குடி; மாணிக்கம் பிரஸ், பரமக்குடி; iii. 1915; iv. செ.மூ.எ. 2+20; v. 21×14 செ.மீ.; vi. 0–0–6; vii. இராமேசுவரம் இராமநாதசுவாமி மீதும் பருவதன்வர்த்தனி அம்பாள் மீதும் பாடிய தோத்திர மாலை. இவை விருத்தப் பாவால் ஆகிய இரு பதிகங்கள் ஆகும். இவை முறையே 'இராமேச்வரத்தில் மலை மங்கையொடி லங்கிடு மிராமநாதக் கடவுளே' என்றும், 'மகிமை தங்கிய ராமநாதர் மகிழ்கின்ற பருவத வர்த்தனி தேவியே' என்றும் மகுடங்கள் பெற்றுள்ளன. viii. 540/1916/I.

O31,

1742. i. பழனியங்கிரி அறுமுகவர் திருநீற்றுப் பதிகம். முதற் பதிப்பு; ii. பகடால முனிரத்தினம் நாயுடு, இராயவேலூர், கிருஷ்ண விலாஸ் அச்சுக்கூடம், இராயவேலூர்; iii. நவம்பர், 1916; iv. செ.மூ.எ.12; v. 14×11 செ.மீ.; vi. 0–0–3; vii. பழனிமலையில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமான் அணிந்துள்ள புனிதமான திருநீற்றின் மகிமையினை

விளக்கும் பக்திப்பாடல்களைக் கொண்டது இப்புத்தகமாகும். 'அடியவர்க்கருள் இருபை மொழி பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே' என இப்பதிகப் பாடல்கள் முடிவுறுகின்றன. viii. 773/1916/IV.

O31,1

**பழநியப்ப சுவாமிகள், அ.**

**1743.** i. முறட்டுமாநகர் கணேசர் பதிகம் முதலியவை ; ii. ஸ்டார் அச்சாபீஸ், திருப்பூர் ; iii. 1920 ; iv. செ.மூ.ப. 26 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. முறட்டுமாநகர் கணேசர், அவிநாசி ஈஸ்பரர், திருமுருகன் பூண்டி மாதேசுவரர், முயங்குபூண்முலையம்மன், சுப்பிரமணியர், திருச்செங்கோடு அர்த்தநாரீசுவரர், தண்டபாணி வீரபாகுதேவர் என்னும் தெய்வங்களின்மீது பதிகங்கள் இந்நூலில் அமைந்துள. பெருங்கருணைம்பிகை மாலை, சிவமலை சுப்பிரமணிய மாலை என இரு தோத்திர மாலைகளும் உள. viii. 60/1920/IV.

O31,1

**பெரியசாமி சேர்வை, வெ.**

**1744.** i. கரூரென்னும் கருவைக் கடவுள் பதிகம் ; ii. வெ. பெரியசாமி சேர்வை, கரூர் ; விவேகபானு அச்சியந்திரசாலை, கரூர் ; iii. மார்ச், 1918 ; iv. செ.மு.எ. 1+10+1 ; v. 20×13 செ.மீ. ; vi....... ; vii. கரூரில் திருவாநிலைக்கண் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள பசுபதீஸ்வரரின் மேல் பாடப்பெற்ற பக்திப்பாடல்கள் அமைந்த பதிகமே இந்நூலாகும். பதிகம், பத்துப் பாடல்களைக் கொண்ட சிறிய பிரபந்தம் என்னும் பொருளையுடையது. பாடல்கள் பக்திச் சுவையினை யூட்டும் பான்மையன. கடைசியில் அமைந்துள்ள வாழ்த்துப் பாடலில் பெத்தாச்சி என்பவரின் வள்ளற்றன்மை பேசப் படுவதால் அவர் இந்நூலாசிரியரை ஆதரித்த வள்ளல் எனத் தெரிய வருகின்றது. viii. 74/1918/II.

O31,1

**பெரியசாமி பிள்ளை, தெ., உறையூர்**

**1745.** i. ஸ்ரீரங்கம் ஸ்ரீசித்தி விநாயகர் பதிகம்: முதற் பதிப்பு ii. யு.ஆர். பாலகிருஷ்ணம் பிள்ளை, ஸ்ரீரங்கம் ; வெட்னஸ்டே ரிவ்யூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 7+10+1 ; v. 17×13 செ.மீ. ; vi....... ; vii. ஸ்ரீரங்கம் ஸ்ரீசித்திவிநாயகர் பேரில் தோத்திர மாலை. 'சித்தரொடு முத்தர்களு நித்தமும் பத்திபுரி சித்திக் களிற்று முகனே' என்பதை மகுடமாகக் கொண்டு ஒவ்வொரு பாடலும் முடி வுறுகின்றது. ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. பதிக இறுதியில் சந்த விருத்தம் ஒன்றும், ஒரு வெண்பாவும் உள: viii. 34/1916/I.

O31,1

**மணிமுத்துப் பிள்ளை**

1746. i. சோழபுரம் பத்திரகாளியம்மன் பதிகம்: முதற் பதிப்பு; ii.......; iii. மே, 1918; iv. செ.மூ.எ. 4+1+10+1; v; 21×14 செ.மீ.; vi. 0-1-0; vii. சோழபுரத்தில் கோயில் கொண்டுள்ள பத்திரகாளியம்மன் மீது பாடப்பெற்ற பக்திப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். எட்டயபுரம் சமஸ்தானம் சேட்டிய மணியக்காரர் குமாரர் வாலைதாசனென்னும் பேர் விளங்கிய சோதிட இராமசாமிக் கவிராயர், எட்டயபுரத்தைச் சார்ந்த சோழபுரம் சி. மா. அ. ராமசாமி முதலியோர் சாத்துக் கவிகள் தந்துள்ளனர். viii. 122/1918/III.

O31,1

**மணியன் பிள்ளை, எம்.எஸ்.**

1747. i. அர்ச். மரியம்மை பதிகம்: முதற் பதிப்பு; ii. எம்.எஸ். மணியம் பிள்ளை, திருச்சிராப்பள்ளி; செயிண்ட் ஜோஸப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. டிசம்பர், 1917; iv. செ.மூ.எ. 5+10+1; v.....; vi. 0-0-6; vii. கிருத்துவ, கத்தோலிக்க சமயத்தார் தொழும் தேவமாதா மேரியம்மையைப் போற்றி எழுதப்பெற்ற பாடல்கள் அடங்கியுள்ளன. திரிசிரபுரம் அ. சிவப்பிரகாசம் பிள்ளை, திரிசிரபுரம் அ. சுந்தரநாத பிள்ளை, திரிசிரபுரம் ரா. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, நாவல்பாட்டு அ. குப்புசாமிப் பிள்ளை, வரகநேரி ஆ.து.பி. தேவதாசு, இந்நூலாசிரியரின் மாணவர் தேவதானம் ப.செ. இராயப்புலவர் என்போர் பாடிய சாற்றுக் கவிகளும் இச்சிறு நூலுக்கு உண்டு. viii. 908/1917/IV.

O31,1

1748. i. அர்ச். மரியம்மை பதிகம்: இரண்டாம் பதிப்பு; ii. ஜோசப் ஐயர், திருச்சி; செயிண்ட் ஜோசப் இண்டஸ்ட்ரியல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. ஆகஸ்ட், 1918; iv. செ.மூ.எ. 10; v. 18×11 செ.மீ.; vi. 0-1-0; vii. ....; viii. 828/1918/III.

O31,1

**மருதாசலக் கவுண்டர், விலாங்குறிச்சி**

1749. i. பேரூர்ப் பட்டீசுரன் பதிகம் (விளாங்குறிச்சி அங்காளம்மன் பதிகம்) முதற் பதிப்பு; ii. மருதாசலக் கவுண்டர், விலாங்குறிச்சி; இராமச்சந்திர விலாஸ் அச்சியந்திரசாலை, கோயம்புத்தூர்; iii. நவம்பர், 1916; iv. செ.மூ.எ. 10; v. 15×10 செ.மீ.; vi. இலவசம்; vii. பேரூரில் கோயில் கொண்டுள்ள பட்டீசுவரன் மீது பாடப்பெற்ற பதிகப் பாடல்கள் கொண்ட நூல். தவிரவும் விளாங்குறிச்சியில் கோயில் கொண்டுள்ள அங்காளம்மனின் மீது பாடப்பெற்ற பதிகப்பாடல்களும் இப்புத்தகத்தில் உள்ளன. திருப்போரூர் சுப்பிரமணிய சுவாமி, கருணைலெய சுவாமிகள் முதலியோர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 558/1916/IV. O31, 1

i. விளாங்குறிச்சி அங்காளம்மன் பதிகம்(தொ. எ. 1749 பார்க்க): முதற் பதிப்பு; ii. இராமச்சந்திர விலாஸ் அச்சியந்திரசாலை, கோயம்புத்தூர்; iii. 1916; iv. செ. மூ.எ.. 10+10; v......; vi....; vii.விளாங்குறிச்சியில் எழுந்தருளியிருக்கும் அங்காளம்மனைப்பற்றிய துதி. மேலும் அங்காளம்மன் திரிவூசல் பாடல் பத்தும் உள. இது இறைவியை ஊஞ்சலாடியருளுமாறு வேண்டும் வகையில் அமைந்துள்ளது. viii. 558/ 1916/ IV.

O31,1

1750. i. **மலையனூர் அங்காளம்மன் பேரில் பதிகம்**: முதற் பதிப்பு; ii. ஆர். நாராயணசாமி பிள்ளை & பிரதர், சென்னை; நற்றமிழ்; விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1918; iv. செ.மூ.எ. 10; v. 13×11 செ.மீ.; vi. 0-0-3; vii. மலையனூரில் கோயில் கொண்டுள்ள அங்காளம்மன் பேரில் பாடப்பெற்ற தோத்திரப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். மாரியம்மன் படமும் முதலில் தரப்பட்டிருக்கிறது. இப்பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றும் 'ஓங்கார சக்தியே பூங்காவனத் தாயியே' என்னும் விளியுடன் முடிவுறுகின்றது. viii. 1103/1918/III.

O31,1

**மீனாக்ஷிசுந்தரஞ் செட்டியார், சு.வை., பூவுற்ற குடிநகரம்**

1751. i. சித்த கன்னி வீரசத்தி விநாயகர் பதிகம்; ii. சுப்பிரமணியய்யர், கருத்தட்டான்குடி, தஞ்சாவூர்; ஸ்ரீகுஞ்சித சரண அச்சியந்திரசாலை, சிதம்பரம்; iii. 1917; iv. செ. மூ. எ. 5+1+1+10; v. 13×11 செ.மீ.; vi.........; vii. சித்த கன்னி என்னும் திருப்பதியில் விளங்கும் விநாயகப் பெருமானைப் பற்றிய தோத்திரம். இவருடைய திருநாமம் வீரசத்தி விநாயகர் என்பது. தஞ்சைச் சதாவதானம் சுப்பிரமணிய ஐயரால் பார்வையிடப்பட்டுப் பதிப்பிக்கப் பெற்றது இந்நூல். நா. சிவராமச் செட்டியாரும் மற்றொருவரும் பாடிய சாற்றுக் கவியும் இதற்கு உண்டு. viii. 929/1917/III.

O31,1

**முத்துசாமி உடையார், கு., பாதாங்கி**

i. பாதாங்கி சிவசுப்பிரமணியக் கடவுள் பதிகம் (தொ. எ. 1752 பார்க்க): முதற் பதிப்பு; ii. கு. முத்துசாமி உடையார், பாதாங்கி; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மார்ச், 1917; iv. செ.மூ.எ. 1+10+1; v....; vi......; vii. பாதாங்கி சிவசுப்பிரமணியக் கடவுள் மீது பாடப் பெற்ற பதிகப் பாடல்கள் இவை. viii. 1085/1917/I.

O31,1

1752. i. பாதாங்கி செல்வவிநாயகக் கடவுள் பதிகம் (சிவசுப்ரமண்யக் கடவுள் பதிகம், வரதராஜப் பெருமாள் பதிகம், விஸ்வநாதீஸ்வரர் பஞ்சகம்): முதற் பதிப்பு; ii. கு. முத்துசாமி

உடையார், பாதாங்கி; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மார்ச், 1917; iv. செ.மூ.எ. 4+1+10+1; v. 21×13 செ.மீ.; vi. 0–2–0; vii. பாதாங்கி செல்வவிநாயகக் கடவுளைக் குறித்துப் பாடப் பெற்ற பதிகப் பாடல்கள் உள்ளன. இவர் பாடி அச்சிடப் பெறாது இருக்கும் நூல்களைக் குறித்தும் விவரம் தந்துள்ளார். அவையாவன : ஸ்ரீஅழகேஸ்வரர் பதிகம், அழகேஸ்வரியம்மன் பதிகம், ஸ்ரீசுப்பிரமணியர் வண்ண விருத்த பஞ்சரத்னம், திருப்போரூர் சிவசண்முக மாலை, திருவண்ணுமலை ஸ்ரீஅருணுசலேசுரர் பதிகம், ஸ்ரீஉண்ணுமுலை யம்மன் பதிகம், திருப்பழநி கந்தவேள் விருத்தம் முதலியன. viii. 1085/1917/I.

O31,1

i. பாதாங்கி வரதராஜப் பெருமாள் பதிகம் (தொ.எ.1752 பார்க்க): முதற் பதிப்பு; ii. கு. முத்துசாமி உடையார், பாதாங்கி; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மார்ச், 1917; iv. செ.மூ.எ. 1+10+1; v......; vi....; vii. பாதாங்கியில் விளங்கும் வரதராஜப் பெருமாளின் மீது பாடப் பெற்ற தோத்திர நூல். viii. 1085/1917/I.

O31,1

**முத்துசாமி உபாத்தியாயர், சி., பசும்பலூர்**

i. சித்தநாத சுவாமிகள் பதிகம் (தொ.எ. 1766 பார்க்க); ii. கு. முத்துசாமி உடையார், பாதாங்கி; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. 1915; iv. செ.மூ.எ. 4+10; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0; vii. குகையூர் சித்த நாதரைப் பற்றிய தோத்திரப் பதிகம். இதன் தொடக்கத்தில் சுவாமிகளின் திருச்சரிதம் உரைநடையில் உள்ளது. 'சித்த நாதேந்திரச் சிவமே' என்னும் முடிவினைக் கொண்டு இப் பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன. viii. 20/1916/I.

O31,1

**முத்துசாமிப் பிள்ளை, ந., அச்சிறுபாக்கம்**

1753. i. ஜமீன் நல்லாமூர் ஸ்ரீதிரௌபதையம்மன் பேரில் பதிகம்: முதற் பதிப்பு; ii. ந. முத்துசாமிப் பிள்ளை, அச்சிறுபாக்கம். சத்தாரியா பிரஸ், திண்டிவனம்; iii. ஜூன், 1919; iv. செ.மூ.எ. 1+1+11; v. 15×11 செ.மீ.; vi..........; vii. இந்நூலில் மதுராந்தகம் தாலுகா, ஜமீன் நல்லாமூரின்கண் விளங்கும் திரௌபதையம்மனைக் குறித்து பாடப் பெற்ற தோத்திரப் பாடல்கள் அடங்கியுள்ளன. 'கருணீக வம்ஸ முத்துச்சாமி வழுத்துமிப் பதிகம் வாழி' என ஆசிரியர் இறுதிப் பாடலில் தம் பெயரையும் குலத்தையும் குறிப் பிட்டுள்ளார். 'வளமுறும் நல்லாவூர் வாழுமென்றல்லியே மாது திரௌபதி வல்லியே' என இப்பதிகப் பாடல்கள் முடிவுறுகின்றன. இங்கே 'தல்லி' என்பது தாய் என்னும்

பொருள் தரும் தெலுங்குச் சொல். தேவனந்தல் பு. நாராயணசாமி நாயுடு என்பார் இதற்குச் சாற்றுக் கவி பாடியுள்ளார். viii. 28/1919/III.

031,1

**முத்து சுப்ப பாரதி, பு. வே., அரிகேசநல்லூர்**

**1754.** i. கருவூர் பசுபதி நாதர் பதிகம்: முதற் பதிப்பு; ii. பு.வ. முத்து சுப்ப பாரதி; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ்; மதுரை; iii. மார்ச், 1920; iv. செ.மூ.எ. 1+10; v. 14×11 செ.மீ.; vi.........; vii. கருவூரில் விளங்கும் பசுபதிநாதரைப் பற்றிய தோத்திரப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இப்பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றும் "பாலலோசன கால பாச மோசன சூலபாணி பசுபதிநாதனே" என்று முடிவுறுகின்றது. viii. 334/1920/II.

031,1

**1755.** பதிகத் திரட்டு—முதற்பாகம்; ii. எம். ஹரிஹரமையர், அரிகேசநல்லூர்; ஸ்ரீகிருஷ்ணவிலாச அச்சியந்திரசாலை, திருமங்கலம்; iii. 1917; iv. செ.மூ.ப. 56; v. 14×12 செ.மீ.; [illegible] இந்நூலில் அரிகேசநல்லூர் விநாயக[illegible]லயத்து ஷண்முகப் பெருமான் பேரிலும், [illegible] என்ற அரிகேச சுவாமி பேரிலும், பிருகந் நாயகியம்மாள் பேரிலும் பதிகப் பாடல்கள் உள்ளன. ஏற்கெனவே அச்சில் வெளிவந்த பதிகங்கள் ஸ்ரீஸ்காந்தப் பதிகம், ஸ்ரீமத் இராமாயணப் பதிகம் என்னும் இவ்விரண்டுமாம். இவையாவும் தெய்வ தோத்திரங்களாக அமைந்தனவாகும். viii. 117/1917/II.

031,1

**முத்துவடிவேலு பத்தர், தில்லையாளி**

**1756.** காத்தாயி அம்மன் பதிகம்: முதற் பதிப்பு; ii. கே. வெங்கட்ராம அய்யர், மாயவரம்; ஸரஸ்வதி விலாஸ பிரஸ், மாயவரம்; iii. செப்டம்பர், 1918; iv. செ.மூ.எ. 10; v. 14×12 செ.மீ. vi. இலவசம்; vii. மாயூரத்தைச் சார்ந்த மூங்கில் தோட்டத்தில் கோயில் கொண்டுள்ள காத்தாயி அம்மன் மீது பாடப் பெற்ற பாடல்களைக் கொண்டது இப்பதிகம். இப்பதிகப் பாடல் ஒவ்வொன்றும் 'தேங்கு புகழ் மூங்கில் வனமோங்கு காத்தாயியே தேவியே எனதாவியே' என்று முடிவுறுகின்றது. மாயவரம் ஸ்ரீ ந. விஸ்வலிங்கக் கண்டர் இயற்றிய சிறப்புப் பாயிரத்துடன் கூடியது. viii. 133/1918/IV.

031,1

**முனுசாமி முதலியார், சிறுமணவை**

**1757.** i. நடராஜப் பத்து; ii. பகடால. முனிரத்தினம் நாயுடு இராயவேலூர்; கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், இராயவேலூர்; iii. 1916; iv. செ.மூ.எ. 11; v. 14×11 செ.மீ.;

vi. 0-0-3; vii. சிதம்பரத்தில் கோயில் கொண்டருளும் நடராசப் பெருமானைப் பற்றிய தோத்திரமாலை. 'ஈசனே சிவகாமி நேசனே எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே' என்பதனை மகுடமாகப் பெற்று இப்பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன. இறுதிப்பாடல் 'கோள் நீக்கம்' பற்றி வேண்டுகிறது. மேலும், இப்பாடலில் ஆசிரியர் 'இனிய வளமருவு சிறுமணவை முனிசாமி எனையாள்வது இனி உன் கடன் காண்' எனக் கூறுதலின் இப்பதிக ஆசிரியர் சிறுமணவை முனிசாமி முதலியார் என்பது புலனாகும். viii. 838/1916/I.

O31,1

1758. i. மெய்கண்ட தேசிகன் பதிகம்; ii. நரசிம்ம பாகவதர், திருவெண்ணெய்நல்லூர்; பு. வி. பிரஸ், திருக்கோவலூர்; iii. செப்டெம்பர், 1919; iv. செ.மூ.எ. 10+1; v. 11×8 செ.மீ.; vi. இலவசம்; vii. சைவசமய சந்தான ஆசிரியர்கள் நால்வரில் முதல்வராய்ச் சிவஞான போதம் என்னும் அரிய நூலைத் திருவாய் மலர்ந்தருளிய மெய்கண்ட தேசிக சுவாமிகளின் மீது பாடப்பெற்ற அழகிய கட்டளைக் கலித்துறைகளைக் கொண்டது இந்நூல். viii. 822/1920/II.

O31,1

1759. i. மெய்யாற்றூர் பதிகம்: முதற் பதிப்பு; ii. மெய்கண்ட தேவருரைமுகம் மாணுக்கன், சிதம்பரம்; ஸ்ரீகுஞ்சித சரண பிரஸ், சிதம்பரம்; iii. பிப்ரவரி, 1919; iv. செ.மூ.எ. 10; v. 11×8 செ.மீ.; vi. இலவசம்; vii. மெய்யாற்றூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் மீது பாடப்பெற்ற பதிகப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். viii. 792/1919/I.

O31,1

ரமண மகரிஷி

i. அருணசல பதிகம் (தொ.எ. 1793 பார்க்க); முதற் பதிப்பு ii. எஸ். நாராயண செட்டி; மினர்வா அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.எ. 11; v........;vi........; vii. அண்ணமலைப் பெருமானைக் குறித்த துதிப்பதிகம். இப்பதிகம் அந்தாதியாக அமைந்துள்ளது. viii. 238/1917/I.

O31,1

ராமபத்திர பிள்ளை, கம்பர்

1760. i. மதுரை செல்வத்தம்மன் தோத்திரப் பதிகம்: முதற் பதிப்பு; ii. கவிராஜ ராமசாமி; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1918; iv. செ.மூ.எ. 10; v. 14×11 செ.மீ.; vi. 0-0-6; vii. மதுரையில் வடக்கு வாசலில் கோயில் கொண்டுள்ள செல்

வத்தம்மன் மீது பாடப்பெற்ற தோத்திரப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். 'திருமாது புகழ் வல்லி, செகமெங்கி நுந்தல்லி, செண்பகச் செல்வி உமையே' என்னும் முடிவினை இப்பதிகப் பாடல்கள் கொண்டுள்ளன. viii. 445/1918/IV.

O31,1

**ராமக்குருக்கள், முத்துநாடு, இராமநாதபுரம்**

1761. i. அங்காளம்மன் பதிகமும் தாலாட்டும் : முதற் பதிப்பு ii. கணபதிசாமிக் குருக்கள், அமராவதிபுதூர் ; வைசிய மித்திரன் பிரஸ், காரைக்குடி ; iii. 1916 ; iv. செ.மூ.எ. 1+10+8 ; v. 21×14 செ.மீ. ; vi. .............. ; vii. நன்னிலந் தாலூகா, மாப்பிள்ளைக்குப்பத்தில் எழுந்தருளி யிருக்கும் அங்காளம்மன் மீது பாடப்பட்ட பதிகமும் தாலாட்டும் அடங்கியது. பதிகப் பாடல்கள் ஆசிரியவிருத்தத்தால் அமைந்தவை. "ஆதாரமான பொருள் வேதாந்த ரூபி நீ அங்காள வல்லி உமையே" என்பதனை மகுடமாகக் கொண்டு ஒவ்வொரு பாடலும் முடிவுறுகின்றது. தாலாட்டுப் பற்றிய பாடல்கள் எட்டு உள்ளன. viii. 354/1916/III.

O31,1

**வாஞ்சலிங்க படையாச்சி, க.**

1762. i. சுப்பிரமணியர் பதிகம் : முதற் பதிப்பு ; ii. சிங்கார வேலு படையாச்சி, சின்னசாமி உடையார் & எ. எஸ். பெரிய தம்பிதேவர், சிதம்பரம் ; ஸ்ரீபாலாம்பிகா விலாச அச்சுக் கூடம், சிதம்பரம் ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 1+10 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—1—0 ; vii. அறந்தாங்கியில் கோயில் கொண்டிருக்கும் ஆறுமுகனைத் துதிக்கும் தோத்திர மாலை. நாடியே அறந்தாங்கி தேடியே விளையாடும் நாதனே சுப்பிரமணியம்' என்னும் முடிவைப் பெற்று இப்பதிகப் பாடல்கள் அமைந்துள. பதிகத்தை அடுத்துச் சிந்துப்பாடல் ஒன்றும் அமைந்துள்ளது. viii. 481/1916/I.

O31,1

1763. i. வீரவாகு தேவர் பதிகம் : முதற் பதிப்பு ; ii. த. சு அப்பாவு பிள்ளை, தவத்துறை ; அழகர் விலாஸ அச்சுக் கூடம் திருவாதி ; iii. செப்டெம்பர், 1920 ; iv. உ. ப. 12 . v 19×11 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. வீரவாகு தேவரைப் போற்றிப் பாடப்பெற்ற வீரவாகு தேவர் பதிகமும், நவ வீரரைப் புகழ்ந்து பாடப்பெற்ற பதிகமும் இதன்கண் உள்ளன. viii. 931/1920/III.

O31,1

**வீராசாமிப் பிள்ளை, கே., திண்டுக்கல் & வெங்கடாசலம் பிள்ளை பி.எம்., திண்டுக்கல்**

1764. i. அபிராமி அம்மன் பதிகம் (பஞ்சரத்னப் பாமாலை) ; ii. கே. வீராசாமிப் பிள்ளை, திண்டுக்கல் ; அபிராமி விலாசம் பிரஸ், திண்டுக்கல் ; iii. டிசம்பர், 1916 ; iv. செ.மூ.எ. 11 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. திண்டுக் கல்லில் விளங்கும் அபிராமி அம்மனைக் குறித்துப் பாடப் பெற்ற பக்திப் பாடல்கள் கொண்டது. திண்டுக்கல் 'பிளீடர்' வெங்குஸாமி ஐயரவர்கள் இயற்றிய சாத்துக்கவி இதில் உள்ளது. 'அருண் ஞான முதல்வியே யணி திண்டி நகர் மேவும் அபிராமியம்மை உமையே' என்னும் விளியைப் பாடல்களின் மகுடமாகப் பெற்றுள்ளது இப்பதிகம். இங்கே திண்டி நகர் என்பது திண்டுக்கல் நகரைக் குறிப்பிடுவதாகும். viii. 327/1917/I.

O31,1

**வெள்ளையாண்டிப் பிள்ளை, போடிநாயக்கனூர்**

1765. i. பரங்கிரிப் பதிகம் : முதற் பதிப்பு ; ii. எச். எஸ். ரகமதுல்லா சாகிப், போடிநாயக்கனூர் ; ஹக்கீம் பிரஸ், போடிநாயக்கனூர் ; iii. நவம்பர், 1916 ; iv. செ. மூ. எ. 14 ; v. 18×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. திருப்பரங் குன்றம் சுப்பிரமணியக் கடவுளைக் குறித்துப் பாடப்பெற்ற தோத்திரப் பாக்கள் கொண்டது இந்நூல். "திருப்பரங்குன்றி லுறை தேசிகா மெஞ்ஞான சிவ சுப்ரமண்ய தேவே" என்பதனை மகுடமாகக்கொண்டு அமைந்துள்ளன இப்பதிகப் பாடல்கள். இதனை அச்சிடப் பொருளுதவியவர் போடிநாயக் கனூர் ஜமீன்தாரிணி காமுலம்மாள் ஆவர். போடிநாயக்கனூர் கே. பாலசுப்பிரமணிய பாரதி, கு. அண்ணாமலைப் பிள்ளை முதலியோர் பாடிய சாற்றுக் கவிகள் நூலின் தொடக்கத்திலும் இறுதியிலுமாகத் தரப்பட்டுள்ளன. viii. 143/1917/I.

O31,1

**வேங்கட சுப்புப் பிள்ளை, அரன்வாயில்**

i. சித்தநாத சுவாமிகள் தோத்திரப்பா (தொ. எ. 1766 பார்க்க) ; ii. சி. முத்துசாமி உபாத்தியாயர், பசும்பலூர் ; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 10 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. கூகையூரில் தவசிரேட்டராய் விளங்கிய வீர சைவப் பெரியார் சித்தநாதரைப் பற்றிய துதிநூல். viii 20/1916/I.

O31,1

**வேங்கட சுப்புப் பிள்ளை முதலியோர்**

1766. i. சித்தநாத சுவாமிகளின் திருப்பதிகங்களும் திவ்ய சரிதமும்: முதற் பதிப்பு; ii. சி. முத்துசாமி உபாத்தியாயர் பசும்பலூர் & முத்துசாமி உடையார், பாதாங்கி; ஸ்ரீ குஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. 1915; iv. செ.மூ.எ. 10+10+16; v. 14×11 செ.மீ.; vi. 0—1—0; vii. கூகையூர் சித்தநாத சுவாமிகளின் பேரில் தோத்திரப் பதிகமும் அவருடைய வாழ்க்கை வரலாறும் அடங்கியுள்ளன. அரன் வாயில் வேங்கட சுப்புப் பிள்ளை, சப்தகூடல் வைத்தியலிங்க அய்யர், பசும்பலூர் சி. முத்துசாமி உபாத்தியாயர் ஆகியோர் பாடிய பதிகங்கள் இதில் உள்ளன. சுவாமிகளின் வாழ்க்கை வரலாறு உரைநடையில் உள்ளது. விநாயகர் சோடசக் குறள் வெண்பா என்னும் நூல் இறுதியில் உள்ளது. viii. 20/1916/I.

O31,1

1767 **வேம்புலியம்மன் பேரில் பதிகம்**: i. முதற்பதிப்பு. ii. பகடால முனிரத்திணம் நாயுடு, இராயவேலூர்; கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், இரயா வேலூர்: iii நவம்பர், 1916; iv. செ. மூ. எ. 10; v. 14×12 செ. மீ.; vi. 0-0-3; vii. சுப்பிரமணிய சுவாமிகள் பேரில் பாடப்பெற்ற பதிகப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகமாகும். வேம்புலி மகமாயின் மகிமையைப் பேசுகிறது. viii. 779/1916/IV.

O31,1

**வேல்ச்சாமி கவிராயர், எம்.ஆர்.எஸ்., பழ.**

1768. i. தோத்திரப் பிரபந்தம்: முதற் பதிப்பு; ii. பெ.மு. முத்து வயிரவ பிள்ளை; அஷ்டலக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை: iii. எப்ரல், 1918; iv. செ. மூ. எ. 7+20; v. 21×14 செ. மீ.; vi. ..........; vii. காராள வம்ச பரம்பரைப் பக்திமான்களுக்குக் காரணக் கொண்டாட்டமாகிய திருவையாற்றுச் சமீபம் எழுந்தருளிய இஷ்ட குல தெய்வப் பிரயத்தனமாகிய வரந்தற் பாசுரசேகரம், உதிய மரக் கருப்பணசாமி பதிகம், கரைமேல் அழகர் சுவாமி பதிகம், மதுரை வீரசாமி பதிகம் ஆகியன இதன்கண் உள்ளன. viii. 421/1918/II.

O31,1

**வேலாயுதம் பிள்ளை, பி.**

i. கற்பாத்தி லக்ஷ்மி நாராயணர் பதிகம் (தொ. எ. 608 பார்க்க); ii. ஆர். பஸவைய்ய நாய்க்கர், பாலக்காடு; வித்ய சந்தானம் அச்சியந்திர சாலை, பாலக்காடு; iii. 1913;

iv. செ. மூ. எ. 10; vii. கற்பாத்தியில் கோயில் கொண்டுள்ள இலக்குமிநாராயணர் மேல் பாடப் பெற்ற பத்து ஆசிரிய விருத்தங்களைத்தன்பால் கொண்டது இப்பதிகம். viii. 604/1918/IV.

O31,1

i. கற்பாத்தி விஸ்வநாதர் பதிகம் (தொ. எ. 607 பார்க்க); ii. பஸவைய நாய்க்கர், பாலக்காடு; வித்யா சந்தானம் அச்சியந்திரசாலை, பாலக்காடு; iii. 1918; iv. செ. மூ. எ. 10; v.........; vi..........; vii. பாலக்காட்டுக் கருகில் உள்ள கற்பாத்தியில் எழுந்தருளியிருக்கும் விஸ்வநாதப் பெருமானைப் பற்றிப் பாடப் பெற்ற பத்து திருவிருத்தங்களையுடையது இப்பதிகம். viii. 604/1918/IV.

O31,1

i பழனித் தண்டபாணி பதிகம் (தொ. எ. 607 பார்க்க); ii. ஆர். பஸவைய நாய்க்கர், பாலக்காடு; வித்யா சந்தானம் அச்சியந்திரசாலை, பாலக்காடு; iii. 1918; iv. செ. மூ. எ 10; v.........; vi.........; vii. தென் பழனியில் கோயில் கொண்டெழுந் தருளியுள்ள முருகப்பெருமான் திருவருளை வேண்டிப் பாடப்பெற்ற பதினொரு பாடல்களைக் கொண்டது இப்பதிகம். viii. 604/1918/IV.

O31,1

**வைகுண்டராம, மூப்பனர், பெ.**

i. சுந்தர மகாலிங்க சுவாமி பதிகம் (தொ. எ. 1558 பார்க்க ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை; iii. செப்டம்பர், 1917; iv. செ மூ. எ. 10; v.........; vi.........; vii. இதில் சதுரகிரி சுந்தர மகாலிங்க சுவாமியைப் போற்றி எழுதப் பெற்ற பாடல்கள் அடங்கியுள்ளன. 'துங்கசதுரங்கிரியிலங்கிவளர் தங்கமே சுந்தர மகாலிங்கமே' என இப்பதிகப் பாடல்கள் முடிவுறுகின்றன. viii. 29/1917/IV.

O31,1

**வைத்தியலிங்க அய்யர், சாத்துக்குடல் என்னும் சப்தகூடல்**

i. சித்தநாத சுவாமிகள் திருவிருத்தம் (தொ. எ. 1766 பார்க்க); ii. சி. முத்துசாமி உபாத்தியாயர், பசும்பலூர்; ஸ்ரீ குஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. 1915; iv. செ. மூ. எ. 10; v. 14×11 செ. மீ.; vi. 0-1-0; vii. இதற்குக் குகையூர் சித்தநாதர் பதிகம் என்றும் பெயர் உண்டு. "திசைபுகழ் குகையூரிசை பெறமருவும் சித்தநாதாந்த தேசிகனே" என்னும் மகுடத்தைக் கொண்டு ஒவ்வொரு பாடலும் முடிவுறுகின்றது. ஆசிரியவிருத்தத்தால் ஆகியது இப்பதிகம். viii. 20/1916/I.

O31,1

**ஜீவகாருண்ணியம் பிள்ளை, எஸ்.**

1769. i. பெருமுளை ஸ்ரீ சுப்பிரமணிய கடவுளாகிய முத்தையர் பேரில் பதிகம்; ii. ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. 1917; iv. செ. மூ.எ. 1+10+1; v. 13×11 செ. மீ.; vi. 0–1–0; vii. பெருமுளை என்னும் ஊரில் விளங்கும் சுப்பிரமணியக் கடவுளைக் குறித்த தோத்திரம். 'பெருமுளை முத்தையர் பேரில் பதிகம்' என்றும் இது கூறப்படும். இறுதியில் உள்ள வாழ்த்துப் பாடலில் "வாழி ஜார்ஜ் மகிபரும் வாழியே" என மன்னருக்கும் வாழ்த்துக் கூறியுள்ளார். viii. 859/1917/III.

O31,1

**ஷண்முக ஐயர், மா.**

1770. i. கடலங்குடி ஸ்ரீ மாரியம்மன் பதிகம்; ii. அப்புப் பிள்ளை, சிதம்பரம்; விநாயக சுந்தர விலாச அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. ஏப்ரல், 1917; iv. செ. மூ. எ. 5+10; v. 14×11 செ. மீ.; vi. ..........; vii. கடலங்குடியில் விளங்கும் மாரியம்மனைக் குறித்துப் பாடப் பெற்ற பதிகப் பாடல்கள். 'கன்னியே சகலர்க்கு மன்னையே மீனன்ன கண்ணி மகமாரி யுமையே' என இப்பதிகப் பாடல்கள் முடிவுறுகின்றன. சிதம்பரம் ஷண்முக சுவாமிகள் என்பாரும் அரசங்குடி அப்பாவு பிள்ளை என்பாரும் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். viii. 747 / 1917 / II.

O31,1

**ஷண்முகானந்த சுவாமிகள்**

1771. i. ஸ்ரீகாழிக் கவுணியின் பதிகமும் உயிர் வருக்க நாமாவளியும் பிறவும்: முதற் பதிப்பு; ii. கலைக்கியானம் பிரஸ் சென்னை; iii. மே, 1917; iv. செ. மூ. ப. 8; v. 22×14 செ. மீ.; vi. இலவசம்; vii. சைவப் பெரியாரான திருஞானசம்பந்தரைப் போற்றி எழுதப்பெற்ற பாடல்கள் அடங்கியது. இதில் ஸ்ரீகாழிக் கவுணியின் பதிகமும் உயிர்வருக்க மாலையும் நாமாவளியும் பிறவும் அடங்கியுள்ளன. viii. 673/1917/III.

O31, 1

## பள்ளு

**இராமநாதன் கவிராயர், ஆழ்வார்குறிச்சி**

1772. i. சிவசயிலப்பள்ளு: முதற்பதிப்பு; ii. சிவசயில முதலியார். [illegible] கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங்[illegible], 1918; iv. செ. மூ. எ. 107; v. 12×10 செ. மீ.; vi. 0–4–0; vii. தமிழுக்குரியனவாகச் சொல்லப்படுகின்ற தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் இது (பள்ளு) 'உழத்திப்பாட்டு', என்ற வகையைச் சார்ந்தது.

சிவசயிலநாத சுவாமியினைப் போற்றிப் புகழும் பாடல்களை உடையது. முக்கூடற் பள்ளினைப் போல இதன் கண்ணும் இனிய கவிநயம் அமைந்துள்ளது. இவ்வாசிரியர் 200 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்தவர் என்று முன்னுரையில் கூறப்பட்டிருக்கிறது. இந்நூலுள் ஆறை. அழகப்ப முதலியாரைச் சிறப்பித்துக் கவி பாடியுள்ளார் இவர். திருவாங்கூர் மன்னர் மார்த்தாண்டவர்மா காலத்து வாழ்ந்து அரசியல் தொடர்பு கொண்டவர். ஏட்டுப் பிரதியைச் சோதிக்கும் போது திருநெல்வேலி வக்கீல் வையாபுரிப் பிள்ளையும் பதிப்பாசிரியருக்கு உடனிருந்து உதவியதாகத் தெரியவருகிறது. viii. 783/1918/IV.

O31, 1

**கடிகை முத்துப் புலவர்**

i. வடகரைத் துரையவர்கள் பேரில் பட்பிரபந்தம் (தொ. எ. 2465 பார்க்க) ; ii. பி. சி. சி. பாண்டியன் அண்டு பி. வி. சி. பாண்டியன் ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. 1916 ; iv. செ. மூ. ப. 37 ;v ....;vi....;vii. குற்றாலலிங்க சுவாமி கோவில் தூணிலுள்ள கற்சிலையிரண்டில் ஒருவரான வடகரைத் துரையவர்கள் பேரில் பாடப்பெற்ற பட்பிரபந்தம். நாட்டுவளம் முதலிய கூறுவதுடன், பள்ளன், பள்ளியர் வாழ்க்கையையும் சித்தரிப்பது. viii. 49/1916/II.

O31,1

## பாவைப் பாட்டு

**அவிரோதி நாதர்**

1773. i. திருவெம்பாவை. முதற் பதிப்பு ; ii. சக்கரவர்த்தி நயினார், மேல்மின்னல் ; தருமசீலன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. உ.ப. 13 ; v. 16×13 செ. மீ. ; vi. 0–1–6 ; vii. இறைவனைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டது திருவெம்பாவை. நூலின் இறுதியில் கடினமான வார்த்தைகளுக்குப் பொருள் விளக்கம் உள்ளது. மணிவாசகரின் திருவெம்பாவை போலவே இதுவும் இருபது பாடல்களைக் கொண்டுள்ளதோடு அமைப்பு முறையிலும் பெரிதும் ஒப்புமை உடையது. viii. 386/1920/IV.

O31, 1

## பிள்ளைத் தமிழ்

**அரிகரமையர், அம்பாசமுத்திரம்**

1774. i. குமாரக் கடவுள். பிள்ளைத் தமிழ் : முதற் பதிப்பு ; ii. அரிகரமையர், அம்பாசமுத்திரம் ; லாலி எலக்டிரிக் அ... iii. 1915 ; iv. செ. மூ. எ. 100

harihesanallur murugan

v. 22×14 செ. மீ.; vi. . . . . . . . . .; vii. அரிகேச நல்லூரென்ற அரிகையில் பஜன மடாலயத்திலெழுந்தருளி விளங்கும் குமாரக் கடவுள் மீது பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ். "அரிகை பசன மடாலயத்து குமாரக் கடவுள் பிள்ளைத்தமிழ்" எனவும் இது வழங்கப்படும்; viii. 510/1916/II.

O31,1

**இராமநாதப் பிள்ளை, சாணுங்குப்பம்**

1775. i. திருத்துருவமலை முருகன் பிள்ளைத் தமிழ் : முதற் பதிப்பு ; ii. மு. சுந்தர முதலியார், ஆரணி ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. பிப்ரவரி, 1920 ; iv. உ.ப.+செ.மூ.ப. 30 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. கைலாசகிரி என வழங்கிவரும் திருத்துருவ மலையில் விளங்கும் முருகனைப்பற்றிய பிள்ளைத் தமிழ். திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலயத்து சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள், ஆரணி சாகீர் காமக்கூர் தமிழ்ப் பண்டிதர் சுந்தர முதலியார் முதலியோர் இந்நூற்குச் சாத்துக் கவிகள் தந்துள்ளனர். இது தெள்ளிய இனிய எளிய நடையினையுடையது. viii. 633/1920/I.

O31,1

**கைலாசநாத கவிராயர்**

i. வடகரைப் பெரிய சாமித்துரையவர்கள் பேரில் பிள்ளைத் தமிழ் (தொ. எ. 2465 பார்க்க) ; ii. பி.சி.சி. பாண்டியன் & பி.வி.சி. பாண்டியன் ; தமிழ்ச்சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. 1916; iv. செ.மூ.ப. 15; v. . . . ;vi. . . . ;vii. பெரியசாமித்துரையவர்களின் குழந்தைப் பருவத்தையும் விளக்குவது. காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபாறை, சிறு தேர் என்னும் பத்துப் பருவங்களுக்கும் ஐந்தைந்து பாடல்கள் வீதம் 50 பாடல் களைக் கொண்டது இந்தப் பிள்ளைத் தமிழ் நூல். viii. 49/1916/II.

O31, 1

**சாமி கவி காளருத்திரர்**

1776. i. திருமாலிருஞ்சோலை அழகர் பிள்ளைத் தமிழ் : முதற் பதிப்பு ; ii. நாராயணையங்கார், மதுரை ; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. ஜூன், 1919 ; iv. செ.மூ.ப. 72 ; v. 22×15 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. திருமாலிருஞ்சோலை மலையில் விளங்கும் அழகரைப் பற்றிய பிள்ளைத் தமிழ் இதில் அடங்கியுள்ளது. இறைவனைக் குழந்தையாகக் கற்பனை செய்து பத்துப் பருவங்கள் அமையப் பாடுவது பிள்ளைத் தமிழாகும். இந்நூலின் பாயிரச் செய்யுளில் 'வள்ளைத் தமிழ் கூர்வேம்பத்தூர் வருமாண்புலவோர் வகுத்தது' என வருதலால் இவர் வேம்பத்தூரைச் சார்ந்தவர் எனக் கொள்வர். viii. 921/1919/II

O31,1

சோணாசல பாரதி, காஞ்சிபுரம்

1777. i. திருவருணை உண்ணாமுலையம்மை பிள்ளைத் தமிழ் : முதற் பதிப்பு ; ii. கன்னியப்ப முதலியார், காஞ்சிபுரம் ; பெருந்தேவி விலாச அச்சுக்கூடம், காஞ்சிபுரம் ; iii. டிசம்பர், 1919 ; iv. செ. மூ. எ. 1+101+1 ; v. 21×14 செ. மீ. ; vi. இலவசம்; vii. திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள உண்ணாமுலை யம்மையைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டது இந்நூல். பிள்ளைத் தமிழ்ப் பிரபந்த இயல்புகளை மேற்கொண்டு பக்திரசம் துளும்பப் பாடப்பெற்ற நூல். பெண்பாற் பிள்ளைக் கவிக்கு ஏற்ப அம்மானை, நீராடல், ஊசல் என்னும் பருவங்கள் தரப்பட்டுள்ளன. viii. 978/1919/IV.

O31,1

மீரான்சாகிப் புலவர்

1778. i. பாத்திமா நாயகம் பிள்ளைத் தமிழ் : முதற் பதிப்பு ; ii. பாவாமுகியத்தீன் பாவலர், மேலச்செவல் ; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. ஜூன், 1920 , iv. செ. மூ. எ. 40+6+7+10 ; v. 22×15 செ.மீ.; ; vi. 0–6–0 ; vii. முகமதியப் பெரியாரான பாத்திமா நாயகத் தினைப் போற்றி எழுதப் பெற்ற பிள்ளைத் தமிழ் இந்நூல். பெண்பாற் பிள்ளைத்தமிழாகிய இதில் அம்மானை, நீராடல்; ஊசல் என்னும் பருவங்கள் சேர்த்துப் பாடப்பட்டுள்ளன. இந் நூலாசிரியரின் போதகாசிரியர் செவல் தலைமைப் புலவர், வெண்பாப்புலி பாவா முகியத்தீன் பாவலர், நாகூர் தர்க்கா மகாவித்வான் குலாம் காதிறு நாவலரின் மாணாக்கர் தர்கா பிரசங்கி க. காதிறு முகியித்தீன் சாகிபு முதலியோர் இந் நூலுக்குச் சாத்துக் கவிகள் தந்துள்ளனர். viii. 785/1920/II.

O31,1

1779. i. றசூல் நாயகப் பிள்ளைத்தமிழ் என்னும் புகழுதயப் புஞ்சம் முதற் பதிப்பு ; ii. பாவா முகயத்தீன் பாவலர், மேல செவல் ; ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடம், சென்னை: ii. டிசம்பர், 1918 ; iv. செ. மூ. ப. 66 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. எல்லா உலகங்களையும் படைத்து அரசாளுகின்ற ஏகவல்லவனாகிய அல்லா ஃசுபுகர்ன ஹூத்தா லாவின் கருணைத் தோழராகிய நபிகள் நாயகத்தின் மீது புகழ்ந்து பாடப் பெற்ற பாமாலையாகும். பிள்ளைத் தமிழ் மரபுப்படி பத்துப் பருவங்களாக அமைத்துப் பாடியுள்ளார். நபிநாயகத்தின் பேரில் பதங்களும் பல உள. இறை புகழ்ச்சி யாகப் பாடிய கீர்த்தனைப் பாடற் பகுதிக்கு "புகழுதயப் புஞ்சம்" என்பது பெயர். இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்பு களும் உள. கோட்டாறு மகா வித்துவான் சதாவதானி கா. பா. செய்குதம்பிப் பாவலரும் இன்னும் பலரும் பாடிய சாத்துக் கவிகளையும் இதன்கண் காணலாம். viii. 909/1918/IV.

O31,1

**வேதமாணிக்கம், ச., சென்னை**

1780. i. நாரேசர் பிள்ளைத் தமிழ் : முதற் பதிப்பு ; ii. ச. வேதமாணிக்கம், சென்னை ; அமெரிக்கன் டைமெண்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1919 ; iv. செ.மூ.ப. 101 ; v. 17×11 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. எசு கிருத்துவைப் போற்றிப் பாடப் பெற்ற பிள்ளைத் தமிழ் இந்நூலில் அடங்கியுள்ளது. கத்தோலிக்கு மதாசாரத்துக்கு ஒத்த வண்ணம் பாடப் பெற்றது. பிள்ளைத் தமிழுக்குரிய இலக்கண வரம்பை மட்டும் மேற்கொண்டு, கத்தோலிக்கு மத பிரார்த்தனை, செபம். சரித்திரம், மகிமை, அற்புதம் முதலியவைகளையே பெரும்பாலும் அமைத்துப் பாடியுள்ளார். நூலாசிரியர் தம் முகவுரையில் தாம் பாடமுற்பட்ட காரணத்தை விளக்கியுள்ளார். பாடல்கள் ஆற்றொழுக்காய், சந்தநயம் வாய்ந்து பொருட்பொலிவுடன் உள்ளன. viii. 215/1919/III.

O31,1

**வேலு தேசிகர், பா.திருக்கச்சூர்**

1781. i. சுந்தரமூர்த்தி சுவாமிகள் பிள்ளைத் தமிழ் : முதற் பதிப்பு ; ii. பா. வேலுதேசிகர், திருக்கச்சூர் ; ஞான சம்பந்தர் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 1+100 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளின்மீது பாடப்பெற்ற தோத்திர நூல். இது பிள்ளைத் தமிழ் என்னும் பிரபந்த முறைப்படி அமைந்துள்ளது. காப்பு முதல் சிறுதேர் ஈறாகப் பத்துப் பருவங்கள் கொண்டது. அஷ்டாவதானம் கலியாணசுந்தர யதீந்திரரும், இவருடையவும் சுவாமி வேதாசலம் அவர்களுடைய மாணவருமான மணி. திருநாவுக்கரசு முதலியாரும் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். viii. 516/1916/III.

O31,1

## புலம்பல்

**பத்திரகிரியார்**

i. பத்திரகிரியார் புலம்பல் (தொ. எ. 7 பார்க்க) ; ii. வா. சரவணமுத்துப் பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலியார் ; ஸன் ஆப் இந்தியா அச்சுக் கூடம், சென்னை ; iii. 1917 ; iv. செ.மூ.எ. 232; v....;vi....; vii. இதில் பத்திரகிரியார் சரித்திரம் உரைநடையில் முதலில் தரப்பட்டுள்ளது, பின்னர், அவர் பாடிய பத்திரகிரியார் புலம்பல் என்பது கொடுக்கப் பெற்றுள்ளது. இதில் 232 கண்ணிகள் உள. ஒவ்வொன்றும் 'எக்காலம்' என முடிந்து, ஞானப் பேற்றில் ஆசிரியர் கொண்ட பெருவேட்கையை உணர்த்துவதாயுள்ளது. viii. 445/1917/I.

O31, 1

## மஞ்சரி

### கடிகை முத்துப் புலவர்

i. சந்திரகலா மஞ்சரி (தொ.எ. 2465 பார்க்க) ;ii. பி.சி. பாண்டியன் & பி. வி. சி. பாண்டியன் ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. 1916 ; iv. செ. மூ. ப 22 ;v....;vi....;vii.குற்றால லிங்க சுவாமி கோவில் கொடிக்கம்பத்துக்கு அருகே நாட்டியிருக்கிற தூணிலுள்ள கற்சிலையிரண்டில் மூத்தவராகிய வடகரை ஜமீன்தார் பெரியசாமி செம்புலிச் சின்னணைஞ்சாத் துரையவர்கள் புத்திரி பூத்தாய் என்றவளின் மாப்பிள்ளை பெரியசாமித் தேவரவர்கள் பேரில் பாடியவை. viii. 49/1916/II.

O31,1

## மும்மணிக்கோவை

### இராமலிங்கம் பிள்ளை, ஏ. டி., தலைவன்கோட்டை

thiruchendur mumanikovai

1782. i திருசெந்தூர் மும்மணிக் கோனவ : இரண்டாம் பதிப்பு ; ii. கோமதிவிலாசம் பிரஸ், தென்காசி ; iii. 1917 ; iv. செ. மூ. எ. 4+1+30 ; v. 10×14 செ.மீ. ; vi. .. .... ; vii. [illegible]ருடம் உறையூர் சைவசித்தாந்த சபைய[illegible] முறை பதிப்பிக்கப்பெற்றது. இப்பதி[illegible] [illegible]யாணசுந்தர முதலியார் சாத்துக் கவிகள் பாடியருளினர். இந்த இரண்டாம் பதிப்பில் ஊற்றுமலைச் சமஸ்தான வித்துவான் கோட்டையூர் சு. கந்தசாமி புலவர் பாடிய சாற்றுக்கவி மட்டும் உள்ளது. திருசெந்தூர் முருகப் பெருமானைத் துதித்துப் பல்வேறு சிறப்புக்களையும் கூறுகிறது. நிலை மண்டில ஆசிரியப்பா, நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை இவை மூன்றும் மாறி மாறி வர முப்பது பாடல்கள் கொண்ட அந்தாதியாக உள்ளது இப்பிரபந்தம். viii. 981/1917/III.

O31,1

### சந்திரசேகர நாயகர், ந, கலியமலை

1783. i. திருவேங்கட மும்மணிக் கோவை : முதற் பதிப்பு ; ii. எ. பி. கோவிந்தசாமி படையாச்சி, சிதம்பரம் ; விநாயக சுந்தர விலாசம் பிரஸ், சிதம்பரம் ; iii. பிப்ரவரி, 1917 ; iv. செ. மூ. ப. 21 ; v. 21×14 செ.மீ. ; vi. ........ ; vii. இந்நூல் திருவேங்கடத்துத் திகழும் வெங்கடேசப் பெருமானைக் குறித்துப் புகழ்ந்து பாடப்பெற்றது. புவனகிரி அழகிய மணவாள ராமானுஜ ஏகாங்கி சுவாமிகள் முதலியோர் இயற்றிய சிறப்புப் பாயிரங்கள் இதில் உண்டு. இது அகவல், வெண்பா, கலித்துறை என வரும் மூன்று வகைப்பாடல்களாலும் ஆன அந்தாதித் தொடை பிரபந்தம். viii. 907/1917/I.

O31,1

**சொக்கலிங்க செட்டியார், ராம. சொ., காரைக்குடி**

1784. i. முத்தல நாயக மும்மணிக் கோவை: முதற் பதிப்பு ; ii. ராம. சொ. சொக்கலிங்க செட்டியார், காரைக்குடி ; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை ; iii. 1920 ; iv. செ. மூ. ப. 37 ; v. 17×13 செ.மீ. ; vi. இலவசம் ; vii. கடம்பந்துறை, இரத்தினகிரி, ஈங்கோய் மலை ஆகிய மூன்று தலங்களில் விளங்கும் சிவனைப் போற்றி எழுதப்பெற்ற தோத்திரப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. மும்மணிக் கோவை என்பது ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகியவை முறையே வர முப்பது பாடல்களைக் கொண்டமைந்த நூலெனப் பொருள்படும். தேவகோட்டை வெ. ஆ. தி. மா. சிதம்பரஞ் செட்டியார் மேற்படியூர் பழ. அ. வேங்கடாசலச் செட்டியார் ஆகியோர்இந்நூலுக்குச் சாத்துக்கவிகள் தந்துள்ளனர். திருவீங்கோய் நாதர் பதிகம் ஒன்றும் நூலிறுதியில் உளது. viii. 12/1920/III.
O31,1

## மும்மணிமாலை

**இராமஸாமி அய்யர்**

1785. i. கானாடுகாத்தநகர் ஸௌந்தரநாயகியம்மன் பேரில் மும்மணி மாலை: முதற் பதிப்பு ; ii. இராமஸாமி அய்யர், காரைக்குடி ; வைசியமித்திரன் பிரஸ், காரைக்குடி ; iii. ஜனவரி, 1918 ; iv. செ. மூ. எ. 1+25+1 ; v. 16×12 செ.மீ. ; vi. இலவசம் ; vii. கானாடு காத்தன் என்ற ஊரில் கோயில் கொண்டுள்ள ஸௌந்தரநாயகியம்மன் பேரில் பாடப் பெற்ற வெண்பா, கலித்துறை, ஆசிரியம் ஆகியவையாக மூன்று பாமாலை மண்டலித்து வர அந்தாதியாக அமைந்தது இந் நூல். நூலிறுதியில் இரண்டு கீர்த்தனைக் கவிதைகளும் உள. 'குஞ்சரமலை' 'திருநெல்லிக் காவற் பதிகம்' என்பன இந்நூலாசிரியர் பாடிய வேறு நூல்களாம். மழவாபுரிச் சிதம்பரமய்யரும், வேம்பத்தூர் சங்க வித்துவான் மகா தேவய்யர் முதலியோரும் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 679/1919/I.
O31,1

**குப்புச்சாமி ஐயர், சி., இராஜமன்னார்குடி**

1786. i. இராஜ மன்னார்குடி விநாயகர் மும்மணி மாலை ; ii. சம்பக லெக்ஷ்மி விலாச அச்சுக் கூடம், மன்னார்குடி ; iii. ஜனவரி, 1918 ; iv. செ. மூ. எ. 30 ; v. 21×14 செ. மீ. ; vi. ...... ; vii. ராஜ மன்னார்குடியில் கோயில் கொண்டுள்ள ஒற்றைத் தெரு விநாயகர் மீது பாடப் பெற்ற பக்திப் பாடல்களைக் கொண்டது இந்நூல். வெண்பா, கலித்துறை, அகவல் என்னும் மூன்று பாடல்கள் மண்டலித்து வர அந்தாதியாக அமைந்த

பிரபந்தமாகும். 'செண்பகாரண்யம் என்னும் இராஜமன்னார் குடி ஒற்றைத் தெரு விநாயகர் மும்மணிமாலை' என்பது இதன் முழுப் பெயர். viii. 736/1919/I.

O31,1

**சுப்ரமண்யச் செட்டியார், சி.**

1787. i. பாலானந்தவப்பர் சற்குரு மும்மணிமாலை ; ii. சு. அர்த்தனாரீச வர்மா ; சௌராஷ்டிரா அச்சியந்திரசாலை, சேலம் ; iii. ஜனவரி, 1917 ; iv. செ. மூ. ப. 14 ; v. 14×12 செ.மீ.; vi. .......... ; vii. சைவ குருவாகிய பாலானந்தவப்பர் என்பவர்மீது பாடப்பெற்றபக்திப் பாடல்கள் அடங்கியது. சேலம் சுகவனம் தமிழ் வித்வான் சு. அர்த்தனாரீச வர்மா முதலியோர் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 206/1917/I.

O31,1

## லாவணி

**முருகேசன், ஏ.எஸ்., சென்னை**

1788. i. சிங்கார லாவணி, சிந்து: முதற் பதிப்பு ; ii. ஏ.எஸ். முருகேசன், சென்னை ; சுப்பிரமணிய விலாஸ் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1919 ; 'iv. செ. மூ. எ. 23 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. பெங்களூரைச் சேர்ந்த பன்னேரி கட்டா திருவிழா வழி நடை, சிங்கார லாவணி, சிந்து' என்பது இந்நூலின் முழுப் பெயர். விநாயகர் துதியில் ஆசிரியர் "பாடினேன் சென்னை பாலன் முருகேசன் நாடினேன் உந்தனடி தான்" என்று குறிப்பிடுகின்றார். 'காமரசக் குயிலே' யென்ற லாவணி வர்ண மெட்டில் முதற் பாடல் உளது. பின்னர், ஆண், பெண் இருவரும் சொல் தெம்மாங்கு, காவடிச் சிந்து மெட்டுப் பாடல், நொண்டிச் சிந்து, கும்மிப் பாடல் ஆகியவைகளும் உள. ஆதலால் இது இசைப் பாடற் கலம்பகமாகும். viii. 861/1919/IV.

O31,1

## வண்ணம்

1789. i. வண்ணம் (தொ. எ. 2465 பார்க்க); ii. பி. சி. சி. பாண்டியன் & பி.வி.சி. பாண்டியன் ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. 1916; iv. செ. மூ. ப. 3 ; v....... ; vi....... ; vii. இதுகளியர் பாட்டாக உளது. இறுதியில் வரும் தொங்கல் விருத்தத்தாலும் இது புலப்படும். viii. 49/1916/II.

O31,1

## வர்ணிப்பு

### இராமசாமிக் கவிராயர்

1789A i. திருமாலிருஞ்சோலைமலை பெரிய அழகர் வர்ணிப்பு : முதற் பதிப்பு ; ii. இ. ராம. குருசாமிக் கோனார் ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 40; v. 21×14 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. திருமாலிருஞ்சோலை மலையில் திருமாலை அழகராக வழிபடுந் தன்மையினையும் அழகரின் பெருமையினையும் உரைப்பது. திருமாலின் தசாவதார சரிதங்களும் இதில் கூறப்பட்டுள்ளன. அழகர்மலைச் சிறப்பும், அத்தலம் பற்றிய புராண நிகழ்ச்சிகளும் விவரிக்கப்பட்டுள்ளன. அங்கங்கே பொருட்போக்கிற்கேற்ற தலைப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அம்மானைப் பாட்டு முறையில் இந்நூலின் பாடற்போக்கு உள்ளது. viii. 146/1916/II.

O31,1

### கருப்பணதாசர், பெருங்குடி

1790. i. கிருஷ்ணவதாரன் வர்ணிப்பு: முதற் பதிப்பு; ii. கலியாண சுந்தரம் பிள்ளை, மதுரை; சங்கநிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1919; iv. செ.மூ.ப. 24; v. 21×14 செ.மீ.; vi. 0-2-0; vii. கண்ணனுடைய திருவிளையாடல்கள் அனைத்தையும் நல்ல அழகிய பாடல்கள் மூலமாக விளக்கும் நூல். பாகவதம் தசம ஸ்கந்தத்தைப் பின்பற்றி எழுதப்பட்டது. viii. 924/1919/IV.

O31,1

### குருசாமிக் கோனார்

சதுரகிரி வர்ணிப்பு (தொ. எ. 1558 பார்க்க): முதற் பதிப்பு; த. குப்டசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டெம்பர், 1917; iv. செ. மூ. ப. 80; v. 14×11 செ. மீ.; vi. 0-6-0; vii. சுந்தர மகாலிங்கர் விளங்கும் சதுரகிரியைப் பற்றிய பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. அம்மானைப் பாட்டு முறையில் அமைந்தது. தெய்வ வணக்கம், பசுக்கிடைச் சிறப்பு, மகாலிங்கர் திருவவதாரச் சிறப்பு, அபிஷேகச் சிறப்பு, அலங்காரச் சிறப்பு, சன்னிதி விசேடம், ஸ்தலவிசேடம், மூர்த்தி விசேடம், தீர்த்த விசேடம், மகாமேருகிரிச் சிறப்பு, தெரிசனை செய்யும் சிறப்பு, பிரார்த்தனைச் சிறப்பு முதலிய பொருள்களை விவரித்து உரைப்பது. viii. 29/1917/IV.

O31,1

1791. i. **திருமாலிருஞ் சோலைமலை அழகர் வர்ணிப்பு :** முதற் பதிப்பு; ii. அ. பெ. சுப்பையா பிள்ளை, மதுரை; ஸ்ரீ ராமச் சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டெம்பர், 1917; iv. செ. மூ. ப. 16; v. 23×15 செ. மீ.; vi. 0–2–0; vii. இது திருமாலிருஞ்சோலைமலையில் வழிபடப்பெறும் அழகரைப்பற்றிய நூல். அழகரின் பெருஞ்சிறப்பையும், அத்தலத்தில் நடைபெறும் வேறுசில சிறப்பு நிகழ்ச்சிகளையும் விவரிக்கிறது. viii. 224/1917/IV.

O31,1

## வருக்கக் கோவை

### சிவகுருநாதக் கவிராயர்

i. செம்புலிப் பெரியசுவாமித் துரையவர்கள் பேரில் வருக்கக் கோவை (தொ. எ. 2465 பார்க்க); ii. பி. சி. சி. பாண்டியன் & பி.வி.சி. பாண்டியன்; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ.மூ.ப. 21; v......; vi......; vii. செம்புலிப் பெரியசுவாமித்துரை அவர்கள் பேரில் சிவகுருநாதக் கவிராயர் பாடிய காதல் பிரபந்தம். அகரம் முதலிய வருக்க எழுத்துக்களை முறையே கொண்டமைந்த பாடல்களை உடையது இந்த அகப்பொருள் நூல். அகப்பொருட் கோவை நூல்களைப் போன்ற அமைப்பில் 115 பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது. viii. 49/1916/II.

O31,1

### படிக்காசுப் புலவர்

1792. மோரூர்ப் பாம்பலங்காரர் வருக்கக் கோவை; ii. தி. அ. முத்துசாமிக் கோனார்; விவேக திவாகரன் அச்சுக்கூடம், திருச்செங்கோடு; iii. 1916; iv. செ. மூ. எ. 100; v. 21×14 செ. மீ.; vi. 0–2–0; vii. மோரூர்ப் பதியில் எழுந்தருளியிருக்கும் பாம்பலங்காரர் என்னும் சிவனைக் குறித்து வருக்க கோவை என்னும் முறையில் பாடப்பெற்ற நூறு பாடல்களைக் கொண்ட நூல். நூலாசிரியரின் வரலாறு முதலில் தரப்பட்,க்ருக்கிறது. வருக்கக்கோவையின் அமைப்பு முறை முதலியவற்1 முகவுரையில் காணலாம். viii. 674/1916/I.

O3௧1

i. **வடகரைச் சமஸ்தானம் முத்துசாமி துரையவர்கள் பேரில் வருக்கக் கோவை** (தொ.எ. 2465 பார்க்க); ii. பி சி.சி. பாண்டியன் & பி.வி.சி. பாண்டியன்; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 1+92; v.......; vi.......; vii. வடகரைச் சமஸ்தானம் முத்துசாமித் துரையவர்கள் பேரில் பாடப்பட்ட வருக்கக்கோவை என்னும் பிரபந்தம். அகப்பொருள். துறைப் பொருள் அமைதிகொண்டது. அகரம் ஆதி எழுத்து வரிசையில் பாடல்கள் தொடங்குகின்றன. viii. 49/1916/II

O31,1

## வருக்கமாலை

### ரமண மஹரிஷி

1793. அருணாசல அக்ஷர மணிமாலை (பஞ்சரத்னம் பதிகம் அஷ்டகம்): முதற் பதிப்பு, ii. எஸ். நாராயண ரெட்டி; மினர்வா அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. செ. மூ. எ. 108; v. 17×11 செ. மீ.; vi. 0–0–6; vii. அருணாசலீஸ் வரரைக் குறித்துப் பாடப்பெற்ற பக்திப் பாடல்கள். அ, ஆ முதலிய எழுத்துக்களைப்பாடல் தொடக்கமாகக் கொண்டு அமைந்தது. 108 கண்ணி முறையில் அமைந்த பாடல்களைக் கொண்டது. ரமணமகரிஷியின் உருவப் படமும் முதலில் தரப் பட்டிருக்கிறது. viii. 238/1917/I.

O31,1

### வேங்கடராம ஐயர், ஊ.சா.

1794. i. படிப்பின் பயன்: முதற் பதிப்பு; ii. சி. இராஜகோ பாலய்யர், கும்பகோணம்; கிருஷ்ணவிலாஸ பிரஸ், கும்ப கோணம்; iii. நவம்பர், 1919; iv. செ. மூ. எ. 96; v. 18×13 செ. மீ.; vi. 0–1–0; vii. படிப்பின் பயனை விளக்கும் 96 குறட்பாடல்களைக் கொண்டது இந்நூலாகும். மேலும் கலைமகள் வணக்கமாக ஒரு நேரிசை வெண்பாவினை யும் கடவுள் வணக்கமாக ஒரு குறள் வெண்பாவினையும் கொண்டுள்ளது. அகரம் முதலிய எழுத்து வருக்கங்களின் அடிப்படையில் இந்நூல் இயற்றப்பெற்றுள்ளது. எனவே, இது ஒரு குறட்பா வர்க்க மாலையாகும். viii. 709/1919/IV.

O31,1

## வாழ்த்து

### கடிகை முத்துப் புலவர்

i. சிவகிரி ஜமீன்தாரவர்கள் வரகுண ராமபாண்டியதுரை அவர்கள் மீது திக்குவிஜயம் (தொ. எ. 2465 பார்க்க); ii. பி. சி. சி. பாண்டியன் அண்டு பி. வி. சி. பாண்டியன்; தமிழ்ச்சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 30; v.....; vi....; vii. சிவகிரி ஜமீன்தாரர் வரகுணராமபாண்டித் துரையவர்கள் மீது பாடப்பட்ட திக்குவிஜயம் என்னும் பிரபந்தம் வரகுணேந்திரனின் செல்வ வாழ்வைச் சிறப்பித்து உரைப்பது. இவரது படைவளம், வெற்றிச் சிறப்பு முதலியன சிறப்பிக்கப் பட்டுள்ளன. viii. 49/1916/II.

O31,1

## விலாசம்

### திருமலைவேற் கவிராயர்

i. வடகரைப் பெரிய சுவாமித்துரையவர்கள் பேரில் இரத்தினகர விலாசம் (தொ. எ. 2465 பார்க்க); ii. பி. சி. சி. பாண்டியன் & பி.வி.சி. பாண்டியன்; மதுரைத்தமிழ்ச் சங்கம் பவர்பிரஸ்,

மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 101; v.....;vi.....; vii. வடகரைப் பெரியசுவாமித் துரையவர்கள் பேரில் திருமலைக் கவிராயர் இயற்றிய பிரபந்தம். 'வாழி தரும நீதி செங்கோல் வாழி யிரத்தினாகரமே' என்று முடிவுறுகிறது இப்பிரபந்தம். viii. 49/1916/II.

O31,1

## வெண்பா

**கோவிந்தசாமி ஐயர், மு., மதுரை**

thirugynanasambantha venba ...வெண்பா: முதற் பதிப்பு; ii. மு. கோவிந்த... மீனும்பிகை பிரஸ், மதுரை; iii. ஆகஸ்ட், 1916; iv. செ. மூ. எ. 14+2+246; v. 18×13 செ. மீ.; vi. 0-4-0; vii. சைவப் பெரியாரான திருஞானசம்பந்தரின் பெருமையினைப் போற்றிப் பாடப்பட்ட வெண்பாப் பாடல்களைக் கொண்டது இந்நூலாகும். திருஞானசம்பந்தரின் சிறப்புக்கள் பலவற்றையும் கூறிப்புகழ்வது. உ. வே. சாமிநாதையர், ரா. இராகவையங்கார் முதலியோர் இதற்குச் சாற்றுக்கவி அளித்துள்ளார்கள். viii. 933/1916/III.

O31,1

1796. i. **மாணிக்கவாசக** வெண்பா: முதற் பதிப்பு; ii. இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை; iii. ஏப்ரல், 1918; iv. செ. மூ. எ. 5+267; v. 18×13 செ. மீ.; vi.......; vii. இது சைவப்பெரியாரான மாணிக்கவாசகரைப் பற்றி பாடப்பெற்ற 267 வெண்பாக்களைக்கொண்ட ஒரு வரலாற்று நூல். முகவுரையில் ஆசிரியரின் புலமைத் திறனைப் பாராட்டி ஐவர் பாடிய பாக்கள் சிறப்புப் பாயிரமாகக் காணப்படுகின்றன. இந்நூலிலுள்ள வெண்பாக்கள் இனிமையும் எளிமையுமமைந்து மிளிர்கின்றன. viii. 308/1918/II.

O31,1

**சங்கரப்ப நாயுடு, கொ.ந., தூத்துக்குடி**

1797. i. தன்மய வெண்பா மாலை: முதற் பதிப்பு; ii. கொ. ந, சங்கரப்ப நாயுடு, தூத்துக்குடி அண்டு நல்லசிவம் பிள்ளை. வேலாயுதம் அச்சியந்திரசாலை, தூத்துக்குடி.; iii. மார்ச்; 1919; iv. செ. மூ. எ. 2+1+33; v. 22×13 செ. மீ; vi. இலவசம்; vii. இது திருமந்திர நகரமென்னும் தூத்துக்குடி கைவல்யசுவாமி மடத்துத் தலைவராகிய சிதம்பர சுவாமிகளைப் போற்றி எழுதப்பெற்ற வெண்பாமாலை. காலயுக்த ஆண்டு பங்குனிமீ 14உ யாகிய ஷ்டி சுவாமிகள் மண்டலாபிஷேக நாளில் வெளியிடப் பெற்றது. viii. 211/1919/II.

O31,1

**திருச்சிற்றம்பல முனிவர், வேதாரண்யம்**

1798. i. மறைசை வெண்பா: முதற் பதிப்பு; ii. சி. சண்முகவேற் பிள்ளை, வேதாரண்யம்; பிர்ம்ம வித்தியா அச்சுக்கூடம், பேரளம், திருமீயச்சூர்; iii. பிப்ரவரி, 1920; iv. செ. மூ. எ. 1+100; v. 17×12 செ. மீ.; vi. 0–2–0; vii. வேதாரண்யம் எனப்பெறும் மறைசையைப் பற்றிய சிறப்புக்களைக் கூறும் சிறு நூல். இது வெண்பாக்களால் ஆகியது. பாடலின் ஒருபாதி மறைசைப்பதியின் புகழும் மற்றொரு பகுதி மறைசைப் பெருமான் புகழும் உரைக்கின்றன. இந் நூலாசிரியர் இயற்றிய வேறு நூல்கள் மறைசையமகவந்தாதி, காவேரிப் புராணம், தண்டலைச்சேரிப் புராணம், கீழ்வேளூர்ப் புராணம் முதலியனவாம். viii. 938/1920/I.

031,1

**நாராயண பிள்ளை, அ., புதுக்கோட்டை**

1799. i. அரிச்சந்திர திரிபு வெண்பா: முதற் பதிப்பு; ii. சிவசாமி பிள்ளை; ஸ்ரீ மட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடம், திருச்சி; iii. மே, 1919; iv. செ. மூ. எ. 103; v. 21×14 செ. மீ.; vi. 1–0–0; vii. அரிச்சந்திரன் புராணக்கதை இதில் விளக்கப் பட்டுள்ளது. திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, அவர் தம் மாணவர் வித்வான் தியாகராஜ செட்டியார் முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் தந்துள்ளனர். இது 703 வெண்பாக்களாலானது. இந்நூலாசிரியர் இயற்றிய பிற நூல்களாவன: பழனி வெண்பா, திருக்கோகர்ணம் பெரிய நாயகியம்மன் நவரத்தினம், திருவரங்குளம் பெரியநாயகியம்மன் சந்தப்பதிகம், நளச்சக்கரவர்த்தி கும்மி, குன்றக்குடி மாலை, நகரம் இரட்டைமணி மாலை, தனிப்பாடல்களும் சித்திரக் கவிகளும் அடங்கிய கோவை என்பனவாம். viii. 196/1919/III.

031,1

## வேறுவகைப் பிரபந்தம்

**அய்யாசாமி பிள்ளை, எஸ்.**

1800. i. காவடிப்பாட்டு: திருத்திய மூன்றும் பதிப்பு; ii. எஸ். அய்யாசாமி பிள்ளை, மதுரை; ஸ்ரீ ராமாநுஜ விலாசம் அச்சுக்கூடம், மதுரை; iii. மார்ச், 1920; iv. செ. மூ. எ. 8; v. 23×14 செ. மீ.; vi. 0–1–0; vii. தினைப்புனம் காத்த வள்ளியம்மையைச் சிறையெடுத்த சுப்ரமணியரைப் பற்றிய காவடிப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இனிய எளிய நடையுடன் கூடியது. viii. 92/1920/II.

031,1

இராஜு நாயுடு

1801. i. காப்பிகுடித்தங்கம்: முதற் பதிப்பு; ii. டி. சங்கரன் பிள்ளை, அம்பாசமுத்திரம்; விவேகாநந்தா அச்சுக்கூடம், அம்பாசமுத்திரம்; iii. ஜூலை, 1920; iv. செ. மூ. ப. 8; v. 23×14 செ. மீ.; vi. 0–1–0; vii. காப்பி குடிப்பதனுல் ஏற்படும் தீமைகளை விளக்கி எழுதப்பட்ட வேடிக்கைப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. viii. 423/1920/III.

O31,1

கணபதி பிள்ளை, தி.சு.,சேலம்

1802. i. இராஜவிஸ்வாச பாக்கள்: இரண்டாம் பதிப்பு; ii. கணபதி பிள்ளை, சேலம்; ஷண்முக விலாஸ் பிரஸ், சேலம்; iii. அக்டோபர், 1918; iv செ. மூ. ப. 8; v. 11×14 செ. மீ.; vi......; vii. ஆங்கிலேய அரசாங்கத்தைப் பற்றி எழுதப்பட்ட இராஜ விசுவாசப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். சென்னை பிராமணரல்லாதார் கான்பிடரேஷனைச் சேர்ந்த ராஜா வெங்கிட்டகிரி, டாக்டர். டி. எம். நாயர் இவர்கள் முன்னிலையில் 1917 ஆம் ஆண்டு வாசிக்கப்பட்டது. viii. 677/1918/IV.

O31,1

சண்முக முதலியார், சி.வே.

1803. i. கல்பட்டு கன்னையநாயுடவர்கள் கிருகப்பிரவேச மகோற்சவச் சிறப்புப் பாடல்: முதற் பதிப்பு; ii. எம். ஆதி அண்டு கோ., சென்னை; சந்திரா முத்திராக்ஷரசாலை, சென்னை; iii. ஜூன், 1917; iv. செ. மூ. உ.எ. 12; v. 33×21 செ. மீ.; vi. இலவசம்; vii. கல்பட்டு கன்னைய நாயுடவர்கள் புதுவீடு கட்டி மனைபுகுவிழா நடத்திய காலத்து வாழ்த்திப் பாடப்பெற்ற சிறப்புப் பாடல்களை இதில் காணலாம். 1917ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 5 ஆம் நாள் புதுமனை புகுவிழா நிகழ்ந்த அன்று மாலையில், அங்குக் குழுமியிருந்த சபையோர் முன்னிலையில் பாடி விளக்கப்பட்டவை. பாடல்களுக்குப் பதவுரை, பொழிப்புரை, குறிப்புரை என்னும் உரை விளக்கங்களும் உள. viii. 326/1917/III.

O31,1

சர்மா, நா.ச., கல்லிடைக்குறிச்சி

1804. i. திலகீய கீதம்: முதற் பதிப்பு; ii. டி. சி. சங்கரய்யர் கல்லிடைக்குறிச்சி; விவேகானந்த அச்சுக்கூடம், அம்பாசமுத்திரம்; iii. அக்டோபர், 1920; v. செ. மூ. ப. 12; v. 14×11 செ. மீ.; vi. 0–1–0; vii. சிறந்த தேசபக்தரான பாலகங்காதர திலகரின் பெருமையினைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பாகும் இந்நூல். viii. 362/1920/IV.

O31,1

**சர்வகோபால பிள்ளை, டி., திண்டிவனம்**

1805. i. நவீன சம்பாஷணை பாட்டுக் கதைகள்: முதற் பதிப்பு; ii. டி. சர்வகோபால பிள்ளை, திண்டிவனம்; சதரியா பிரஸ், திண்டிவனம்; iii. டிசம்பர், 1917; iv. உ. ப.+செ. மூ. ப. 12; v. 21×14 செ. மீ.; vi. 0–1–6; vii. மூன்றும் நான்காம் வகுப்புச் சிறுவர்களுக்கு ஏற்ற இரண்டு பாட்டுக் கதைகள் உரையாடல் முறையில் இதில் அடங்கியுள்ளன. உரைநடையும் பாட்டுமாக அமைத்து எழுதப்பட்டுள்ளன. viii. 888/1917/IV.

O31,1

**சுப்பிரமணிய பாரதியார், சி.**

1806. i. நாட்டுப்பாட்டு: முதற் பதிப்பு; ii. பரலி. சு. நெல்லையப்ப பிள்ளை, சென்னை; இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. செ. மூ. ப. 16; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0; vii. பாரதியாரின் நாட்டுப் பாடல்களின் தொகுப்பே இந்நூல். இந்நூலில் "ஜாதி மதங்களைப்பாரோம்" "செந்தமிழ் நாடெனும் போதினிலே", "பாரத தேசமென்று பெயர் சொல்லுவார்", "எந்தையுந்தாயும் மகிழ்ந்து குலாவி", "மன்னு மிமயமலை யெங்கள்மலையே" எனத்தொடங்கும் பல பாடல்கள் அடங்கியுள்ளன. தெய்வத்திரு நாடாம் நம் தாய் நாட்டினைக் குறித்த பாடல்களை எவ்வளவு காலம் பாடினும் ஆவல் தீராது என்கிறார் பதிப்பாசிரியர். viii. 590/1917/IV.

O31,1

**நாராயணராயர், ஆர்., ஆழ்வார்திருநகரி**

1807. i. கோலாட்டப்பாட்டு; ii. ஆர். நாராயணராயர், ஆழ்வார் திருநகரி; ஸ்ரீகான வித்யா அச்சியந்திர சாலை, பெருங்குளம்; iii. ஜனவரி, 1917; iv. செ. மூ. ப. 16; v. 14×11 செ. மீ.; vi......; vii. கிருஷ்ணனின் திருவிளையாடல்களைக் குறித்துப் பாடப்பெற்ற கும்மிப்பாடல்கள் கொண்டது. பெண்கள் கோலாட்டத்தில் பாடுதற்கு ஏற்ற சந்த இசையமைப்புக் கொண்டது; viii. 401/1917/I.

O31,1

**முத்துஸாமி, ஆர்., மாயவரம்**

1808. i. பாரததேவி பஜனையும் அஷ்டோத்ரமும்: முதற் பதிப்பு; ii. கே. வெங்ட்ராம அய்யர், மாயவரம்; சரஸ்வதி விலாஸ் பிரஸ், மாயவரம்; iii. செப்டம்பர், 1918; iv. செ. மூ. ப. 16; v. 13×11 செ. மீ.; vi. 0–2–0; vii. பாரத மாதாவாகிய இந்தியத் தாயினைப் புகழ்ந்து பாடப்பெற்ற பஜனைப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். வந்தேமாதர சங்கீர்த்தனம், தேசபஜனை, ஜெகதம்பிகையின் பக்திமேலீடு, இந்திய தேவிபஜனை, ஸ்வதேச கும்மி, பாரததேவி பாதம் பணிதல்,

பக்தர்களை பூஜித்தல், ஸ்வதந்திர வாழ்வு, முறையிடுதல் முதலிய தலைப்புக்களால் பாடல்கள் உள. ஸ்ரீபாரததேவி அஷ்டோத்ரமும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 134/1918/IV.

O31,1

**வெங்கட்டராமய்யர், சிவகெங்கை**

1809. i. பாரதி கீதங்கள்: முதற் பதிப்பு; ii. சிவகங்கைச் சுய ஆட்சிச் சங்கம்; விக்டோரியா பிரஸ், மதுரை; iii. 1917, iv. செ. மூ. எ. 20+71; v. 21×14 செ. மீ.; vi. 0–1–0; vii. ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர், கோகலே; காந்தியடிகள் போன்ற பெரியார்களைப் போற்றி கீர்த்தனை வடிவில் பாடியுள்ளார் ஆசிரியர். மேலும் கும்மிப்பாடல்கள் மூலமாகவும் தேசப்பெரியார்களை பாராட்டியுள்ளார். முகவை மாவட்டத்தில் சரித்திரப்பிரசித்தி பெற்ற முக்கிய நகரங்களுள் ஒன்றான சிவகெங்கை நகர சுய ஆட்சிச்சங்கத்தால் இப்புத்தகம் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலின்கண் காணப்படும் பாடல்கள் அனைத்தும் விடுதலை இயக்கப்பாடல்களே. பாரதகீதங்கள் என்பது பாரத நாட்டைப் பற்றிய கீதங்களாகும். "ஆரிய நாட்டின் கீதம்" என்றும் ஆசிரியர் முதலில் உள்ள விநாயக வணக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். கும்மிப்பாடல் ஈற்றில் ஐந்தாம் ஜார்ஜ் அரசர் முதலாயினோர்க்கு வாழ்த்தும் உண்டு. viii. 758/1918/III.

O31,1

## 894.811108 தமிழ்க் கவிதைத் திரட்டு

**ஆறுமுக முதலியார், வி.கே., பெங்களூர் (தொ.து.)**

1810. i. சாந்தோபதேச மஞ்சரி: மூன்றும் பதிப்பு; வி. கே. ஆறுமுக முதலியார், பென்ரோஸ் கம்பெனி, பெங்களூர்; iii. ஜூலை, 1918; iv. செ.மூ.ப. 184; v. 23×14 செ.மீ.; vi. 1–4–0; vii. சைவ, வைணவ சமயங்களின் சார்பாக எழுந்த பாடல்களின் தொகுப்பே, இந்நூல். இதன்கண் தேவார, திருவாசகப் பாடல்களும், திருப்புகழ், திருவாய் மொழி, திருவருட்பா ஆகியனவும், பட்டினத்தார் பாடல், ஔவை பாடல், தாயுமானவர் பாடல், திருக்குறள் போன்ற நீதிப்பாடல்களும் அடங்கியுள்ளன. ஒவ்வொரு பக்கத் தலைப்பிலும், தமிழில் பொன்மொழியும் பக்க இறுதியில் ஆங்கிலத்தில் பொன்மொழியும் தரப்பட்டுள்ளன. சித்தாந்த சரபம், அஷ்டாவதானம், சிவ ஸ்ரீ கல்யாண சுந்தரயதிந்திர சுவாமிகள் முதலியோர் இதற்குச் சாற்றுக் கவிகள் தந்துள்ளனர். சிதம்பரம், மதுரை, திருவண்ணாமலை, ஸ்ரீரங்கம் போன்ற தலங்களின் படங்களும், நடராஜர், முருகன் போன்ற தெய்வங்களின் திருஉருவப் படங்களும் அணி செய்கின்றன. ஆத்திச்சூடிப் பாடல்கள், ஆங்கில

மொழி பெயர்ப்புடன் தரப்பட்டுள்ளன. இந்நூலுக்குப் பத்திரிகை ஆசிரியர்களும், பிறரும் வரைந்து வெளியிட்ட மதிப்புரைகள் நூலிறுதியில், தொகுத்துத் தரப்பட்டுள்ளன. viii. 398/1918/III.

O31,1x

**இரத்தினம், ஆரூர்**

1811. i தோத்திர மஞ்சரி ; ii. பி. ஆர். இராம ஐயர் கம்பெனி, சென்னை ; iii. 1919 ; iv. செ.மூ.ப. 102 ; v. 18×13 செ.மீ. ; vi ...... ; vii. பல தெய்வங்களைப் பற்றிப் பாடப்பெற்ற இசைப்பாடல்களாலாயது இந்நூல். சிவபெருமான், உமாதேவி, இலக்குமி முதலியோர் அடங்கிய படமொன்று இதன்கண் உண்டு. viii. 149/1920/I.

O31,1

**இராமசாமி ஆசாரி, கந்தே கவுண்டன்சாவடி**

1812. i. தோத்திரப் பிரபந்தங்கள் ; ii. த. பூ. முருகேச நாயகர், சென்னை ; அமெரிக்கன் டைமண்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1917 ; iv. செ.மூ.ப. 16 ; v. 20×13 செ. மீ. ; vi. இலவசம் ; vii கந்தமாநகர் விநாயகர், சிவசுப்ரமண்யர் முதலியோர் மீது பாடப்பெற்ற தோத்திரப் பிரபந்தங்கள். அவையாவன: ஐங்கரன்மாலை (30), கணேச பஞ்சகம் (5), கந்தமாநகர் ஆலடி விநாயகர் மீது தேவாரப் பதிகம் (10), கந்தமாநகர் பரமேஸ்வரப் பதிகம் (11), கந்தமாநகர் தண்டபாணிப் பதிகம் (11). ஆகியன சென்னை புரசை பு. எ. வரதாராஜு நாய்க்கர் முதலியோர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 394/1917/I.

O31,1

**இராமலிங்கசுவாமிகள், சிதம்பரம்**

1813. i. இராமலிங்க சுவாமிகள் திருவருட்பாவின் நிரதிசயாநந்தத் திரட்டு: முதற் பதிப்பு ; ii. மூர்த்தி சுவாமிகள் ; சிவரகசியம் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ.மூ.ப. 96 ; v. 17×14 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. இராமலிங்கசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவருட்பாவின் திரட்டு. பரம்பொருளை உணர்தலைப் பற்றி இந்நூலில் விவரிக்கப்பட்டிருக்கிறது. இதனைத் தொகுத்து அச்சிட்டவர் வியாசர்பாடி ஆனந்தாஸ்ரமம் ஸ்ரீமூர்த்தி சுவாமிகள் ஆவார். viii. 174/1916/II.

O31,1

1814. i. திருவருட்பாத் திரட்டு ; ii. லாங்மன் ஸ்கிரீன் அண்டு கம்பெனி, சென்னை ; கபாலி பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. செ.மூ.ப. 32 ; v. 19×13 ; vi. 2-0-0 ; vii. இராமலிங்க சுவாமிகள், பத்தொன்பதாம் நூற்றுண்டில் சிறந்து விளங்கிய அருட்கவி. எல்லா உயிர்களிடத்தும் அன்புடையராய்,

சமரச சுத்தசன்மார்க்க நெறியைப் போதித்து, மக்களுக்கு நல்லறிவூட்டியவர். சுவாமிகளின் சரித்திரச் சுருக்கமும், உருவப்படமும் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன. 'பார்த்தாலும் படித்தாலும், படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும்,' 'சிந்தனைக்குத் தித்திக்கும்' இனிய செந்தமிழ்ப் பாடல்களின் தொகுப்பு ; அம்பலவாணனின் புகழ்கூறும் அரும்பாடல்கள் கொண்டவை. viii. 337/1916/IV.

O31,1x

1815. i. பாமாலை : முதற் பதிப்பு ; ii. சுதேசமித்திரன் ஆபீஸ். சென்னை ; சுதேசமித்திரன் பிராஞ்ச் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. செ.மூ.ப. 48 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. சிதம்பரம் இராமலிங்கசுவாமிகளும், மணிவாசகப் பெருமானும் திருவாய் மலர்ந்த சில கவிகளை மக்கள் படித்துய்யும் பொருட்டுத் தொகுத்து இந்நூலாக வெளியிடப்பட்டுள்ளது. மாணிக்கவாசகப் பெருமான் என்று இதில் குறிக்கப்பட்டுள்ளவர், திருவாசகம் பாடிய மாணிக்கவாசகரல்லர். பிற்காலத்தவராக இருக்கலாம். viii. 807/1920/III.

O31,1x

**இராமானந்த சுவாமிகள், திருப்பூவணம்**

1816. i. இராமானந்த சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; இ. ராம. குருசாமிக் கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜூன், 1917 ; iv; செ.மூ. ப. 88 ; v. 22×13 செ. மீ. ; vi........ ; vii. இத்திரட்டில் மனோன்மணிமாலை, தேஜோமயமாலை, ஆனந்தம், ஆதியே நல்லவள், திருமுகத்தான், வாழ்வெனவும், சந்திரரும் சூரியரும், பூரணிக்கண்ணி, குருபரன் கண்ணி, கீர்த்தனம் முதலிய தலைப்புக்களின்கீழ்ப் பாடல்கள் உள்ளன. இச்சுவாமிகள், திருப்பூவணம், நெல்முடிக்கரையைச் சேர்ந்தவராவார். பூரணிக்கண்ணி அம்பிகையைக் குறித்தும், குருபரன்கண்ணி சற்குருவைக் குறித்தும் அமைந்துள்ளன. இறுதியில், சில கீர்த்தனங்களும் பதிகங்களும் உள்ளன. viii. 44/1917/III.

O31,1x

**குணவேல் முதலியார், பி.**

1817. i. அருள்விளக்கமாலை : ii. குணவேல் முதலியார் ; விக்டோரியா அச்சுக்கூடம், வேலூர் ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 24 ; v. 21×14 செ.மீ. ; vi........ ; vii. முத்தி நிலை அடையும் மார்க்கத்தைச் செய்யுள் வடிவாக விளக்கும் நூல். தேவாரம் முதலிய திருமுறைப் பாடல்களின் கருத்து இசையமைதியில் இயன்ற தோத்திரங்கள் கொண்டது. தேவாரத்திற் போன்று இவர், தம் பாடல்களுக்குப் பண்

குறிப்பிட்டுள்ளார். திருச்சின்னம், ஞானக்கும்மி, ஜோதி தரிசனக் கண்ணிகள் என்னும் எளிய இசைப்பாடல்கள் இதில் உள. இவர் பாடிய வேறு செய்யுள் நூல்கள், 'குருத் தியான மஞ்சரி', 'மானச தியான மஞ்சரி,' என்பன வாம். நூலாசிரியர் வரலாறும், உருவப்படமும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. viii. 531/1916/I.

O31,1x

**குமரகுருபர சுவாமிகள், பாம்பன்**

1818. i. குமரகுருதாச சுவாமிகள் சிறுநூற்றிரட்டு: இரண்டாம் பதிப்பு ; ii. டி.எம். அச்சுக்கூடம், பல்லாவரம் ; iii. 1917 ; iv. செ.மூ.ப. 100 ; v. 15×12 செ. மீ. ; vi. 0–3–0 ; vii. சுவாமிகள் அருளிச் செய்த நூல்களுள் பொருளிற் பெரியனவாய் உருவிற் சிறியனவாயுள்ள பத்து நூல்கள் இத்தொகுப்பில் உள. அவையாவன: 1. சண்முக கவசம்; 2. பஞ்சாமிர்த வண்ணம் ; 3. திருத்தொடையல் ; 4. கந்தரொலியந்தாதி ; 5. ............................ ; 6. ஞான வாக்கியம் ; 7. கந்தக்கோட்ட மும்மணிக்கோவை ; 8. வடதிரு முல்லைவாயிற் குபேரர் வண்ணம் ; 9. நவ வீரர் நவரத்தினக்கலி விருத்தம் ; 10. அட்டாட்ட விக்கிரக லீலை விருத்தம். இவற்றுள், ஞானவாக்கியம் அகர வரிசையில் எழுத்துருவக் கவிகளைக் கொண்டு அமைந்த 110 வாக்கியங்கள் கொண்டதாகும். viii. 889/1917/III.

O31,1x

**கோடீஸ்வர ஐயர், என்.**

1819. i. தோத்திரத்திரட்டு ; ii. கல்யாணராம ஐயர் அண்டு கோ., சென்னை ; கல்யாணசுந்தரம் முத்திராசாலை, தஞ்சாவூர் ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 84 ; v. 17×13 செ.மீ. ; vi. ......; vii. சைவ சமயக் கடவுளர் பலரைப்பற்றிய தோத்திரப் பாமாலை. மதுரைச் சித்தி விநாயகர் பதிகம், மதுரைச் சண்முக மாலை, மதுரை மீனாக்ஷி பதிகம், மதுரை மீனாக்ஷி சுந்தரேசுவரர் பதிகம், மயிலை சித்தி விநாயகர் பதிகம், மயிலைச் சண்முகப் பஞ்சரத்தின மாலை, என்பவை இதன் கண் உள. viii. 970/1916/I.

O31,1x

**சந்திரசேகர கவிராஜ பண்டிதர், தில்லையம்பூர் & கச்சபாலைய ஐயர், காஞ்சிபுரம்**

1820. i. தனிப்பாடற்றிரட்டு ; ii. ம. திருவேங்கட முதலியார், சென்னை ; வாணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; முரஹரி பிரஸ், சென்னை ; iii. 1919 ; iv. செ.மூ.உ.ப. 206 ; v. 21×14 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. வெவ்வேறு காலங் களில் இருந்த புலவர் பெருமக்கள் பாடிய பாடல்

களின் தொகுப்பே இந்நூலாகும். கோ. சபாபதி முதலியார், திருத்தணி விசாகப்பெருமாள் ஐயர் முதலியோர் இந்நூலுக்கு சாத்துக் கவிகள் தந்துள்ளனர். இராமநாதபுரம் சமஸ்தானம் பொன்னுச்சாமித் தேவரின் ஆதரவினால் இது வெளியிடப் பெற்றது. viii. 397/1920/I.

O31,1x

**சிதம்பர சுவாமிகள்**

1821. i. திருப்போரூர் சந்நிதி முறை: முதற் பதிப்பு; ii. பி. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ், சென்னை; அமெரிக்கன் டயமண்ட் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1917; iv. செ. மூ.ப. 220; v. 14×11 செ.மீ.; vi. 0–12–0; vii. இந்நூலில், திருப்போரூர் ஆதீனம் சிதம்பர சுவாமிகளின் சரித்திரச் சுருக்கமும், பிள்ளைத்தமிழ், மாலை, தாலாட்டு, பெரிய கட்டியம், சின்ன கட்டியம், குயிற்பத்து, கிளிப்பத்து, வண்டு விடுதூது, அடைக்கலப்பத்து முதலிய பிரபந்தங்களும் அடங்கியுள்ளன. viii. 171/1917/III.

O31, 1x

**சிவசுப்ரமணிய ஐயர், வி.**

1822. i. வெங்கடரமணம்; ii. பிரேசர் பிரஸ், கூனூர்; iii. ஜூன், 1917; iv. செ.மூ.ப. 51; v. 21×14 செ.மீ. vi. 0–6–0; vii. இது, உலகில் உயர்ந்த சத்தியமாக விளங்கும் கடவுளைப்பற்றிப் பாடப்பெற்ற எட்டுப் பாடல்களின் தொகுப்பு. விநாயகர் பாதாதி கேசம், முகவை விநாயகர் திருவிரட்டை மணிமாலை, பரமசிவ மும்மணிக்கோவை, கண்மணி மாலை, தூய்பொருளாட்சி, திருநான்மணிமாலை. ஏகநாயக வாதப்பதிகம், குறையொழித்தல், ஆகிய எட்டுத் தலைப்புக்களைத் தன்னகத்துக் கொண்டொளிர்கிறது. ஆசிரியரின் தந்தையின் பெயர், இந்நூலுக்கிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலையும் ஆசிரியர் பாடிய இடமும், ஆண்டுக் குறிப்பும், அவ்வப் பாடல்களின் தொடக்கத்தில் தரப்பட்டுள்ளன. viii. 672/1918/I.

O31,1x

**சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்**

1823. i. பிரபந்தத் திரட்டு (கருணைப் பிரகாச சுவாமிகள் இட்டலிங்கவகவல்): முதற் பதிப்பு; ii. சுவாமிநாத பண்டிதர்; சைவ வித்யாநுபாலன யந்திரசாலை, சென்னை; iii. 1916; iv. செ.மூ.ப. 19+239; v. 22×14 செ.மீ.; vi. 1–4–0; vii. இப்பிரபந்தத் திரட்டில் சோணசைல மாலை, நால்வர் நான்மணிமாலை, திருச்செந்திலந்தாதி, பழமலையந்தாதி, பிட்சாடன நவமணிமாலை, பெரியநாயகியம்மை விருத்தம், பெரியநாயகியம்மை கலித்துறை, நன்னெறி, திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம் திருவெங்கையுலா, இட்டலிங்கவபிஷேக மாலை,

இட்டலிங்கக் குறுங்கழி நெடில், இட்டலிங்க நெடுங்கழி நெடில், இட்டலிங்க நிரஞ்சனமாலை, இட்டலிங்கக் கைத்தல மாலை, சிவஞான பாலைய சுவாமிகள் தாலாட்டு, சிவஞான பாலைய சுவாமிகள் நெஞ்சு விடுதூது, சிவஞான பாலைய சுவாமிகள் திருப்பள்ளியெழுச்சி, சிவஞான பாலைய சுவாமிகள் பிள்ளைத்தமிழ், சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகம் முதலியன அடங்கியுள்ளன. அரும்பதக் குறிப்புரை இறுதியில் உண்டு. சிவப்பிரகாச சுவாமிகளின் வாழ்க்கை வரலாறும் நூல் முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 1208/1917/I.

O31,1x

**தத்வராய ஸ்வாமிகள்**

1824. i. பாடுதுறை: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. கொ. லோகநாத முதலியார், சென்னை; மனோன்மணி விலாச அச்சுக் கூடம், சென்னை; iii. 1917; iv. செ.மூ.ப. 331; v. 14×13 செ.மீ.; vi. 0–12–0; vii. சுத்தாத்வைத வேதாந்தாச் சாரியாரான தத்துவராய சுவாமிகள் ஸ்வரூபானந்த சுவாமிகள் மீது பாடிய பல பாமாலைகள் இதில் இடம் பெற்றுள்ளன. ஆசிரியரின் சரித்திரச் சுருக்கமும், குரு பரம்பரைக் குறிப்பும், சிறப்புப் பாயிரப் பகுதியும் நூல் முதலில் அமைந்துள்ளன. இதில் கழல், பிந்து, நையாண்டி, கானம் போன்ற சில பிரபந்த வகைகளைக் காணலாம். viii. 371/1917/I.

O31,1x

**தாயுமானவர்**

1825. i. தாயுமானசுவாமிகள் திருப்பாடற்றிரட்டு; ii. எஸ். ஆர். மாணிக்க முதலியார்; பிரசிடெண்ட் பிரஸ், சென்னை; ஸ்ரீகாந்தா பிரஸ், சென்னை; iii, 1916; iv. செ.மூ.உ.ப. 601 முதல் 730 வரை; v. 22×14 செ.மீ.; vi. 4–0–0; vii. தாயுமான சுவாமிகள் பாடல்களுக்கு பூவை கல்யாண சுந்தர முதலியார் கண்ட 'மெய்கண்ட விருத்தியுரை'யுடன் கூடிய நூல். பராபரக்கண்ணி 71 முதல் நூல் முடிய உள்ளது. ஆசிரியரது வாழ்க்கைச் சரித்திரமும் தொகுக்கப் பட்டிருக்கிறது. சுவாமிகளைக் குறித்து, அவர் மாணவர் அருளையர் பாடிய அருள் வாக்கிய அகவலும் இறுதியில் சேர்க்கப்பெற்றிருக்கிறது. viii. 27/1916/IV. O31,1x

**பட்டினத்துப் பிள்ளையார்**

i. திருப்பாடற்றிரட்டு (தொ.எ. 7 பார்க்க); ii. வா. சரவண முத்துப் பிள்ளை; கெ. பெ. சிங்காரவேலு முதலியார்; சன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. 1914; iv. செ.மூ.ப. 93—184=91; v.......; vi.......; vii. இந்

நூலின் முற்பகுதியில் பட்டினத்துப் பிள்ளையாருடைய சரித்திரச் சுருக்கம் தரப்பெற்றுள்ளது. கோயிற்றிருவகவல் என மூன்றும், கச்சித்திருவகவல், திருவேகம்பமாலை, திருத் தில்லை முதலிய தலங்கள் பற்றியும் பொது வெண்பா உடற்கூற்றுவண்ணம், பட்டினத்தார் புலம்பல், சட்டமுனி ஞானம் முதலியனவும் இதில் உள்ளன. viii. 445/1917/I.

O31,1 x

1826. i. திருப்பாடற்றிரட்டும், உடற்கூற்று வண்ணமும்; ii. ஜெயராம் முதலியார், கோடம்பாக்கம், சென்னை; சாஸ்திர சஞ்சீவினி அச்சியந்திரசாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1917; iv. செ.மூ.ப. 48; v. 18×11 செ.மீ.; vi. 0–2–0; vii. இந்நூலில் பட்டினத்தடிகள் உடலின் நிலையாமையைக் குறித்தும், ஈசனின் திருவடி நிழலின் சுகத்தைக் குறித்தும், மனிதனின் அலையும் மனத்தினைப்பற்றியும், தெளிவாக- சுவையாக எழுதுகிறார். கோயிற்றிருவகவல், திருஏகாம்பமாலை முதலியனவும், பொதுப்பாடல்களும், உடற்கூறு வண்ணமும் அதில் இடம் பெற்றிருக்கின்றன. பட்டினத்தார் சரித்திரச் சுருக்கமும் உள்ளது. viii. 886/1917/I.

O31,1x

1827. i. பட்டினத்துப் பிள்ளையார் திருபாடற்றிரட்டு: முதற் பதிப்பு ii. மணி அண்டு கம்பெனி, மதுரை; பிரசன்ன வெங்கடேஸ் வரா பிரஸ், மதுரை; iii. ஜூலை, 1919; iv. செ.மூ.ப. 32; v. 16×12 செ.மீ.; vi. 0–3–0; vii. பட்டினத்துப் பிள்ளையார் அருளிச்செய்த திருப்பாடற்றிரட்டாகும் இது. அடிகளார் பாடல்களின் ஒரு பகுதி மட்டும் ஈண்டு தரப்பட்டுள்ளன. கோயிற்றிருவகவல் முதலிய அகவல்களும் திருவேகம்பமாலை முதலிய தோத்திரங்களும் இதில உள. தன் தாயாரைச் சிதையில் வைத்து எரிமூட்டுகையில், அடிகள் பாடிய வெண்பாக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 205/1919/IV.

O31,1x

1828. i. திருப்பாடற்றிரட்டும், உடற்கூறு வண்ணமும் (சேந்தனார் திருப்பல்லாண்டு); ii. ராமானுஜ ஐயங்கார்; ஸ்ரீராமானுஜ அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1920; iv. செ.மூ.ப. 45; v. 17×11 செ.மீ; vi.......; vii. கோயில் திருவகவல் முதலிய அகவற் பாடல்களும், பற்பல காலங்களில் பாடிய தோத்திரப்பாடல்களும் இதில் உள. பட்டினத்துப் பிள்ளையார் சரித்திரச் சுருக்கமும் முதலில் உளது. நூலிறுதியில், சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டு தரப்பட்டிருக்கிறது. viii. 276/1920/IV.

O31,1x

1829. i. பலபாடற்றிரட்டு ; ii. ஷேக்மீரான் மொய்தீன், சென்னை. முகம்மதியாப் பிரஸ், சென்னை ; iii, ஜூன், 1917 ; iv; செ.மூ.ப. 400 ; v. 21×14 செ.மீ. ; vi. 1–12–0 ; vii. இதில், இஸ்லாம் கொள்கைகளை விளக்கும் பாடல்கள் முதல் பலதரப்பட்ட லௌகிகக் கொள்கைகளை விளக்கும் பாடல்கள்வரை அடங்கியுள்ளன. viii. 41/1918/I.

031,1x

பார்த்தசாரதி நாயுடு, பா. மு., சிவகாசி

1830. i. சுப்ரமண்யக் கடவுள் மீது நவரச மஞ்சரி : முதற் பதிப்பு ; ii. பா. மு. பார்த்தசாரதி நாயுடு, சிவகாசி ; சேதுபதி அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1917 ; iv. செ.மூ.ப. 56 ; v. 21×14 செ.மீ. ; vi. 0 6–0 ; vii. சிவகாசியில் வழிபடப்பெறும் சுப்ரமண்ய சுவாமியைக் குறித்துப் பாடப்பெற்ற பக்திப்பாடல்கள் 'காவடிச்சிந்து', திருப்புகழ், வகுப்பு, வண்ணம், கீர்த்தனைகள் ஆகிய தலைப்புகளில் பாடப்பெற்றிருக்கின்றன. புதுமையாகிய சுவையையுடைய பாட்டுக்கள் என்ற மலர்களின் கொத்து என்னும் கருத்தால், இதற்கு நவரச மஞ்சரி என்று பெயரிடப்பட்டுள்ளது. இவர் பாடிய வேறு நூல்கள், திருவிருதை கலம்பகம், திருப்புகழ் என்பனவாம். இவ்வாசிரியர் தண்டபாணி சுவாமிகளின் மாணவராவர். viii. 9/1917/III.

031,1x

பீர்முகமது சாகிப், திருச்சி

1831. i. பாமஞ்சரி ; முதற் பதிப்பு ; ii. பீர்முகமது சாகிப், திருச்சி ; ஸ்ரீவாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம் ; iii. அக்டோபர், 1920 ; iv. செ.மூ.ப. 63; v. 18×12 செ.மீ.. vi. 0–8–0 ; vii. இதன் ஒரு பகுதியில், நபிகள் பெருமான் முதலானோர்மீது இயற்றப்பட்ட பாடல்களும், மற்றொரு பகுதியில், நாடகத்தமிழ் பாடல்களும், தேசபக்தர் முதலாயினோர் வாழ்த்துக் கவிகளும் அடங்கியுள்ளன. தேசாபிமான செல்வராகிய திரிசிரபுரம் டாக்டர் டீ. எஸ். ராசன் அவர்களது அன்பிற்கறிகுறியாக இந்நூல் சமர்ப்பிக்கப் பட்டதாகத் தெரிகிறது. viii. 289/1920/IV.

031,1x

1832. i. புறத்திரட்டு — அறத்துப்பால் — முதற் பகுதி : முதற் பதிப்பு ; ii. சோமசுந்தர தேசிகர், திருவாரூர்; விக்டோரியா அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. டிசம்பர், 1918 ; iv. செ. மூ. எ. 191 ; v. 23×14 செ. மீ. ; vi 0–4–0 ; vii, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில், சில முக்கியமான நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட பாடல்களின் தொகுப்பாகும் இது. இதில் பல்வேறு பொருள்களைப்பற்றி விளக்கப்பட்டுள்ளன. திருக்குறளைப்போல அதிகாரப் பெயர்கள் தரப் பட்டுள்ளன. 'எட்டுப் பிரதிகளிலிருந்து முதல் தடவையாக

அச்சிடப்படுவது. இது, பகுதி பகுதியாக வெளிவரும். முற்றிலும் அச்சிட்ட பிறகு, முகவுரை முதலியன பிரசுரம் செய்யப்படும்' என்று பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இது, திருவாரூர்த் தமிழ்ச் சங்கத்தின் இரண்டாவது பிரசுரமாகும். viii. 547/1919/I.

O13,1x

1833. i. மனோன்மணித் திரட்டு; ii. கே. சையதிமாம் புலவர், உறையூர்; ஸ்ரீகிருஷ்ணவிலாசம் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. 1919; iv. செ. மூ. எ. 2+16+1 ; v. 17×11 செ. மீ. ; vi........; vii. மனநிலை அமைதியாகவும், சாந்தமாகவும் இருப்பதற்காக, சிவசக்தியான பார்வதியைப் புகழ்ந்து பாடிய பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். இதில் மனோன்மணி அகவல், பூஜை, சித்தர்களின் பூஜை சமாதி ஸ்தலம், ஆகியவைகளைப் பற்றிய விளக்கங்களும் அடங்கியுள்ளன. இதில், மனோன்மணி அஷ்டோத்திர சத நாமங்கள் மனோன்மணி அகவல், அமாவாசை முதல் பௌர்ணமி வரையில் மனோன்மணி பூஜை, சோடச விருத்தம் என்பவை உள. மேலும் சித்தர்கள், பதினெண் பாஷைகள், சித்தர்கள் சமாதிஸ்தலம் என்பவற்றைத் தெரிவிக்கும் பாடல் களும் உள. viii. 377/1619/I.

O31,Ix

மஸ்தான் சாகிபு

1834. i மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு ; ii. முத்துவடிவேலு முதலியார், சென்னை ; பூமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii, 1916 : iv. செ. மூ. எ. 1011 ; v. 22×14 செ. மீ. ; vi ..............; vii. முப்பது தலைப்புகளின் கீழ் பாடப்பெற்ற பக்திப்பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பாடலுக்கும் பதவுரை, கருத்துரை, இறுதியில் தரப்பட்டுள்ளன. இவ்வுரையை ஆக்கியவர் காஞ்சிபுரம் இராமஸ்வாமி நாயுடு ஆவார். இவருடைய பாடல்கள் தாயுமானவர் பாடல்களைப் போன்று காணப்படுகின்றன. மஸ்தான் சாயபுவின் பேரில் திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் பாடிய நான்மணிமாலையும், ஐயாசாமி முதலியார் முதலிய வேறுபலர் பாடிய தோத்திரப் பாக்களும் பிறவும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 255/1917/I.

O31,Ix

முத்துசாமி ஐயர், வே,. மதுரை

1835. i. தனிப்பா கோவை ; ii. வே முத்துசாமி ஐயர், மதுரை தமிழ்ச்சங்கப் பவர் பிரஸ், மதுரை; iii. செப்டம்பர், 1919; iv. செ. மூ. எ. 438; v. 17×11 செ. மீ.; vi. 0-8-0;

vii. இந்நூலின் ஆசிரியர், தனது மனத்தில் தோன்றிய கருத்தினையமைத்து இயற்றிய தனிப்பாக்களின் தொகுப்பாகும். இதில் தோத்திரப் பாக்கள், வாழ்த்துப் பாக்கள், இரங்கற் பாக்கள், பல் வகைப் பாக்கள் என நான்கு வகையான பாடல் தொகுப்புக்கள் அடங்கியுள்ளன. பற்பல தமிழ்ப் பெரியார்களைக் குறித்த வரலாற்றுக் குறிப்புக்கள் சிலவும் இவர் பாடலால் தெரியவரும். திருவாடுதுறை ஆதீன வித்வான் கே.ரா. சுப்ரமணியக் கவிராயர், மதுரைக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் கோபாலகிருஷ்ணய்யர் முதலியோரும் சிறப்புப் பாயிரம் தந்துள்ளனர். viii. 352/1619/IV.

031,1x

**ஸ்ரீநிவாச ஐயங்கார், சு.& ஸ்ரீநிவாச ஐயர், பி. (தொ. து.)**

1836. i. செய்யுள் தொகுதி: முதற் பதிப்பு; ii. டி.கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம்; ஸ்ரீகிருஷ்ணவிலாச பிரஸ், கும்பகோணம், iii. செப்டெம்பர், 1920; iv. செ.மூ. எ. 230 ; v. 18×13 செ.மீ. ; iv. 0—4—6 ; vii. பல நீதிகளை யுணர்த்தும் கவிதை, கதை ஆகியவற்றின் தொகுப்பே இந்நூல். vii. 1016/1920/III.

031,1x

1837. i ஸ்ரீரங்கமகாத்மியத் தோத்திரத் திரட்டு: முதற் பதிப்பு ii. கோ. செல்லப்ப முதலியார், சென்னை; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1916 ; iv. செ. மூ. ப. 142; v. 15×13 செ.மீ ; vi. 0–6–0 ; vii. அரங்கநாத சுவாமியைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களின் தொகுதியே இது. அருள்விளக்கும் பதிகம் தொடங்கி, ஸ்ரீகேசவப்பெருமாள் பதிகம் ஈறுக 33 சிறு பிரபந்தங்கள் உள. இவற்றை ஆக்கியோர் பெயர்கள் தெரியவில்லை. ஆழ்வார்களின் பாசுரங்களும் இத்தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 1031/1917/I.

031,1x

## 894·811109 இலக்கிய வரலாறு

இராகவய்யங்கார், மு.

1838 i. வேளிர் வரலாறு: இரண்டாம் பதிப்பு; மு. ii. இராவகய்யங்கார், இராமநாதபுரம்; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை; iii. 1916; iv. உ.ப. 76; v. 22×14 செ.மீ; vi.0–8-0; vii. சங்க காலத்துத் தமிழ் நூல்களில் காணப்படும் வேளாளர் சமுதாயத்தின் ஆதி வரலாறு இந்நூலின் கண் பேசப்படுகிறது. வேளிர்காலத்தைச் சேர்ந்த மன்னர் பலரைப் பற்றியும் பேசப்படுகிறது. வேளிர் குல அரசர்களில் ஆய், ஆவி, எவ்வி, பேகன், பாரி, வெண்மான் என்னும் அறுவரைப்பற்றிய வரலாறும், பிற வேளிர்களைப்பற்றிய வரலாறும் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 1916/III.

031,1x

இராகவையங்கார், வி.

1839. i. வஞ்சிமாநகர்; ii. தமிழ்ச் சங்க முத்திராச் சாலை, மதுரை. iii. 1917; iv. செ.மூ. உ. ப. 160; v. 21×14 செ.மீ.; vi....; vi. சேரர் பேரூர் மேல் கடற்கரைக்கண் உள்ள கொடுங்கோளூர் தானோ கொங்குநாட்டுக் கருவூர் தானோ என வாதப் பிரதி வாதங்கள்; நூல் வடிவிலும், பத்திரிகை வாயிலாகவும் உலவி வர, இராஜரா ஜேஸ்வர சேதுபதி அவர்கள் தூண்டுதலினால், இவற்றின் உண் மைகள் குறித்து இந்நூலில், ஆசிரியர் ஆராய்கிறார். இறுதியில் கொல்லிமலைப் பக்கத்தே ஆண் பொருநைக் கரையில் உள்ள கரு வூரே வஞ்சி மாநகர் என்னும் முடிவிற்கு வருகிறார். தமது துணிவிற்கு ஆதாரமாகப் பற்பல சான்றுகள் காட்டி ஆசிரியர் விளக்கம் தந்துள்ளார். viii. 920/1917/III.

O31v

கிருஷ்ணசாமி ஐயங்கார், சா.

1840. i. கடை வள்ளலார் காலம்: முதற் பதிப்பு; ii. பீ, ஆர். ராம ஐயர் அண்டு கம்பெனி, சென்னை; பி. ஆர். ராமஐயர் & கம்பெனி பிரிண்டர்ஸ், சென்னை; iii. 1914; iv. உ. ப. 34; v. 21×14 செ.மீ. vi. ; vii. தமிழ் இலக்கியத்தில் காணும் கடையெழு வள்ளல் களைப்பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை. இறுதியில் சில குறிப்புகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 320/1917/II.

O31v

சோமசுந்தர பாரதி, எஸ். , வக்கீல், தூத்துக்குடி

1841. i. சேரர் பேரூர்; ii. தமிழ்ச் சங்க முத்திராச் சாலை, மதுரை; iii. 1197; vi. உ. ப. 72; v. 21×14 செ.மீ. vi. 0–10–0; vii. சேர மன்னரின் தலைநகரமாகிய வஞ்சி மாநகரம் எது என்பது பற்றிய ஆய்வுரை நூல். சேரர் பேரூர், கருவூர் வஞ்சி என்னும் கொள்கைக்கு மாறாகப் பல கருத்துக்களைச் சான்றுகளுடன் எடுத்துக் காட்டுவது. பன்னிரண்டு பகுதிகளாகப் பகுத்து, ஆராய்ச்சிப் பொருள்களைத் தெளிவுற விளக்குகிறது. viii 766/1917/III.

O31v

நாராயணையங்கார், மதுரை

1842. i. வஞ்சி மாநகராய்ச்சி—முதற் பகுதி; முதற் பதிப்பு ; iii. திரு நாராயணையங்கார், மதுரை; தமிழ்ச்சங்க முத்திரச்சாலை, மதுரை; iii. பிப்ரவரி, 1918; iv. உ.ப. 48; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–0 vii. பண்டைய நகரான வஞ்சி மாநகர் இருந்த இடம்பற்றித் தோன்றியுள்ள கருத்து வேறுபாடுகளை ஆராய்ந்து எழுதப்பெற்ற நூலிது. சிலப்பதிகாரம் முதலிய சங்க நூல்களிற் சொல்லப் பட்ட சேரர் தலைநகராகிய வஞ்சி மாநகரம் கொங்கிற் கரு வூராமென்று ஒரு சாராரும், கடல் மலை நாட்டதென்று மற்றொரு சாராரும், வாதப் பிரதிவாதமான கட்டுரைகள் எழுதி வெளி யிட்டு வந்தனர், அவருள், கொங்கிற் கருவூராமென்பார் வாதக் கட் சியாரும், அஃதன்றென்பார் எதிர்க் கட்சியாரும் ஆகிறார்கள். இந் நூல், எதிர்வாதக் கட்சியின் சார்பாக. சேரர் தலைநகரமாகிய

வஞ்சி மாநகராம், கொங்கிற் கருவூர் அன்று எனப் பல ஆதாரங் கொண்டு நிறுவுகின்றது. இது, மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவரான, மாட்சிமை தங்கிய சேது மன்னர் கட்டளைக்கிணங்க செய்யப்பட்டதாகத் தெரிகிறது. vii. 790/1918/I.

O31v

பக்தவத்சலம், டி.

1843. i. சக்தி இலக்கியம் அல்லது பலமது வாய்ந்த நலமுறு நூல்கள்; ii. டி. பக்தவத்சலம், விவேகாநந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ. ப. 16; v. 22×14 செ.மீ.; vi.....; vii. 1915-ஆம் வருடம், கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில், தமிழ் இலக்கியத்தின் பெருமையைப் பற்றி ஆற்றிய சொற்பொழிவு; viii. 714/1916/I.

O31v

## 894. 81104 தமிழ் உரைநடை

வடிவேலு செட்டியார், கோ.

1844. i. வியாச போதினி, இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. சண்முக முதலி; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ. ப. 86; v. 18×12 செ.மீ.; vi. 0—4—0; vii. ஒழுக்க முறையினை ஓதும் கட்டுரைகளின் தொகுப்பு இவ்வாசிரியரின் கட்டுரைத் தொகுப்பில் இது, இரண்டாவது பாகமாகும். "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பது தொடங்கி, 'அஃகமும் காசும் சிக்கனத்தேடு' என்பது வரையில் உள்ள கொன்றை வேந்தன் நீதியுரைகளுக்கு ஏற்ற கதைகள் இடம் பெற்றுள்ளன. அரசனும் குடிகளும் என்னும் பெயரில் ஒரு கட்டுரை இறுதியாக உள்ளது. viii. 178/1916/I.

O31,6

## 894·81104 உரைநடை: நகைச்சுவை

இராமச்சந்திரன், கும்பகோணம்

1845. i. காப்பிக்கும் பழையதுக்கும் சண்டை, தேத்தண்ணீர் மத்திசம்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. பெ. ஆறுமுக முதலியார், சென்னை; முரகரி அச்சுக் கூடம், சென்னை; iii. டிசம்பர் 1917; iv. உ.ப. 7; v. 21×14 செ.மீ; vi. 0—1—0; vii. காப்பிக்கும் பழையதுக்கும் சண்டை ஏற்பட்டதற்குத் தேத்தண்ணீர் சந்து செய்வது போன்று கற்பனை செய்து எழுதப்பெற்ற நகைச்சுவையான உரையாடல் இதில் அடங்கியுள்ளது. தென்னாட்டு மக்களுக்குக் காப்பி முதலிய பானங்கள் தீங்கு விளைவிக்குமென்பதை யுணர்த்துவதற்காக எழுதப்பட்டது; viii. 351/772/1918/I.

O31,8

**சுப்புலக்ஷ்மி அம்மாள், கும்பகோணம்**

1846. i. சம்பந்தி பரிகாசப் பாடம்: முதற் பதிப்பு; ii. ம. நாராயணசாமிப் பிள்ளை, கும்பகோணம்; ஸ்ரீமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை; iii. மார்ச், 1918; iv. செ. மூ. ப. 20; v. 21×14 செ. மீ.; vi. 0–1–0; viii, திருமண காலத்தில் சம்பந்திகளுக்கிடையே நடக்கும் நகைச்சுவை மிக்க உரையாடல்கள், சம்பந்தி பரிகாசப் பாடல் என்ற தலைப்பில், கீர்த்தனை வடிவில், இந்நூலில் தரப்பட்டுள்ளன. கும்பகோணம் புத்தக வியாபாரி நாராயணசாமி பிள்ளை அவர்களால் பார்வையிடப் பட்டது. viii. 1161/1918/I.

031,8

**செய்குதம்பிப் பாவலர், கா. ப., கோட்டாறு**

1847. i. தேவலோகக் கிரிமினல் கேஸ்: திருத்திய நான்காம் பதிப்பு; ii. எம். ஆதி அண்டு கோ, சென்னை; சந்திரா பிரஸ், சென்னை; iii. எப்ரல், 1917; iv. உ.ப. 362; v. 19×13 செ.மீ.; vi. 1–8–0, vii. புராணக் கதைகளிலிருந்து சில சுவையான பகுதியை எடுத்து, நகைச்சுவையாக இக்காலத்தில் நீதி மன்றத்தில் நடக்கும் வழக்கைப் போன்று உருவாக்கி, வாதி, பிரதிவாதி, வக்கீல் வாதம், குறுக்கு விசாரணை முதலிய அம்சங்களோடு எழுதப்பட்டுள்ளது. அரிச்சந்திர சரித்திரம், சூர்ப்பனகை பங்கம், வாலிவதம், இலங்கா தகனம் அரம்பை பலவந்தம், கோபிகாஸ்திரீகளின் வஸ்திராபகரணம், துரோபதை வஸ்திராபகரணம், கீசகன் பலவந்தம் முதலிய வழக்குகள், இதில், இந்தியன் பீனல்கோடு அடிப்படையில் விசாரிக்கப்பட்டதாக இந்நூலில் காணலாம். இதற்கு இராமசாமி நாயுடு, திருவேங்கட நாயுடு, மற்றும் இராமலிங்க முதலியார், சாற்றுக் கவிகளும், ஆறுமுகஞ் சேர்வை அவர்கள் சிறப்புப் பாயிரமும் பாடியுள்ளனர். viii. 426/1917/II.

031,8

**மீனாட்சி அம்மாள்**

1848. i. வழி நடை உப்புமாப் பாட்டு; திருத்திய நான்காம் பதிப்பு; ii. ஆறுமுக முதலியார்; முரகரி அச்சுக் கூடம், சென்னை; iii 1916; iv. செ.மூ.எ. 12; v....; vi. 0–1–0; vii. வேடிக்கைப் பாடல்களின் தொகுப்பு. உப்புமா செய்து போடச் சொல்லுதல், கச்சேரிக்குப் போதல், இராச் சாப்பாடு, உறக்கம் என்று இவற்றைப் பொருளாகக் கொண்ட இசைப் பாட்டுகள் இதில் உள. கும்மி, சிந்து மெட்டுகளில் பாடல்கள் அமைந்துள்ளன. viii. 916/1916/II.

031,8

1849 i. ஹாஸ்ய மஞ்சரி: முதற் பதிப்பு; ii. ஜி.எ. வைத்தி நாதன் அண்டு கம்பெனி, சென்னை; தாம்சன் அண்டு கோ. பிரிண்டர்ஸ், சென்னை iii. செப்டம்பர். 1917; iv. உ.ப. 96; v. 18×13 செ.மீ. vi. 0-6-0; vii.

இந்நூல், பல நகைச் சுவையான சிறு கதைகளும், துணுக்குகளும் அடங்கிய தொகுப்பு ஆகும். 160 பகுதிகள் உள. இவை குடும்ப வாழ்க்கையைப் பற்றியவை, கோர்ட்டு சம்பந்தமானவை, சிறுவர்களைப் பற்றியவை, பள்ளிக்கூடச் சம்பந்தமானவை, வைத்தியர்கள் சம்பந்தமானவை, அசட்டுத் தனமானவை, இதர வேடிக்கைகள் என்னும் பெருந் தலைப்பின் கீழ் ஹாஸ்யத் துணுக்குகள் பாகுபடுத்தப்பட்டுள்ளன. viii. 263/1917/IV.

O31,8

**1850.** i. **ஹாஸ்யமஞ்சரி:** இரண்டாவது பதிப்பு; ii. ஜி.ஏ. வைத்திய நாதன் அண்ட் கம்பெனி, சென்னை; டாட்டா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. 1920; iv. உ.ப. 96; v. 18×13 செ.மீ. vi. 0–8–0; vii. இதில் வேடிக்கையான சிறு கதைகளும், விகடத் துணுக்குகளும் அடங்கியுள்ளன. இதன் முற்பகுதியில் குடும்ப வாழ்க்கையைப் பற்றியும், பிற்பகுதியில் இதர வேடிக்கைளும் தொகுக்கப்பட்டுள்ளன, viii. 305/1920/IV.

O31,8

## 894. 8112 நாடகம்

**1851.** i. **அரிச்சந்திர விலாசம்:** முதற் பதிப்பு; ii. பி. முனுசாமி நாயுடு, சென்னை; சங்க நிதி விளக்க அச்சுக் கூடம், சென்னை; iii. மே, 1919; iv. செ.மூ.ப. 36; v. 18×11 செ.மீ.; vi. 0–0–6; vii. அரிச்சந்திரன் வரலாறு செய்யுள் வடிவமாக எழுதப்பட்டுள்ளது. இது ஆறு பாகங்களைக் கொண்ட நாடகமாகும். பட விளக்கங்களுடன் கூடியது. அரிச்சந்திரன் சரிதையின் பிற்பாகமாகிய காசி நகர் நிகழ்ச்சிகள் பற்றி இந்நூல் விளக்குகிறது. viii. 922/1919/IV.

O31,2

**அருணசலக் கவிராயர், சீர்காழி**

**1852.** i. **இராம நாடகக் கீர்த்தனை:** முதற் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ., சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1916; iv. செ.மூ.ப. 280; v. 17×13 செ.மீ.; vi. 2–0–0; vii. இந்நூலில், இராமாயண வரலாற்றை நாடக வடிவினில் இசைக்கேற்ப கீர்த்தனைகள் மூலமாக ஆசிரியர் எழுதியுள்ளார். சுந்தர காண்டம் வரையுள்ள பகுதிகள் இதில் உள. நூலாசிரியர் வரலாறும் நூலாசிரியர் பிறர்மேல் பாடிய பாடல்களும் தரப்பட்டுள்ளன. 'இராமாயண ஓரடிக் கீர்த்தனை' என்னும் பாடற் பகுதியும் இதில் உளது. viii. 838/1916/IV.

O31,2

இராகவாசாரியர், தூ. கோ.

1853. i. காந்தாமணி: முதற் பதிப்பு; ii. எஸ். மூர்த்தி & கம்பெனி, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. உ.ப. 182; v. 19×13 செ.மீ; vi. 0–8–0; vii. உண்மையான ஒரு மனைவி, தன் கணவன்பாற் கொண்ட தூய அன்பினால் தன் முயற்சியில் வெற்றி கொள்வதை விளக்கும் ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம். viii. 124/1917/I.

O31,2

இராமச்சந்திர கவிராயர், இராயநல்லூர்

1854. i. மகாபாரத விலாசம், வில் வளைத்து மாலையிடுதல்: திருத்திய பதிப்பு; ii. கருணானந்த சுவாமிகள், சிதம்பரம்; கலைக்கியான முத்திராக்ஷர சாலை, சென்னை; iii. நவம்பர், 1915; iv. உ.ப.+செ.மூ.ப. 88; v. 21×14 செ.மீ.; vi. 0-3-0; vii. அர்ச்சுனன் வில்லை வளைத்து வென்று, திரௌபதியை மணமுடிக்கின்ற நிகழ்ச்சியினைச் செய்யுளும் விளக்கவுரைகளும் அடங்கிய நாடகமாக ஆசிரியர் எழுதியுள்ளார். இசைப்பாடல்களுக்கு இராகதாளக் குறிப்புகளும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. viii. 780/1916/III.

O31,2

இராமானுஜம், ச.

1855. i. விராட்போதுலூர் வீரப்பிரமங்கார் நாடகம்; ii. நாகப்ப ஆச்சாரி, அரும்பாக்கம்; முராஹரி அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1920; iv. உ.ப.+செ.மூ.ப. 51; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் இக்கலியுகத்தில் நடக்கப் போகிற பல நிகழ்ச்சிகளைப் பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. viii. 623/1920/I.

O31,2

இராஜவடிவேல் தாசர், மதுரை

1856. i. மாருதி விஜயமென்னும் மயிலிராவணன் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. பார்த்தசாரதி நாயுடு, சென்னை; சக்கர வர்த்தி அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. செ.மூ.ப. 44; v. 21×14 செ.மீ.; vi. 0-4-0; vii. இராவண னுக்கும் ஹனுமானுக்கும் நடந்ததாகக் கூறப்படும் யுத்தத்தை விவரிக்கும் புராணக் கதை. இது பாட்டு வடிவமாக அமைந்த நாடக நூல். வசனமும் கீர்த்தனைப் பாடல்களும் விரவி அமைந்தது. viii. 884/1916/II.

O31,2

**இராஜேந்திரம் பிள்ளை, பா. அ அ.**

1857. i. ஆபிரகாம் சாராள் விலாசம்: முதற் பதிப்பு; ii. பா.அ. அ. இராஜேந்திரம் பிள்ளை, சென்னை; மெர்குரி பிரஸ், சென்னை: iii. எப்ரல், 1918; iv. செ.மூ.ப. 118; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. இதில் ஆதாம் ஏவாள் இவர்களின் வாழ்க்கை வரலாறு நாடகமாக விளக்கப் பட்டுள்ளது. சென்னை அமிர்தகவி அப்பாவுப் புலவரின் குமாரர் இந்நூலாசிரியர் எனத் தெரியவருகின்றது. நாடக அலங்காரத்திற்குரிய முறையில் நாட்டுப் பழமொழிகள், கற்பனைகள், வழக்கப் பேச்சுக்கள், படிப்பினைகள் முதலியன இதில் கலந்துவருகின்றன. viii. 214/1918/II.

O31,2

1858. i. இசாக்கு-ரெபெக்காள் விலாசம் முதற் பதிப்பு; ii. ஆர். எ. ந. நடேசன், சென்னை; மெர்குரி பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. செ.மூ.ப. 164; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. இது கிறித்துவச் சமயக் கொள்கை கொண்ட ஒரு நாடகம். இசாக்கு ரெபெக்காள் நாடகத்தின் இரண்டாம் பாகமே இப்புத்தகம். viii. 941/1918/III.

O31,2

1859. i. ஒட்ட நாட்டார் நாடகாலங்காரம்: திருத்திய பதிப்பு; ii. தி. இராகவலு நாயுடு, சென்னை; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை. iii. செப்டெம்பர், 1920; iv. உ.ப.+செ. மூ. ப. 96; v. 22×14 செ.மீ.; vi. 0-6-0; vii. இஃது ஆறுபாகங்களடங்கியது. ஐதீகப் பிரகாரம் விசித்திர படங்களமைந்த நூதன பெரிய ஒட்ட நாட்டார் நாடகாலங்காரம் வரலாற்றுச் சுருக்கத்துடன் கூடியது. ஓர் ஒட்டப்பெண் தன் கணவனை வஞ்சித்துப் பிறனுடன் சென்று வாழ்ந்து, குழந்தைகள் பெற்றுப் பின்னர் அச்சோர நாயகனாலும் கைவிடப்பட்ட நிலையில், காளிகா தேவியின் அருளால் மூவரும் தேவர் களும் அவளுக்குக் காட்சியீந்து வரந்தந்த வரலாறு இதன்கண் கூறப்பட்டுள்ளது. viii. 904/1920/III.

O31,2

**கங்காதர சிவா, சி. மு.**

1860. i. கீசகன்: முதற் பதிப்பு; ii. சி.மு. கங்காதர சிவா, சென்னை; வேவர்லி பிரஸ், சென்னை; iii. செப்டெம்பர், 1918; iv. உ.ப. 66; v. 22×14 செ. மீ.; vi. 0–6–0; vii. மகா பாரதத்தில் பேசப்படுகின்ற கீசகனுடைய கதையை நாடகமாக ஐந்து அங்கங்களாகப் பிரித்து ஆசிரியர் எழுதியுள்ளார். கெடுவான் கேடு நினைப்பான் என்ற பழமொழியின்

உண்மையினை நாம் இந்தக் கதை மூலம் அறியலாம். இது மிகவும் இனிய நடையில் எழுதப்பட்ட ஓர் அரிய நாடகம். இன்னிசைப் பாடல்கள் பல இடையிடையே விரவி வருகின்றன. திரு. சிந்நய நாயகர் என்பார் அளித்த சாற்றுக் கவியுடன் கூடியது. viii. 698/1918/III.

O31,2

1861. i. பட்டினத்தடிகள்: முதற் பதிப்பு; ii. சி.மு. கங்காதர சிவா, சென்னை; வேவர்லி அச்சியந்திர சாலை, சென்னை; iii. நவம்பர், 1919; iv. உ.ப.+செ.மூ.ப. 92; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0; vii. மிகவும் புகழ்பெற்ற சிவ பக்தரான திருவெண்காடரென்னும் பட்டினத்தடிகளைப் பற்றிய வரலாற்றினைக் கொண்ட ஓர் இனிய தமிழ் நாடகம். இன்னிசை பாடல்களும் இதில் அமைந்துள்ளன. சென்னை கோ. வடிவேல் செட்டியார், திருவிசை நல்லூர்ப் புராணிகர் சிந்நய நாயகர், நாகை சொ. தண்டபாணிப் பிள்ளை முதலியோர் இதற்குச் சாற்றுக்கவிகள் பாடியுள்ளனர். viii. 761/1919/IV.

O31,2

1862. i. பாண்டவர் வனமேகுதல்; ii. எஸ். வி. என். பிரஸ், சென்னை; iii. 1917; iv. உ.ப. 75; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0; vii. மகாபாரதத்தினின்றும் எடுக்கப் பெற்ற சரிதம், நாடகத் தமிழ் முறையில் இச்சரிதத்தை ஆசிரியர் அமைத்துள்ளார். ஐந்து அங்கங்கள் கொண்டது இந்நாடகம். நாடகப்பாத்திரங்களின் பட்டியல் முதற்கண் தரப்பட்டிருக்கிறது. viii. 738/1917/III.

O31,2

**கண்ணுசாமிக் கோனர், மு., பிரான்மலை**

1863. i. காம சௌந்தரி சரித்திரம்: முதற் பதிப்பு; ii. மு. கண்ணுச்சாமிக் கோனர், பிரான்மலை; கமலா பிரஸ்; திருப்பாப்புலியூர்; iii. செப்டெம்பர், 1918; iv. உ.ப.+ செ.மூ.ப. 91; v. 21×14 செ.மீ.; vi. 0–10–0; vii. காம சௌந்தரி என்பவள் எவ்வளவு துன்பங்கள் தன் வாழ்க்கையில் வந்த பொழுதும் சிறிதும் தவறுமல், கற்பு நெறியோடு ஒழுகி, முடிவில் இறையருளால் மணம் முடித்த வரலாற்றினை இக்கதை நன்கு விளக்குகின்றது. இந்நூல் முழுதும் இசைப்பாடல்களாலாகியது. மதுரைக் கந்தசாமிக் கவிராயர் எழுதிய வசன நூலைப் பின்பற்றி நடிக்கத்தக்க வண்ணம் இசைப்பாடலும் உரையாடலும் அமைய இவ்வாசிரியர் எழுதியுள்ளார். இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் பிரான்மலை திரு. முத்துவருகு உபாத்தியாயரவர்கள், திரு. எம். ஆர். கே. கந்தசாமிக் கவிராயர் முதலியோர் பாடிய சாத்துக்கவிகள் இதற்கு உண்டு. viii. 1009/1919/I.

O31,2

**கந்தசாமிப் பிள்ளை, கவிராஜ, மதுரை**

1864. i. கமலமதி: திருத்திய மூன்றும் பதிப்பு; ii. நா. முனிசாமி முதலியார், நாகவேடு; ஆனந்த போதினி அச்சியந்திர சாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1919; iv. உ. ப. 101; v. 22×14 செ. மீ.; vi. 0–8–0; vii. தனது கனவினால் பல செயல்களைச் செய்து இன்பம் பெற்ற கமலமதி என்ற பெண்ணின் வரலாறு இதில் அடங்கியுள்ளது. இரண்டு அங்கங்களில் நாடக உருவில் எழுதப்பட்டிருக்கிறது. "வரும் விதி வருமுன் பெருமதி துணைக் கொள்" என்றபடி தக்க அறிவுரைகள் கூறப்பட்டுள்ளன; Viii. 958/1919/I.

O31,2

1865. i. சற்குண சாவித்திரி அல்லது கற்பின் வெற்றி; ii. என். கணபதி முதலியார்; மாணிக்க விலாச அச்சுக்கூடம் சென்னை; & ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. செ. மூ. ப. 42; v. 21×14 செ. மீ.; vi. 0–2–0; vii. இது தி. முருகேச நாயகர் அவர்களின் கம்பெனியில் நடந்து வந்த நாடகமாகும். பாடல்களும் உரையுமாகக் கலந்து செல்லும் நடையினது. சாவித்திரி—சத்தியவான் என்னும் புராணக் கதையே புதிய நடையில் பல நாடகச் சிறப்புக்கள் விளங்க இதில் அமைந்துள்ளது. viii. 135/1916/IV.

O31,2

**கன்னைய செட்டி (ப. து.)**

1866. i. புலந்திரன் களவு: புதிய பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சென்னை; சண்முகம் பிரஸ், சென்னை; iii. 1918; iv. உ. ப.+செ. மூ. ப. 80; v. 20×14 செ. மீ.; vi. 0–4–0; vii. புலந்திரன் என்னும் இளவரசனுக்கும் கலந்தாரி என்னும் இளவரசிக்கும் நடந்த இரகசியத் திருமணத்தை விளக்கும் கதையைக் கொண்ட நாடகம். புலந்திரன் தாயாகிய அல்லி ராணி பாரதக் கதையில் பார்த்தனின் மனைவியும் பாண்டியன் புதல்வியுமாகக் குறிப்பிடப்படும் சித்திராங்கதையே என ஊகிக்க இடமுண்டு. viii. 794/1918/I.

O31,2

**கன்னைய நாயுடு, வேலூர்**

1867. i. கார்த்திருந்த மாதைப் பார்த்திருந்த வேந்தன் கொண்டு போன மதன சேகரன்; ii. வே. ஜெயவேலு முதலியார்; டைமண்டு அச்சுக்கூடம், சென்னை; iii. 1916;

iv. உ. ப. 132; v. 22×14 செ. மீ.; vi. 0–8–0; vii. 'ஊழின் விளைவை ஒருவராலும் மாற்ற இயலாது' என்பதனைக் கருப்பொருளாகக் கொண்டது. இதன் ஆசிரியர் பால ஸ்வரூபானந்த சுவாமிகளின் பேரப் புதல்வராவர். கதை நிகழிடங்களைத் தலைப்புக்கள் போலக் காட்டி, அங்கங்கு நிகழும் செயல்களை விவரித்து உரைக்கின்றது. viii. 508/1916/I.

O31,2

1868. i. காலவரிஷி என்னும் சித்திர சேன கெந்தர்வ உபாக்கியானம்; ii. எம். ஏ. சடகோபாசாரி, கும்பகோணம்; லக்ஷ்மி விலாசா பிரஸ், கும்பகோணம்; iii. 1915; iv. உ. ப. 42; v. 18×13 செ. மீ.; vi. 0–4–0; vii. பெண்கள் சொல்லுகிறபடி நடவாமலும் தனக்கொவ்வாத செயல்களில் ஈடுபடாமலும் இறைவன் அருளுக்குப் பாத்திர மாக வேண்டுமென இந்நூல் பகர்கிறது. நமது பாவங்களைப் பொறுத்து அருள்புரியுமாறு கடவுளை வேண்டுவோமாயின் அவர் நம்மை மன்னித்து அருளுவார் என்றும் அறிவுறுத்தப்படுகிறது. பத்துக் களங்களாகப் பாகுபடுத்தப் பட்டிருக்கிறது. viii. 526/1916/I.

O31,2

கிருஷ்ணசாமி பாவலர், தெ., சதாவதானம்

1869. i. சாவித்திரி: முதற் பதிப்பு; ii. வி. ஏ. செங்கல் வராய நாயுடு, சென்னை; கார்ஜான் பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ. ப. 77; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0; vii. சாவித்திரி சத்தியவந்தன் என்னும் புராணக் கதை. இதில் மூன்று அங்கங்கள் உள்ளன. முதனூல் கருத்துக்கு முரணாகாதபடி எழுதப் பெற்றது. நாடக அமைப்பையும் நாடக மேடை அமைப்பையும் எண்ணி எழுதப் பெற்றது இந்த நாடகம். viii. 800/1916/II.

O31,2

1870. i. சாவித்திரி: இரண்டாம் பதிப்பு, ii. ஆர். வெங்கடா சலம் கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை; கே. ஆர். பிரஸ், சென்னை; iii. ஜுன், 1918; iv. உ. ப. 104; v. 18×13 செ. மீ.; vi. 0–8–0; vii. சத்தியவான் சாவித்திரி வரலாற்றை நாடகமாக எழுதப்பட்டுள்ளது. இடையிடையே செய்யுட்கள் தரப்பட்டுள்ளன. மூன்று அங்கங்களையுடையது. இறுதியில் இந்நாடகத்திற்கு வேண்டிய சில கீர்த்தனைகள் உள்ளன. நாடக அமைப்பையும் நாடகமேடை அமைப்பையும் கருதி, நடிப்போரை மனத்துட்கொண்டு அமைக்கப்பட்டது இந் நாடகம். viii. 878/1918/II.

O31,2

**1871.** i. பிரகலாதன்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. பி.வி கண்ணன் அண்டு கம்பெனி, சென்னை; சச்சிதானந்தம் பிரஸ், கோமளேசுவரன்பேட்டை, சென்னை; iii. 1917; iv. உ.ப.+செ.மூ.ப. 92; v. 19×13 செ. மீ. vi. 0–8–0; vii. புராணக் கதையான பிரகலாதனின் சரித்திரம் இதில் நாடக வடிவில் கூறப்பட்டுளளது. நாடகப் பாத்திரப் பட்டியல் தரப்பட்டுள்ளது. மூன்று அங்கங்களில் அமைந்தது இந்நாடகம். தெருக்கூத்தாடும் கூட்டத்தார் நடித்த பிரகலாத சரித்திரமே ஆசிரியரை இந்நாடகம் எழுதத் தூண்டியதாம். தாம் பாடிய புதுப் பாடல்களோடு ஆன்றோர் செய்யுட்கள் சிலவற்றையும் இதன்கண் சேர்த்துள்ளார். viii. 1069/1917/II.

O31,2

**1872.** i. விஜய விலோசனை: முதற் பதிப்பு; ii. சி. எ. செங்கல்வராய நாயுடு, சென்னை; கர்சான் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1916; iv. உ. ப. 80; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0; ஓர் உண்மையுள்ள மனைவியின் கதையைப் பற்றி மூன்று அங்கங்களில் விளக்கும் நாடக நூல். நாடகப் பாத்திரப் பட்டியல் ஒன்று நூன் முதலில் தரப் பட்டுள்ளது. பிரகலாதன், சாவித்திரி, கமலேசன் என்பன இவ்வாசிரியர் எழுதிய பிற நாடகங்களாகும். சென்னை சுகுண விலாச சபையாரின் நாடகப் பரிசு அறிவிப்பினை முன்னிட்டு எழுதப் பெற்றது இந்நூல். viii. 438/1917/I.

O31,2

**கிருஷ்ணப்பிள்ளை, விக்கிரவாண்டிசாலை**

**1873.** i. கெங்கையம்மன் நாடகம்: திருத்திய பதிப்பு; ii. அருணாசல முதலியார், கோகுலாபுரம்; கலைக்கியான முத்திராக்ஷரசாலை; iii. அக்டோபர், 1915; iv. செ. மூ. ப. 87; v. 22×14 செ. மீ.; vi. 0–4–0; vii. திருப்பதியில் கோயில் கொண்டுள்ள வழிபடு தெய்வமான கெங்கையம்மனின் வாழ்க்கை நாடகமாகச் செய்யுளில் விவரிக்கப்பட்டுள்ளது. கதைத் தொடர்பு விளங்க உரைநடையும் இடையிடையே கலந்துவர இயற்றப் பெற்றது. viii. 779/1916/III.

O31,2

**1874.** i. சயிந்தவ நாடகாலங்காரம்: முதற் பதிப்பு; ii. அருணாசல முதலியார், கோகுலாபுரம்; கலைக்கியான முத்திராக்ஷர சாலை, சென்னை; iii. ஜூன், 1919; iv. செ. மூ. ப. 88; v. 21×14 செ. மீ.; vi. 0–5–0; vii. மகாபாரதக் கதையில் வருகின்ற சயிந்தவன் என்பானின் கதை நாடகமாகச் செய்யுள் வடிவத்தில் எழுதப்பட்டுள்ளது. கீர்த்தனை, இசைப் பாடல்களும் உரைநடையும் கலந்த நடையில் அமைந்துள்ளது. viii. 743/1919/IV.

O31,2

கிருஷ்ணமூர்த்தி அய்யர், எம்., செருஞ்ஞங்கூர்

1875. i. சுகுண சுந்தரீயம்: முதற் பதிப்பு; ii. எம். கிருஷ்ண மூர்த்தி அய்யர், கும்பகோணம்; லக்ஷ்மி விலாசம் பிரஸ், கும்பகோணம்; iii. ஏப்ரல், 1918; iv. உ. ப. 29; v. 21×14 செ. மீ.; vi. 0–12–0; vii. கல்விச் செல்வத் தால் விளையும் இன்பமே பல்வகை இன்பங்களையும் விட மேலானது என்பதைப் பற்றியும் காதலன் காதலி ஆகிய இருவரும் தம்முள் எல்லாவற்றிலும் ஒத்து வாழ்தலே மேன்மையானது என்பதைப் பற்றியும் எடுத்துக்கூறும் நாடக நூல் இது. கும்பகோணம் எ. சுந்தரேச சாஸ்திரி அவர்கள் இந்நூலுக்குப் பாராட்டுரை தந்துள்ளார். viii. 63/1918/II.

O31,2

கிருஷ்ணசாமி சர்மா

1876. i. துருவன்: முதற் பதிப்பு; ii. மேனேஜர், சுதேசமித் திரன் ஆபீஸ், சென்னை; தாத்தா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. ஜனவரி, 1920; iv. உ. ப.+செ.மு.ப. 50; v. 19×13 செ. மீ.; vi. 0–5–0; vii. துருவனைக்குறித்த புராணக்கதை மூன்று அங்கங்களில் நாடகமாக்கித்தரப் பட்டுள்ளது. viii. 224/1920/II.

O31,2

கோபாலகிருஷ்ண பிள்ளை, ஸி., நாகை

1877. i. கண்ணகி: திருத்திய நான்காம் பதிப்பு; ii. லலிதா விலாச புத்தகசாலையார், சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1917; iv. உ. ப. 186; v. 19×13 செ.மீ.; vi. 0–14–0; சிலப்பதிகாரக் கதையான இதில் கண்ணகியின் சிறப்புப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம். நாடகக்கதைச் சுருக்கமும், பாத்திரப்பட்டியலும் இதில் தரப்பட்டுள்ளன. 'கண்ணகி அல்லது காதலிற் சிறந்த காரிகை' என்பது இதன் முழுப்பெயர். மணிமங்கலம் திருநாவுக்கரசு முதலியார் என்பார் இதற்கு 'நான்முகம்' எழுதியுள்ளார். viii. 529/1917/IV.

O31,2

கோபாலகிருஷ்ணய்யர், எம்.

1878. i. மௌன தேசிகர்: முதற் பதிப்பு; ii. எம். கோபால கிருஷ்ணய்யர், மதுரை; கிருஷ்ண விலாசம் பிரஸ், திருமங்கலம்; iii. 1918, iv. உ. ப. 28; v. 23×15 செ. மீ.; vi......; vii. இது ஒரு நகைச்சுவை நாடகமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. நாடகபாத்திரப்பட்டியல் நூல் முதலில் உண்டு. viii. 351/1910/I.

O31,2

1879. i. விசுவநாதன் அல்லது கடமை முரண்: முதற் பதிப்பு; ii. எம். கோபாலகிருஷ்ணையர், மதுரை; தமிழ்ச்சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. மார்ச், 1919; iv. செ. மூ. ப. 67; v. 18×12 செ. மீ.; vi. 0-8-0; vii. இது ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம். அரசன் கட்டளையை நிறைவேற்ற வேண்டும், அப்படி நிறைவேற்றுவதாயிருந்தால் தன் தந்தையை எதிர்த்துப் போர் புரிந்தாகவேண்டும். இந்நிலையில் தந்தையுடன் போராடி வெற்றியும் கண்டு, தந்தையின் உயிருக்கு ஊறு நேராவண்ணம் அரசனிடம் உயிர்ப்பிச்சையும் பெற்ற ஒரு தனயனது வீர சரிதம் இது. viii. 18/1919/II.

O31,2

சண்முக முதலியார், க.

1880. i. ஜெய சேனு: முதற் பதிப்பு; ii. எம். வ. சுப்பிரமணிய முதலியார்; மனோன்மணி விலாசம் பிரஸ், சென்னை; iii. அக்டோபர் 1920; iv. உ. ப. 36; v. 21×14 செ.மீ.; vi. 0-6-0; vii. ஜெயசேனு என்ற பெண்ணின் தீரச்செயல் களைப் பற்றியும், அவள் காதலித்த காதலனையே மணமுடிக் கின்ற நிகழ்ச்சியினையும் மூன்று அங்கங்களாக அமைத்து எழுதப்பெற்ற நாடகமாகும் இது. viii. 233/1920/IV.

O31,2

சம்பந்த செட்டி, ஜி. வி.

1881. i. சாவித்திரி: திருத்திய இரண்டாம் பதிப்பு, ii. ஜி. வி. சம்பந்த செட்டி; கபாலி பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ ப. 76; v. 21×14 செ. மீ.; vi. 0-8-0; vii. புராணக் கதையாகிய சாவித்திரி என்னும் கற்புக்கரசி வரலாறு நாடகஉருவமாக விளக்கப்பட்டுள்ளது. மூன்று அங்கங் கள் கொண்ட சிறு நாடகம். இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்ற மற்ற தமிழ் நாடகங்கள் கீசகன், உத்தரை, சுனந்தனி முதலியனவாம். viii. 376/1916/III.

O31,2

1882. ருக்மணி கல்யாணம்—பாகம் 1: முதற் பதிப்பு; ii. எஸ். மூர்த்தி அண்டு கம்பெனி. சென்னை; கபாலி அச்சுயந்திர சாலை, சென்னை; iii. அக்டோபர், 1917; iv. உ. ப. 16; v. 22×14 செ. மீ.; vi. 0-12-0; vii. கிருஷ்ணன் ருக்மணியை மணந்த புராணக் கதை இந்நூலில் நாடகமாகத் தரப்பட்டுள்ளது நாடகப் பாத்திரப்பட்டியல் ஒன்றும் உண்டு. மூன்று அங்கங்களில் அமைந்தது இந்நாடகம். "கிருஷ்ண லீலை" என்னும் தொடரில் இது முதற்பாகம் ஆகும். viii. 358/1917/IV.

O31,2

கோமளத்தம்மாள்

1985. i. காமதேனுவின் சரித்திரம்; ii. கோமளத்தம்மாள்; சுதேசி பிரஸ், கும்பகோணம்; iii. 1916; iv. செ. மூ. எ. 192; v. 21×14 செ. மீ.; vi. 0—2—0; vii. பாகவதத்திலுள்ள காமதேனுவின் சரித்திரத்தைக் கூறுவது; அம்மானைப்பாடல் அமைப்பில் உள்ளது. இச்சரித்திரம் பாகவதத்தில் எட்டாவது ஸ்கந்தத்தில் உள்ளது. viii. 850/1916/I.

O31,3

சண்முக சுந்தர முதலியார், ம. (தொ. து.)

1986. i. செய்யுட் கதைகள்: முதற் பதிப்பு; ii. ம. சண்முக சுந்தர முதலியார், சென்னை; பி. ஆர். ராம அய்யர் கம்பெனி, சென்னை; iii. ஜூலை, 1920; iv. உ. ப. 137; v. 19×13 செ. மீ.; vi. 0—12—0; vii. இஃது உயர்தரப்–பள்ளிகளுக்கேற்ற தமிழ்க் கட்டுரைப் பயிற்சி நூல். பலதரப்பட்ட நூல்களிலிருந்து தொகுக்கப்பெற்ற செய்யுட் கதைகள் இதில் அடங்கியுள்ளன. viii. 266/1920/III.

O31,3

சபாபதி பிள்ளை, வெ. நா., விஜயபுரம்

1987. i. பக்காத் திருடன் பாட்டு; ii. கு. ஆ. கிருஷ்ணசாமி முதலியார்; இராஜராஜேஸ்வரி பிரஸ், கும்பகோணம்; iii. 1916; iv. செ. மூ. ப. 10; v. 21×14 செ. மீ.; vi. 0—2—0; vii. சதார திருப்புகழ் காவடிச் சிந்து மெட்டில் அமைந்தது. திருடன் தன் சாமர்த்தியத்தை வெளியிடும்படியாக அமைந்த நூல். இப்பாடல்கள் நடராஜாச்சாரி என்பாரால் பாடிப் பிரசித்தி பெற்றனவாம். ஒரு சில காதற் பாட்டுகளும் இதில் உள. viii. 590/1916/III.

O31,3

சாமி நாயுடு, எம்., தாராபுரம்

1988. i. மறையவன் மகளை மகமதியனுக்கு விற்ற இன்பரச அலங்காரம்: முதற் பாகம்; ii. விக்டோரியா பிரஸ், பாலக்காடு; iii. 1920; iv. செ. மூ. ப. 8; v. 22×14 செ. மீ.; vi. 0—0—6; vii. மறையவனொருவன் பணத்தாசை காரணமாகத் தன் மகளை ஒரு மகமதியனுக்கு விற்ற செய்தியை வர்ணித்துக்கூறும் பாடல்களைக் கொண்டது இந்நூல். viii. 232/1920/I.

O31,3

**சாலமோன் மேஷாக், சென்னை**

1989. i. பகவத் பரீக்ஷை அல்லது சிரோபெனீக்யாளாகிய நீதிபதி சரித்திரம்: முதற் பதிப்பு; ii. மேஷாக் சாலமேன், சென்னை; ஹோகார்த் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1918; iv. செ. மூ. ப. 35; v. 18×13 செ. மீ.; vi. இலவசம்; vii. இயேசு கிறித்துவுக்கும் அவருடைய சீடரான ஜுடாஸுக்கும் நடந்த உரையாடல் பற்றிய செய்திகள் பாடல்கள் மூலமாக விளக்கப்பட்டுள்ளன. மயிலாப்பூர்ச் சபையில் இச் சரித்திரம் காலட்சேபமாக உரைக்கப் பெற்றதாம். தமிழிசை பற்றி முகவுரையில் சில செய்திகளை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். viii. 952/1919/I.

O31,3

1990. i. **சாவித்திரி பாடம்:** திருந்திய நான்காம் பதிப்பு; ii. ஆர். எஸ். சுப்புலக்ஷ்மி அம்மாள், சென்னை; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1919; iv. செ. மூ. எ. 295; v. 21×14 செ. மீ.; vi. 0—1—6; vii. இதில் சத்தியவான் சாவித்திரி கதை பாடல்கள் மூலம் விளக்கப் பட்டுள்ளது. சாவித்திரி செய்த கௌரி பூஜையே பங்குனி முதல்நாள் கொண்டாடப்பெறும் 'காரடையான் நோன்பு' என்று குறிக்கப்பட்டிருக்கிறது. பாடல்களின் இடையிடையே தக்க தலைப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1056/1919/III.

O31,3

**சீனிவாசக நாடார், கே. எஸ். கீளக்கடையம்**

1991. பொன்னிறத்தம்மன் அந்தாதி—முதற்பாகம்: முதற் பதிப்பு: ii. சிவனு பாண்டிய நாடார், அம்பாசமுத்திரம்; கோமாதி விலாசம் பிரஸ், தென்காசி; iii. ஜூன், 1918; iv. செ. மூ. ப. 39; v. 20×14 செ.மீ; vi. 0—3—0; vii. இதில் உள்ள பாடல்கள் அந்தாதித் தொடையாக அமையவில்லையெனினும் இந்நூலுக்குப் பொன்னிறத்தம்மான் அந்தாதி எனப் பெயரிடப்பட்டுள்ளது. வடுகர் குலத்தில் தோன்றிப் புகழ்பட வாழ்ந்த பொன்னிறத்தம்மையின்மேற் பாடப்பட்ட ஒரு போற்றிப் பாமாலையாகும். இந்நூல் அம்பா சமுத்திரம் சிவனு நாடாரால் பரிசோதிக்கப் பெற்று திருமலையப்புரம் சங்கரலிங்க ஆசிரியரவர்களின் பொருளுதவி யால் அச்சிடப் பெற்றது. viii. 112/1918/III.

O31,3

1992 i. **சுந்தரர் வேடுபறி;** ii. ஸ்ரீ வித்தியா விநோதினி பிரஸ் தஞ்சாவூர்; iii. 1916; iv. செ. மூ. ப. 135; v. 21×14 செ. மீ.; vi............; vii. **சுந்தரமூர்த்தி**

நாயனார் சேரமான் பெருமாள் நாயனாரிடத்தில் பெற்றுக் கொண்டு வந்த செல்வங்களை வழியில் திருமுருகன் பூண்டி என்னும் தலத்தில் பறிமுதல் செய்தனர். அப்பொழுது சுந்தரர் திருமுருகன்பூண்டியில் உள்ள சிவபெருமானை வணங்கி, அந்தச் செல்வங்களை மீண்டும் பெற்றனர். இந் நிகழ்ச்சியைக் கலிவெண்பாவினால் தருகிறது இந்நூல். viii. 193/1916/IV. O31,3

**சுப்புலக்ஷ்மி அம்மாள், ஆர். எஸ்., சென்னை**

1993. i. குசலவ வாக்கியம் : ஐந்தாம் பதிப்பு; ii. இ. இராமசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1919 ; iv. செ. மூ. எ. 870 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—3—6 ; vii. இராமனுடைய பிள்ளைகளான இலவ குசன் ஆகியவர்களின் வரலாற்றினை மக்களுக்கு எளிதில் புரியும் வண்ணம் நாட்டுப்பாடலில் எழுதப் பட்டுள்ளது. இராமாயண உத்தர காண்டம் முழுமையும் இதில் விளக்கப்பட்டுள்ளது. இந்தக் குசலவ வாக்கியம் என்பது நமது தமிழ்நாட்டுப் பெண்களால் வெகுகாலமாய்க் கர்ணபரம்பரையாகச் சொல்லிக்கொண்டு வரப்பட்டது என்றும் இந்நூலாசிரியர் இதனைச் செப்பஞ் செய்து வெளியிட்டதாகவும் தெரியவருகின்றது. வால்மீகி இராமாயணப் பாட்டொன்றும் இவ்வாசிரியையால் செப்பஞ் செய்து வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது. viii. 916/1919/I.

O31,3

**திருவடிதாசர்**

1994. i. கஜேந்திர மோட்சம் : முதற் பதிப்பு ; ii. எஸ். சிவசங்கர செட்டியார், சென்னை ; மதராஸ் ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1919 ; iv. செ. மூ. எ. 118; v. 16×12 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. இது திருவடி தாசர் அருளிச்செய்த கஜேந்திர மோக்ஷம் என்னும் கவிதை நூல். அறுசீர், எழுசீர் ஆசிரியவிருத்தங்களால் ஆனது. இதில் செய்யுள் முதற்குறிப்பகராதியும் சரித்திரச் சுருக்கமும் அடங்கியுள்ளன. viii. 571/1919/IV.

O31,3

**நமச்சிவாய முதலியார், கா.**

1995. i. செய்யுளில் கதைகள்: திருத்திய பதிப்பு; ii. வி குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1917; iv. செ.எ.உ.எ. 76+35; v. 18×13 செ.மீ.; vi. 0—6—0; vii. இந்நூலில் காணும் பேராசைப் பேயன், குணவான் தன் குற்றம் உணர்வான் இரு கதைகளும் 'செய்யுட் கதைகள்' என்னும் நூலினின்று எடுக்கப்

பெற்றவை. 'லோயர் எலிமெண்டரி கிரேட்' தேர்வுக்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு பாட்டிற்கும் அருஞ்சொற் குறிப்புக்கள் உள்ளன. viii. 1168/1917/III.

O31,3

1996. i. பொற்கைப் பாண்டியன்: முதற் பதிப்பு; ii. சி. குமார சாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1918; iv. செ.மூ.எ. 39; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. இந்நூலில் பொற்கைப் பாண்டியனைப் பற்றிய கதை, வெண்பா வடிவில் விவரிக்கப் பட்டுள்ளது. எளிய இனிய ஐம்பத்திரண்டு வெண்பாக்களா லாகியது இந்நூல். viii. 972/1918/I.

O31,3

**நாராயணியம்மாள், அ.**

1997. i. கௌரியம்மையார் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. செல்லப்ப முதலியார், சென்னை; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1917; iv. செ.மூ.எ. 11+3+32; v. 18×11 செ.மீ.; vi. இலவசம்; vii. திருவிளையாடற் புராணத்தில் விவரிக்கப்பட்டுள்ள சிவ பக்தையான கௌரி யம்மையைப் பற்றி எழுதப் பெற்ற சிறு சரித்திர நூல். அகிலாண்ட நாயகியம்மாள், ஜெயலட்சுமியம்மாள் முதலியோர் சாற்றுக்கவிகள் பாடியுள்ளனர். viii. 1027/1917/I.

O31,3

**பகவந்தராவ், வி.**

1998. i. துரை ஜான் கில்பின் கதை: முதற் பதிப்பு; ii. வி. பகவந்தராவ், தஞ்சாவூர்; கமர்ஷியல் பிரஸ், தஞ்சாவூர்; iii. பிப்ரவரி, 1920; iv. உ.ப.+செ.மூ.ப. 30; v. 15×11 செ.மீ.; vi. 0—1—6; vii. கூப்பர் என்பவர் இயற்றிய 'ஜான் கில்பின்' என்ற நூலின் தமிழாக்கமே இச்சிறு வெளியீடு. viii. 830/1920/III.

O31,3

**பத்மாசனி அம்மாள், இராமநாதபுரம்**

1999. அனுசூயை சரித்திரக் கும்மி [கோராக்கும்பர் சரித்திரக் கும்மி]: முதற் பதிப்பு; ii. பத்மாசனி அம்மாள், இராமநாத புரம்; இலட்சுமி விலாசம் பிரஸ், இராமனுதபுரம். iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.ப. 19; v. 21×16 செ.மீ.; vi. 0—2—0; vii. அனுசூயையின் சரித்திரத்தைப் பற்றியும் சிறப்பைப் பற்றியும் கூறுகிறது. 23 கட்டங்களாகப் பகுத்து இச்சரித்திரம் தரப்பட்டுள்ளது. viii. 146/1917/I.

O31,3

i. கோராக்கும்பர் சரித்திரம் (தொ.எ.1999 பார்க்க): முதற் பதிப்பு; ii. பத்மாசனி அம்மாள், இராமநாதபுரம்; இலட்சுமி விலாசம் பிரஸ், இராமநாதபுரம்; iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.ப. 4; v....; vi....; vii. கோராகும்பர் என்ற பக்தரைப் பற்றியது இந்நூல். ஏழு கட்டங்களாகப் பகுத்து இச்சரித்திரத்தை அமைத்துள்ளார். viii. 146/1917/I.

O31,3

**பத்மாசனி அம்மாள், கண்ணனூர்**

2000. i. பிரகலாத சரித்திரம்: முதற் பதிப்பு; ii. பத்மாசனி அம்மாள், கண்ணனூர்; டைமண்ட் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. செ.மூ.ப. 31; v. 21×14 செ. மீ. vi. 0—6—0; vii. பாகவதத்தில் வரும் பிரகலாதன் என்னும் திருமால் பக்தனின் கதை கீர்த்தனை வடிவில் விளக்கப்பட்டுள்ளது. 45 கட்டங்களாகப் பாகுபடுத்தி இக்கதை அமைக்கப்பட்டிருக்கிறது. viii. 691/1920/III.

O31,3

**பார்த்தசாரதி நாயுடு, ஆ. சி. சு., சிதம்பரம்**

2001. i. இராமாயணத் திருப்புகழ்—முதற்பாகம்: முதற் பதிப்பு ii. ஸ்ரீரஞ்சன விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. செ. மூ. எ. 48; v. 21×14 செ.மீ.; vi. 0—2—0; vii. இராமாயணக் கதை காவடிச் சிந்துப் பாடல்களில் விளக்கப்பட்டுள்ளது. இங்கே திருப்புகழ் என்றது இராமாயணத்தின் பெருமையைக் குறித்ததாகும். விருத்தம், கீர்த்தனை முதலிய சந்த முறையிலும் பாடல்கள் உள. viii. 251/1917/IV.

O31,3

**புகழேந்திப் புலவர்**

i. ஏணியேற்றம் (தொ. எ. 748 பார்க்க); ii. டைமண்ட் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1920; iv. செ.மூ.ப. 90; v. 19×13 செ.மீ.; vi. 1—0—0; vii. கிராம வாழ்க்கையில் இது போன்ற கதைப் பாட்டுக்களை அவசியம் படித்தல் வேண்டும் என்று காட்டும்பொருட்டு இது கொடுக்கப்பட்டுள்ளது. திருத்திய முறையில் பதிப்பிடப் பெற்றிருக்கிறது. viii. 815/1920/III.

O31,3

2002. i. கோவிலன் கதை: புதிய பதிப்பு; ii. தங்கவேலு முதலியார், பூவிருந்தமல்லி; சங்க நிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. செ. மூ. ப. 84; v. 21×14 செ.மீ.; vi. 0—2—0; vii. சிலப்பதிகாரத்திற்

காண்பதற்குச் சற்று மாறுபட்ட முறையில் கோவலன், கண்ணகி, மாதவி முதலியோர் வரலாறு அம்மானை நடையில் வரையப்பட்டுள்ளது.
viii. 57/1918/IV.

O31,3

2003. i. நல்ல தங்காள் கதை: முதற் பதிப்பு; ii. கோபால கிருஷ்ணகோனார்; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை; iii. ஏப்ரல், 1917; iv. செ.மூ.ப. 55; v. 21×14 செ.மீ.; vi. 0—3—0; vii. நல்லதங்காளின் வாழ்க்கை செய்யுள் வடிவமாக அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. இந்நூலினைப் பாடினார் புகழேந்திப் புலவர் என்பதற்குரிய ஆதாரங்கள் எதுவுமில்லை. பிற்காலத்து வந்த புலவர் ஒருவரால் பாடப்பட்டிருக்கலாமென ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். கதைப்போக்கினை விளக்கும் தலைப்புக்கள் இடையிடையே உள. viii. 310/1918/II.

O31,3

2004. i. நல்லதங்காள் கதை: முதற் பதிப்பு; ii. தங்கவேலு முதலியார், பூவிருந்தமல்லி; சங்கநிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை; iii. ஏப்ரல், 1919; iv. செ.மூ.ப. 48; v. 21×13 செ.மீ.; vi. 0—2—0; vii....; viii. 921/1919/IV.

O31,3

2005. i. பஞ்ச பாண்டவர் வனவாசம்: முதற்பதிப்பு; ii. இ. மா. கோபால கிருஷ்ண கோனார், மதுரை; எக்ஸெல்சியர் பிரஸ், மதுரை; iii. ஏப்ரல், 1918; iv. செ.மூ.ப. 260; v. 22×15 செ.மீ.; vi. 0—12—0; vii. பஞ்ச பாண்டவர் வனவாசம் செய்யுள் வடிவமாக இந்நூலில் கூறப்பட்டுள்ளது. படங்களுடன் கூடியது. இந்நூலாசிரியர் புகழேந்திப் புலவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நளவெண்பாப் பாடிய புகழேந்திப் புலவரும் இந்நூலாசிரியரும் ஒருவரா என்பது ஆராய்ச்சிக்குரியது. viii. 311/1918/II.

O31,3

**லக்ஷ்மி அம்மாள், தி.**

2006. i. காவேரி உற்பத்தியும் கல்யாண வைபவமும் அடங்கிய சரித்திரம்: முதற் பதிப்பு; கிருஷ்ண விலாஸ் அச்சுக்கூடம், திருப்பாதிரிப்புலியூர்; iii. ஜனவரி, 1916; iv. செ.மூ.ப 24; 22×14 செ.மீ; v. .......... ; vi ..... ; vii. காவேரித்தாயின் பிறப்பு, வளர்ப்பு, திருமணம், வாழ்க்கை ஆகியவை பாடல்கள் மூலமாக இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. இசைக்கீர்த்தனைக் கவிகளால் அமைந்த நூல். viii. 1042/1916/III.

O31,3

**வாலாம்பாள், எஸ்.**

2007. i. மகா பாரத வாக்கியம்: முதற் பதிப்பு; ii. ஆர். எஸ். சுப்பலக்ஷிமி அம்மாள், சென்னை; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. 1916; iv. செ.மூ.ப 188; v. 21×14 செ.மீ.; vi. 0–10–0; vii. பாரதத்திலுள்ள விராட பர்வம், உத்தியோக பர்வம் ஆகிய இரண்டு பர்வமும் பாட்டு வடிவில் விளக்கப்பட்டிருக்கின்றன. அம்மானை வடிவில் அமைந்தது இந்தப் பாடல். பாடலின் பொருட் போக்கிற்கு ஏற்ப இடையிடையே தக்க தலைப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இதனை அச்சேற்றி வெளியிட்டவர் நூலாசிரியையின் மகள் ஆர்.எஸ். சுப்புலக்ஷ்மி அம்மாள் ஆவர்; viii. 265/1916/II.

O31,3

**வையப்ப ரெட்டியார், எஸ். சுந்தரேஸ்வரபுரம்**

2008. i. சீதா கல்யாண மங்களம்: முதற் பதிப்பு; ii. எஸ். வையப்ப ரெட்டியார், சுந்தரேஸ்வரபுரம்; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1916; iv. செ. மூ. எ. 153; v. 21×14 செ. மீ.; vi. 0–4–0; vii. இராமனுக்கும் சீதைக்கும் நடந்த திருமண விழாவை விளக்கும் பாட்டு வடிவ மாக அமைந்த கதை. வால்மீகி, கம்பர் ஆகியோர் தந்த பெருங் காவியங்களைக் கற்று அனுபவிக்கும் திறனிலாரும் எளிதாக உணர்ந்து மகிழும் வண்ணம் இந்நூலை ஆக்கி யுள்ளார். viii. 358/1916/II.

O31,3

## 894·8113 கதைகள், நவீனங்கள்

**அரங்கசாமி நாயுடு, தி., காஞ்சிபுரம்**

2009. i. தலைவெட்டி தயாபர சுந்தரி: முதற் பதிப்பு; ii. என். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை; பி. ஆர். ராமய்யர் கம்பெனி, சென்னை; iii. மார்ச், 1920; iv. உ. ப. 260; v. 19×13 செ.மீ.; vi. 0–12–0; vii. ஓர் அரச குமாரி தான் கேட்கும் கேள்விகளுக்குப் பதிலளிப்பவனையே மணம் செய்வதென்றும் பதிலளிக்காதவன் தலையை வெட்டிவிடுவது என்றும் சபதம் செய்கிறாள். அதன்படி பலரை வெட்டி விடுகின்றாள். முடிவில் அவள் தோல்வியடைவதைக் காட்டும் ஓர் அழகிய புதினம் இது. viii. 36/1920/II.

O31,3

2010. i. தாலி கட்டித் தடுமாறின தளபதி: இரண்டாம் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை; ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. ஜுன், 1920;

iv. உ. ப. 159 ; v. 19×13 செ.மீ.; vi. 0-8-0; vii. மிருத்தியு தேவதையின் சரித்திரம் முதலியன விளக்கப்பட்டுள்ளன. சாதகம் பொய்யாகாதென்பதும், ஊழ்வினையையொட்டிப்பயன்கள் அனுபவிக்கவேண்டி வருகிறதென்பதும் இக்கதையின் முழுப் பிழிவாகும். பூவை, கலியாணசுந்தர முதலியார், காஞ்சீபுரம் பச்சையப்ப முதலியார் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் தி. க. வேலுசாமிப் பிள்ளை முதலியோர் தந்த சாத்துக் கவிகளுடன் கூடியது. viii. 140/1920/II.

O31,3

**2011.** i. பூபாலன் புவன சுந்தரி: முதற் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை ; ஆட்லிட் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1918 ; iv. உ. ப. 128 ; v. 18×13 செ. மீ.; vi. 0-6-0 ; vii. இது ஓர் இனிய செந்தமிழ்ப் புதினம். ஸ்ரீராமபராக்கிரமம், தனபதி, வாயாடிவம்பன் முதலிய நாவல்கள் இந்நூலாசிரியரால் எழுதப்பட்டன. இந் நூலை ஆசிரியர் எழுதியதன் நோக்கம் படிப்போரை நன்னெறிக்கண் செலுத்துவதேயென முகவுரையில் குறிப் பிடப்பட்டுள்ளது. இது பதினொரு அத்தியாயங்கள் கொண்டது. viii. 867/1918/II.

O31,3

**2012.** i. பூபாலன் புவன சுந்தரி: இரண்டாம் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை ; ஸ்ரீ பாரதி அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1920 ; iv. உ. ப. 124 ; v. 18×12 செ. மீ.; vi. 0-6-0 ; vii.........; viii. 825/1920/IV.

O31,3

**2013.** i. ராம பராக்கிரமம்: இரண்டாம் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை ; ஆட்லிட் அச்சியந்திர சாலை, சென்னை ; iii அக்டோபர், 1918 ; iv. உ. ப. 124 ; v. 19×12 செ. மீ.; vi. 0-6-0 ; vii. இராமருடைய பராக்கிர மத்தையே சற்று விவரித்து, மாருதியின் பெருமைகளையும் சேர்த்துத் தெள்ளிய உரை நடையில் பெண்கள், சிறுவர்கள் முதல் யாவரும் எளிதில் படித்துத் தெரியக்கூடிய வகை யில் எழுதப்பட்ட புத்தகமாகும் இது. நாலாயிரப் பிரபந்தம், கம்பராமாயணம், பாகவத புராணம் ஆகியவைகளிலிருந்து சில மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. இராம சரிதத்தின் சுருக்கமாக அமைந்துள்ளது இந்நூல். viii. 327/1918/IV.

O 31,3

2014. i. வாயாடி வம்பன்: முதற் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை; ஆட்லிட் அச்சியந்திரசாலை, சென்னை; iii. மே, 1918; iv. உ. ப. 76; v. 18×13 செ. மீ.; vi. 0-4-0; vii. இது ஓயாத நகைப்பைத் தரும் ஓர் இனிய செந்தமிழ் நாவல். மேலும் அரிய நீதிகளையும், கற்பின் மேன்மையையும், பிறர்மனை நயவாமை, காதல், களவுருடல், கள்ளுண்ணல், பொய் மொழிதல், ஈதல் மறுத்தல் போன்ற வைகளைச் செவ்வனே விளக்குகிறது. பல நூல்களினின்றும் செய்யுட்கள் மேற்கோள்களாக இந்நூலில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. viii. 534/1918/II.

O31,3

2015. i. வாயாடி வம்பன்: இரண்டாம் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை; ஸன் ஆப் இந்தியா அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1919; iv. உ. ப. 76; v. 18×12 செ. மீ.; vi. 0-4-0; vii. ..........; viii. 1040/1920/I

O31,3

2016. i. வாயாடி வம்பன்: மூன்றும் பதிப்பு; ii. பாரதி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1920; iv. உ. ப. 72; v. 18×12 செ. மீ.; vi. 0-4-0; vii. ........; viii. 826/1920/IV.

O31,3

2017. i. அருணோதயம்: முதற் பதிப்பு; ii. சங்கை லாகோம்பு, திருச்சிராப்பள்ளி, செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. ஜூலை, 1920; iv. உ. ப. 36; v. 19×13 செ. மீ.; vi. 0-2-0; vii. இது உரோமன் கத்தோலிக்கக் கிருத்துவ சமயத்தை ஒட்டிய நூல். சமயக் கருத்துக்களை இருவர் வாழ்க்கையோடு இணைத்துக் கதை போல எழுதப்பட்டுள்ளது. viii. 561/1920/III.

O31,3

ஆராவமுது அய்யங்கார், டி. ஆர்.

2018. i. திலோத்தமை அல்லது கெடுவான் கேடு நினைப்பான்; ii. இராஜேஸ்வரம் முதலியார், பரங்கிமலை, கார்டியன் பிரஸ், சென்னை; iii. 1919; iv. உ. ப. 96; v. 19×13 செ. மீ.; vi. 0-8-0; vii. கெடுவான் கேடு நினைப்பான் என்னும் உண்மையினை விளக்கும் ஓர் இனிய தமிழ்ப் புதினம். viii. 182/1920/I

O31, 3

2019. i. தென்மலை பட்டி: முதற் பதிப்பு; ii. பிரிமியர் அச்சுக் கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. உ.ப. 175; v. 19×13 செ.மீ.; vi. 0-10-0; vii. தென்னிந்திய சமுதாய வாழ்க்கையைப்பற்றி விரிவாகக் கூறக் கூடிய ஓர்

இனிய தமிழ்ப் புதினம். இது டி. எஸ். சுப்பிரமணிய அய்யர் தந்த ஆங்கில முகவுரையுடன் கூடியது. கிராமிய வாழ்க்கை நிகழ்ச்சிகள் பல இடம் பெற்றுள்ளன. திருத்திய செம்மையான உரைநடையில் அமைந்துள்ளது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 743/1918/III.

O31,3

**2020.** i. ஜயதேவன்: முதற் பதிப்பு; ii. ஆர். சுப்ரமணிய அய்யர், சென்னை; மதுகரவேணி விலாசம் அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1917; iv. உ.ப. 130; v. 19×13 செ.மீ.; vi. 0—8—0; vii. இது ஒரு துப்பறியும் நவீனம். ஐந்து அத்தியாயங்களில் அமைந்தது. மதுகரவேணி விலாசம் புக் டிபோவில் வெளியிடப்பெற்ற வேறு பதிய நாவல்களின் பட்டியல் பின் அட்டையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. viii. 235/1917/IV.

O31,3

**2021.** i. ஆரிய சரித்திரம்; ii. கணேஷ் கம்பெனி, சென்னை, கேம்பிரிட்ஜ் பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ.ப. 64; v. 18×12 செ.மீ.; vi. 0—8—0; vii. இந்நூல் 1918-ஆம் வருடம் இண்டர்மீடியட் வகுப்பு மாணவர்களுக்கென்று எழுதப்பட்டது. இதில் சாவித்திரி சரிதம், சத்திய பரிபாலனம், பிரகலாத சரிதம், குசேலர் சரிதம் ஆகியவைகள் அடங்கியுள்ளன. viii. 618/1916/II.

O31,3

**ஆலென், ஜே. சி.**

**2022.** i. தென்னிந்தியக் கதைகள்—கிரேடு III: திருந்திய பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்ட் கோ., சென்னை, கபாலி பிரஸ், சென்னை; iii. மே, 1918; iv. உ.ப. 56; v. 18×13 செ.மீ.; vi. 0-3-6; vii. நீதிகளை விளக்கும் ஒன்பது சிறு கதைகள் அடங்கியுள்ளன. இப்புத்தகம் தென்னிந்தியாவில் உள்ள மக்களுக்கேற்ப எழுதப்பட்டதாகும். இவைகள் மக்களிடையே வாய்மொழியாக வழங்கி வரும் கதைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்றனவாம். viii. 661/1918/II.

O31,3

**ஆறுமுகஞ் சேர்வை, வீ., செம்பூர்**

**2023.** i. மலையை விழுங்கிய மகாதேவன் கதை, முதற்பாகம்; முதற் பதிப்பு; ii. தருமசிலன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1919; iv. உ.ப. 98; v. 15×12 செ.மீ.; vi. 0—6—0; vii. மக்களை ஏமாற்றிப் பிழைப்பவரின் போக்கினைக் கண்டித்து எழுதப்பட்ட ஒரு நகைச்சுவைக் கதையாகும்.



இக்கதையின் முதற்பாகம் மட்டும் இந்நூலில் வெளி வந்துள்ளது. உரைநடை பாத்திரங்களுக்கு ஏற்பத் தெளிவுற அமைக்கப்பட்டுள்ளது. viii. 808/1919/IV.

O31,3

2024. i. ஆனந்தக் கண்ணடி: திருத்திய பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1916; iv. உ.ப. 32; v. 19×13 செ.மீ.; vi. 0-1-0; vii. துப்பறியும் கதைகளான ஒன்பது விநோதக் கதைகளைக் கொண்டது இப்புத்தகம். கீழ் வகுப்பில் படிக்கும் மாணவர்களுக்கு வீட்டுப் பாடமாக வைக்கத்தக்கது இந்நூல். viii. 443/1916/IV.

O31,3

இராமச்சந்திரன், ஜி.

2025. i. துரியோதனன் மோஹம் முதற் பதிப்பு; ii. ஜி. இராமச்சந்திரன், கும்பகோணம்; ஆரியன் அச்சாபீஸ், கும்பகோணம்; iii. ஜூலை, 1917; iv. உ.ப. 100; v. 13×10 செ.மீ.; vi. 0—6—0; vii. ஆடவர் தங்கள் மோக வியாதியால் கற்புடைய மங்கையர்மீது இச்சைகொண்டு உலகப் பழிப்புக்காளாகாமல் இருப்பதைக் குறித்து புகழேந்திப் புலவர் இயற்றிய ஏணியேற்றமென்னும் ஒரு நூலினை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பெற்றது. viii. 194/1917/III.

O31,3

2026. i. விஷ ஸரஸ்: முதற் பதிப்பு; ii. டி. கிருஷ்ணசாமி அய்யர், கும்பகோணம்; கிருஷ்ண விலாச பிரஸ், கும்பகோணம்; iii. 1919; iv. உ.ப. 39; v. 16×11 செ.மீ.; vi. 0—4—0; vii. இதில் மகாபாரதத்தின் ஒரு கிளைக் கதை இடம் பெற்றுள்ளது. இது தரும புத்திரருடைய குணங்களைக் கூறுமுகத்தாற் பொறுமை, தன்மறுப்பு, சகோதர வாஞ்சை, உறுதியுடைமை, பரோபகாரம் ஆகிய குணங்களை விரித்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது. viii. 714/1920/I.

O31,3

இராமசுவாமி அய்யர், ஸி. எஸ்.

2027. i. இந்திய மாயா விநோதக் கதைகள்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்ட் கம்பெனி, சென்னை; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 80; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii. இந்திய மாயா விநோதக் கதைகள் ஐந்து இப்புத்தகத்தில் அடங்கியுள்ளன.

அவையாவன: இரண்டு இராஜ புத்திரிகள், லிங்கோவும் ராக்ஷதனும், மத்ஸ்யராஜன், பேசும் ஆமை, ஜோதிமதி என்பனவாம். பட விளக்கங்களும் உள்ளன. viii. 993/1919/I.

031,3

2028. i. குரு பக்தி: முதற் பதிப்பு; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காகஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1919; iv. உ.ப. 26; v. 18×13 செ.மீ., vi. 0-1-6; vii. இதில் பல நீதிகளைப் போதிக்கும் மூன்று சிறுகதைகள் அடங்கியுள்ளன. குரு பக்தியிற் சிறந்த உபமன்னியு, உதங்கன், ஏகலைவன் ஆகியோர் வரலாறு இதன்கண் தெளிந்த நடையில் விளக்கப்பட்டுள்ளன. viii. 810/1920/I.

031,3

இராமய்யா பிள்ளை, எம். எஸ். ஏ., திருநெல்வேலி

2029. i. ஜெக சுந்தரி: முதற் பதிப்பு; ii. எம். எஸ். ஏ. இராமய்யா பிள்ளை, திருநெல்வேலி; பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை; iii. செப்டம்பர், 1918; iv. உ.ப. 234; v. 18×13 செ.மீ.; vi. 0-12-0; vii. இஃது ஒரு காதல் புதினமாகும். சமூகத்தில் உள்ள பொது மகளிர் நடத்தை குறித்தும், அங்கு செல்லும் ஆடவர்களால் அவர்தம் குடும்பங்களுக்கு நேரும் இன்னல்கள் குறித்தும் விவரிக்கின்றது. இதில் சாதாரண வழக்குப் பேச்சு நடை பெரிதும் விரவி வருகின்றது. இருபத்து நான்கு அத்தியாயங்கள் கொண்டது. viii. 884/1918/III.

031,3

இராமலிங்க முதலியார், திருமயிலை

2030. i. அந்தப்புர ரகசியம் அல்லது இராஜேஸ்வரி: முதற் பதிப்பு; ii. எம். மாசிலாமணி முதலியார், சென்னை; அமெரிக்கன் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி; 1919; iv. உ.ப. 180; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0. vii. இந்நாவல் வங்க மூலக் கதையினைக் கொண்டது. கன்னட மொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மூன்று பாகங்களைக் கொண்டது. இதனைப் படிப்போர்க்குக் கற்பினேற்றம், சிநேக பாத்திரம், உபகாரச் சிந்தை தீக்குணத்தாலுண்டாம் தீமை, அன்பு, அடக்கம் முதலியன இனிது விளங்கும். தமிழ் நாட்டினர் வாழ்க்கைக்கு ஏற்ப மூலக் கதையினின்றும் ஒரு சில மாற்றங்களையும் ஆசிரியர் மேற்கொண்டுள்ளார். viii. 1134/1919/I.

031,3

2031. i. பங்கஜவல்லி கதை: திருத்திய பதிப்பு; ii. எஸ். பி; இராஜாராம், சென்னை; சன் ஆப இந்தியா பிரஸ், சென்னை. iii. ஏப்ரல், 1916; iv. உ.ப. 96; v. 21×14 செ.மீ.; vi. 0–8—0; vii. இளம் பெண் ஒருத்தி தன் கல்வி அறிவையும் கருதாது இளமையின் மோகத்தால் அடைந்த விபரீததத்தை விளக்குகின்ற கதையாகும் இந்நூல். 'படுக்கை யறையிற் பாசாங்கு செய்த பங்கஜவல்லி கதை' என்பது இதன் முழுப்பெயர். இதனை வாசிப்போர்க்கு உலக விவகாரத்திலும், சாஸ்திரக் கருத்திலும் தெளிவுண்டாக வேண்டும் என்னும் கருத்தால் இக்கதையில் பிரசங்கம் என்ற பகுதியில் பல செய்திகளை வெளியிட்டுள்ளார். viii. 7.8/1916/III.

O31,3

இராமஸ்வாமி அய்யர், எஸ். ஏ., மாயவரம்

2032. i. உட்டாணி அல்லது கற்பின் வெற்றி: முதற் பதிப்பு; ii. தி. இராஜேஸ்வரி முதலியார், ஆலந்தூர்; கபாலி அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜுன், 1918; iv. உ.ப. 80; v. 19×13 செ.மீ.; vi. 0-6-0; vii. பெண்ணினுடைய அன்பைப் பற்றியும் கற்பின் வெற்றியைப் பற்றியும் இந்தக் கதையில் சிறப்பாக எடுத்துச் சொல்லப்பட்டுள்ளன. ஆனந்த சுந்தரி, அமீர்ஸிங், லீலாவதி, பத்மநாபன்; சரஸா, சிவானந்தன், புருஷோத்தமன், மாலிகா பூஷணி, வத்சலா, வஸந்தசேனை முதலியபு தினங்கள் இவ்வாசிரியரால் எழுதப்பட்டன. viii. 10/1918/III.

O31,3

இராஜம் அய்யங்கார், எம் கே.

2033. i. மனோரஞ்சித மணி: முதற் பதிப்பு; ii. ஆர் வெங்கடாசலம் அண்டு கம்பெனியார், சென்னை; பி. ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி; சென்னை; iii. ஏப்ரல். 1918; iv. உ.ப. 90; v. 22×14 செ.மீ.; vi. 0-10-0. vii. பெண்களின் கற்பை அழிப்பதை எதிர்த்து எழுதப்பட்ட ஓர் அரிய துப்பறியும் நாவல். 17 அதி காரங்கள் கொண்டது. viii. 694/1918/II.

O31,3

இராஜு செட்டியார், செ

2034. i. அன்பானந்தன் அல்லது அருஞ்செல்வன் விழைந்த பெருஞ்செல்வம்; ii. செ. இராஜு செட்டியார், சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. மே, 1917; iv. உ.ப. 240; v. 18×13 செ.மீ.; vi. 1-0-0; vii. ஒரு செல்வந்தர், ஆத்ம செல்வத்தைத் தேடியதை ஒட்டி அமைந்த புதினம்.

ஆசிரியரின் புகைப் படமும், ஆண்டிப்பட்டி ஜமீந்தார் பெத்தாச்சி செட்டியாரின் புகைப்படமும் இதில் உள்ளன. எல்லாரிடத்தும் அன்பு பாராட்டி ஒற்றுமையுடன் மக்கள் வாழ அறிவுறுத்துவது. 22 அத்தியாயங்கள் கொண்டது. இவ்வாசிரியர் இந் நூலைத் தம் நட்பின் அறிகுறியாக ஆண்டிப்பட்டி ஜமீன்தார் பெத்தாச்சி செட்டியார் அவர்களுக்கு உரிமை செய்துள்ளார். இவர் எழுதிய வேறு நவீனங்களாவன: ஞான காந்தி, காதலி, குசாவதி என்பனவாம். viii. 623/1917/II.

O31,3

**2035.** i. **உதயணன்:** முதற் பதிப்பு; ii. தரும சீலன் ஆபீஸ், சென்னை; தரும சீலன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1920; iv. உ.ப. 86; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0; vii. உதயணன் கதையை விளக்குவதாகும் இந்நூல். படிப்பார்க்கு எளிதாக விளங்குவதோடு பண்டைக் காலத்தவரின் பழக்கவழக்கங்களையும், அரச நீதிகளையும், மந்திரிகளின் கடமைகளையும், குலமாதர் இலக்ஷணங்களையும், இல்லறவியல்புகளையும், துறவற மேன்மைகளையும் தெற்றென விளக்குகிறது. viii. 968/1920/IV.

O31,3

**உலகநாத பிள்ளை, எல்.**

**2036.** i. கன்றுங்கனியுதவும்: முதற் பதிப்பு; ii. எல். உலகநாத பிள்ளை, தஞ்சாவூர்; லாலி எலக்டிரிக் அச்சுக்கூடம், தஞ்சாவூர்; iii. ஜூலை, 1917; iv. உ.ப. 71.; v. 18×13 செ.மீ.; vi. 0-6–0; vii. இந்நூல் தமிழகக் கடையெழுவள்ளல்களில் ஒருவரான பாரி வள்ளலைப் பற்றிய கதை. பல எடுத்துக்காட்டுக் கவிதைகள் இடம் பெற்றுள்ளன. சிற்சில கிளைக் கதைகளும், நீதியும், பழைய வழக்க ஒழுக்கங்களும் பிறவும் இடையிடையே விரவி வரப் பெரும்பான்மையும் பிறசொற்கலவாமல் எழுதப் பெற்றது. கல்லூரியிற் பயிலும் மாணவர் பொருட்டாக எழுதப் பெற்றது இந்நூல். viii. 168/1917/III.

O31,3

**எக்ஞசாமி, எஸ்.**

**2037.** I. மூன்று சகோதரர்கள் அல்லது உழைப்பின் சிறப்பு: ii. எஸ். எக்ஞசாமி, சென்னை; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை; iii. மே, 1916; iv. உ.ப. 48; v. 99×13 செ.மீ.; vi. 0–4–0; vii. உழைப்பின் சிறப்பினைக் குறித்து எழுதப்பெற்ற கதை இந்நூலில்.

உள்ளது. 12 அத்தியாயங்களாகப் பாகுப்படுத்தப் பெற்றுள்ளது. குழந்தைகளுக்கான கதைகளின் வரிசை வெளியீட்டில் இது இரண்டாவதாகும். ஒவ்வோர் அத்தியாயத்தின் தொடக்கத்திலும் திருக்குறட் பாடல் ஒன்று பொருத்தமாக எடுத்துச் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 41/1917/III.

O31,3

2038. i. மூன்று சகோதரர்கள் அல்லது உழைப்பின் சிறப்பு ; திருத்திய பதிப்பு ; ii. எஸ். எக்ஞுசுவாமி, கும்பகோணம் ; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1917 ; iv. உ.ப. 52 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii.......... ; viii. 1141/1917/III.

O31,3

2039. i. லளிதா : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. எஸ். எக்ஞுசாமி, சென்னை ; சுதேசமித்திரன் பிரஸ், சென்னை ; iii. மே, 1916 ; iv. உ.ப. 48 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. 'பொறுத்தார் பூமி யாள்வார்' என்ற கருத்தினை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற கதையே இந்நூல். 12 அத்தியாயங்கள் கொண்டது. குழந்தைகளுக்கான கதைகளின் வரிசை வெளியீட்டில் இது முதலாவது புத்தகம் ஆகும். viii. 40/1917/III

O31,3

2040. i. லளிதா அல்லது பொறுத்தார் பூமியாள்வார். திருத்திய மூன்றும் பதிப்பு ; ii. எஸ். எக்ஞுசாமி, கும்பகோணம் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1917 ; iv. உ.ப. 50 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii.......... ; viii. 467/1918/II.

O31,3

2041. i. ஷராப்கான் : முதற் பதிப்பு ; ii. எஸ். எக்ஞுசாமி ; சென்னை ; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 39 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. குடியினால் வரும் கேட்டை விளக்கும் கதையை இந்நூல் கொண்டுள்ளது. 'ஷராப்கான் அல்லது குடியினால் வரும் கேடு' என்பது இதன் முழுப் பெயர். குழந்தைகளுக்கான கதை வரிசையில் இது மூன்றாவது வெளியீடாகும். viii. 42/1917/III.

O31,3

ஐயாசாமி, ப. வி., மதுரை

2042. i. கஜேந்திர மோட்சம் : முதற் பதிப்பு ; ii. ப.வி. ஐயாசாமி அய்யர், மதுரை ; தமிழ் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. செப்டெம்பர், 1918 ; iv. உ.ப. 16 ; v. 18×14 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. பாகவத புராணத்தில் காணப்படும் கஜேந்திர மோட்சம் என்ற பகுதியினை ஆசிரியர் அழகிய, இனிய, எளிய முறையில் உரைநடைப் படுத்தியுள்ளார். இது திருவடி தாசர் என்பார் இயற்றிய 'கஜேந்திர மோட்சம்' என்னும் செய்யுள் நூலின் வழி நூலாகும். 'சக்கர வர்த்தனி' என்னும் திங்கள் இதழில் முதலில் வெளியிடப்பட்டுப் பின்னர்த் தனி நூலாக அச்சிடப் பெற்றது. இது திராவிட வித்தியா மலரின் இரண்டாவது இதழாகும். viiii. 956/1918/III.

O31,3

கணேச முதலியார், பி., சென்னை

2043. i. வசீகரன் : முதற் பதிப்பு ; ii. பி. கணேச முதலியார், சென்னை ; ஜுபிடர் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. உ.ப. 196 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. இது பேராசையில் விளையும் தீமை, பெண்கள் கற்பைக் காத்துக் கொள்ளுந்திறமை, சிநேகத்தின் பெருமை, சிநேகிதனைப்போல் நடித்துப் பொருள் பறித்துண்ணும் துரோகியின் கொடுமை, முதலிய பல செய்திகளைத் தெளிவாய் எல்லோரு மறிந்துய்ய ஆன்றோர்களெழுதிய நூல்களிலுள்ள நல் வாக்கியங்களை யிடையிடையே அமைத்து எழுதப்பட்டுள்ள கதையாகும். 15 அத்தியாயங்கள் கொண்டது. "வசீகரன் அல்லது அடிமையால் அடைந்த அரசின் சுதந்திரம்" என்பது இந்நூலின் முழுப் பெயர். viii. 650/1919/IV.

O31,3

கணேசய்யர், கி. ரெ.

2044. i. ஸச்சிதானந்தம் ; ii. ப. லெ. வெங்கட்ராம சாஸ்திரி ; ஸ்காட்டிஷ் பிரான்சு பிரஸ், நாகப்பட்டினம் ; iii. 1919 ; iv. உ.ப. 58 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-6-0 ; vii. இஃதோர் இனிய தமிழ்ப் புதினம். பத்து அத்தியாயங்களில் அமைந்தது. கர்ண பரம் பரையாக வழங்கும் ஒரு பழங்கதையை அடியொற்றி யமைந்தது. viii. 320/1920/I.

O31,3

2045. i. **கதா கதம்பம்** ; ii. பெண்ட் லெண்ட் பிரஸ், திருநெல்வேலி பாலம் ; iii. 1916 ; iv. உ.ப. 30 ; v, 21×14 செ.மீ. ; vi.......... ; vii. உலக நடப்பான பல நிகழ்ச்சிகளைக் கதைபோலப் புனைந்து கூறுவது. இந்த நூலின் இரண்டாவது இதழ் அமைந்துள்ளது. **viii.** 133/1916/IV.

O31,3

2046. i. கதாசிந்தாமணி என்று வழங்கும் மரியாதை ராமன் கதை; ii. நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1916; iv. உ. ப. 88; v. 21×14 செ.மீ.; vi. 0-4-0; vii. மரியாதைராமன் கதை 21. இராயர் அப்பாஜி கதை 18, தென்னாலிராமன் கதை 19, கோமுட்டி கதை 12, வேடிக்கைக் கதைகள் 38, கட்டு வாக்கியக்கதைகள் 14, மூடர்கள் கதை 3 இத்தொகுதியில் உள. இறுதியில் அறிவுரைகளின் சிறு தொகுப்பு ஒன்றும் உண்டு. viii. 745/1917/III.

O31,3

2047. i. கதாமாலிகா: முதற் பதிப்பு; ii. சுதேசமித்திரன் ஆபீஸ்; சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ்; iii. நவம்பர், 1920; iv. உ. ப. 256; v. 16×11 செ. மீ.; vi. 1-0-0; vii. இது பல்வேறு செய்திகளைப்பற்றி விளக்கும் பல கதைகளைக் கொண்ட புத்தகமாகும், சி. சுப்பிரமணிய பாரதியார் பாடிய ஸரஸ்வதி தோத்திர நொண்டிச்சிந்து நூலின் முகப்பில் உண்டு. எல். சுந்திராம்பாள் எழுதிய 'நதியில் கப்பல் பிரயாணம்' டி. எஸ். வைத்தியநாதன் எழுதிய 'சந்நியாசிக் கலகம்' என்பவை தவிர ஏனையவை சி. சுப்பிரமணிய பாரதியாராலும், அவர் மனைவியார் செல்லம்மா என்பவராலும் எழுதப் பெற்றவைகளே. 'சக்திதாஸன்', 'காளிதாஸன்' என்னும் புனைப்பெயர்களில் பாரதியார் எழுதியவைகளை இதில் காணலாம். viii. 874/1920/IV.

O31,3

**கந்தசாமிபிள்ளை, கவிராஜ, மதுரை மாநகரம்**

2048. i. அதிரூப மோகனவல்லி; ii. எஸ். துரைசாமி முதலியார்; ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. உ.ப.76; v. 21×14 செ.மீ.; vi. 0-5-0, vii. நல்வினை தீவினை செய்தவர் அதனதன் பலனை அனுபவிப்பர் என்பதனை உட்பொருளாகக் கொண்டு அமைந்த புதிய கதை. பாடல்களும் இடம் நோக்கி இடையிடையே அமைக்கப்பட்டிருக்கின்றன. சாதாரண மக்களின் பேச்சுநடை இயல்பில் உரையாடல்கள் செல்கின்றன. viii. 245/1916/IV.

O31,3

2049. i. கீர்த்தி சிங்கனென்னும் கண்டிராஜன்: மூன்றும் பதிப்பு; ii. த. துரைசாமி முதலியார், சென்னை; அமெரிக்கன் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. 1919; iv. உ.ப. 131; v. 16×11 செ. மீ.; vi. 0-8-0; vii. இஃதோர் சிறந்த புதினம். முதற் பக்கத்தில் ஒரு படம் அமைந்துள்ளது. இது மூன்று அங்கங்களாகவும் அவற்றுள் ஒவ்வொன்றும் சில காட்சிகளாகவும் பாகுபடுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு காட்சியிலும் இடம்பெறும் கதாநாயகர்பற்றிய குறிப்புக்களும் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 2041/1920/I.

O31,3

2050. i. பூலோக இன்ப துன்பம்; ii. ஆர். கே. ராஜு அண்ட் கம்பெனி, சென்னை; ஸ்ரீ சுப்பிரமணிய விலாசம் பிரஸ், சென்னை ஸ்ரீ வேணுகானம் அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. உ. ப. 96; v. 21×14 செ. மீ.; vi. 0-6-0; vii. உலக நிகழ்ச்சிகள் பலவற்றைக் குட்டிக் கதைகளாகக் கூறும் நூல். நீதி நெறிகளைப் புலப்படுத்தும் பாடல்களும் அங்கங்கே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தத்துவச் செய்திகளும் ஒரு சில கதையிடையே விளக்கப்பட்டுள்ளன. அதர்மத்தின் அநீதி, சம்சார துன்பம், பெண்களால் பங்கமடைந்தவர், தாசியால் தனநாசம், மதுபானம் விலக்கல் என்பன போன்ற தலைப்புக்களில் கதைகளும் அறிவுரை விளக்கங்களும் தரப்பட்டுள்ளன. viii. 47/1916/IV.

O31,3

2051. i. விகட மோகனு: முதற் பதிப்பு; ii. என். ரங்கநாத முதலி, சென்னை; பெரியநாயகியம்மன் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1919; iv. உ. ப. 78; v. 21×14 செ. மீ.; vi. 0-8-0; vii. விகடமோகன என்பவள் தீய நட்புக் கொண்டதனுல் அடைந்த இன்னல்களை விளக்கி இறுதியில் அவள் காப்பாற்றப்படுகிற விதமும் கூறப்பட்டுள்ளது. வேடிக்கையான பலவகை உரையாடல்களும் நிகழ்ச்சிகளும் அடங்கிய கதை இதன்கண் உள. viii. 279/1919/III.

O31,3

2052. i. ஜகஜாலப் புரட்டன்: மூன்றும் பதிப்பு; ii. டி. ஆர். பாலகிருஷ்ண முதலியார்; ஸ்ரீ ராமாநுஜம் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1920; iv. உ. ப. 63; v. 18×13 செ.மீ. vi. 0-4-0; vii. ஜெகஜாலப்புரட்டன் என்பவனின் வாழ்க்கை வரலாற்றினையும், அவனுடைய அகடவிகட வேலைகளைப் பற்றியும் இந்நூல் விவரமாக விளக்குகின்றது. நல்லோர்போல் தோற்றமளித்து நயவஞ்சகம் புரியும் தீயவர்களிடம் கவனமாக நடந்து கொள்ள வேண்டும் என்பதனைக் கற்பனை உருவகக் கதைகள் மூலம் தெளிவு படுத்துகின்றார். viii. 278/1920/IV.

O31,3

2053. i. கற்பகச்சோலை; ii. அ. லெயுன் பிரேன்ஸ், காரைக்கால்; சேயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. 1917; iv. உ. ப. 87; v. 18×13 செ.மீ.; vi. ......; vii. பிரெஞ்சு மொழியில் அமைந்ததொரு நவீனக் கதையின் தமிழ் மொழிபெயர்ப்பு. மனமொத்த அன்புடைய மணமக்கள் விவாகம் செய்துகொண்டு சுகமாய் வாழ வழிகாட்டுவது. வெளி ஆடம்பரத்தை விட்டுப் பண்புடைமையைப் போற்றிப் பாராட்டுவது. viii. 699/1917/III.

O31,3

கஜாம்பாள்

2054. i. ஸ்ரீமதி அல்லது அம்பரீஷோபாக்கியானம்; திருத்தமான மூன்றும் பதிப்பு; ii. ஸ்ரீ பாலசுப்பிரமண்யம் கம்பெனி, இராயப்பேட்டை; சச்சிதானந்தம் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1917; iv. உ.ப.+செ.மூ.ப. 22+6; v. 18×12 செ.மீ., vi. 0-1-6; vii. இறைவன்பால் செலுத்தும் அன்பின் சிறப்பை இக்கதை விளக்குகிறது. 'பக்தி சந்திரிகா' என்னும் தொடர் வெளியீட்டில் இது முதலாவது ஆகும். அரும் பதங்களுக்கு உரைக்குறிப்பும் சேர்க்கப்பட்டிருக்கிறது. நூலிறுதிப் பகுதியில் வரகவி திரு. அ. சுப்பிரமணிய பாரதியார் இயற்றிய 30 பாடல்களைக் கொண்ட கற்பிலக்கணக் கும்மி என்னும் செய்யுள் நூலும் உளது. viii. 1071/1917/III.

031,8

கிருஷ்ணசாமி அய்யர்.

2055. i. கதையும் அபிநயப்பாட்டும்; முதற் பதிப்பு; ii. நீலகண்டம் புக் டிப்போ புரோப்ரைட்டர், கயத்தாறு; வெட்னெஸ்டே ரிவ்யு பிரஸ், திருச்சி; iii. ஜூலை, 1919; iv. உ.ப.+செ.மூ. ப. 23; v. 18×11 செ. மீ.; vi. 0-2-0; vii. இந்நூல் பெண் பாடசாலைகளின் சிறுமிகளுக்குப் பயன்படும்படியாக எழுதப்பட்டது; இடையிடையே பாட்டுக்கள் உள்ளன. இதில் உள்ள சிறு கதைகளும் பாட்டும் மாணவிகளுக்கு அறிவு புகட்டுவனவாயுள்ளன. viii. 473/1919/III.

O31,3

கிருஷ்ணசாமி சர்மா, ஆர்.

2056. i. மனோரமா; இரண்டாம் பதிப்பு; ஆர். கே. சர்மா, சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. உ. ப. 110; v, 18×13 செ. மீ.; vi. 0-8-0; vii. இது ஒரு துப்பறியும் புதினம்; பெரும்பகுதி நாடக பாணியில் அமைந்துள்ளது. இக்கதைக்கு 'ஆநந்த குடீர அதிசயங்கள்' என்னும் பெயர் உண்டு. viii. 755/1917/IV.

O31,3

**கிருஷ்ணசாமிபாவலர், தே. சதாவதானம்**

2057. i. பதிவிரதைகள் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடாசலம் அண்டு கம்பெனி, சென்னை; டைமண்ட், பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1919; iv. உ. ப. 124; v. 19×13 செ. மீ.; vi. 0-8-0; vii. பாரதம் இராமாயணம், பாகவதம் போன்ற கதைகளில் வரும் சில பதிவிரதைகளின் கதைகள் தொகுத்து இந்நூலில் வெளியிடப்பட்டிருக்கிறது. 16 கதைகள் அடங்கியுள்ளன. viii. 542/1919/II.

O31,3

2058. i. மனம் போல மாங்கல்யம்; முதற் பதிப்பு; ii. பி.வி. கண்ணன் கம்பெனியார், சென்னை; டைமண்ட் பிரஸ் சென்னை; iii. ஜூலை, 1920; iv. உ. ப. 44; v. 19×13 செ. மீ.; vi. 0-4-0; vii. இதில் தன்மனம் விரும்பியவனையே மாலையிட்டு மணந்த மங்கையைப் பற்றிய கதை அடங்கியுள்ளது. viii. 370/1920/III.

O31,3

2059. i. கிருஷ்ண பகவானுடைய இளம்பருவம்: இரண்டாம் பதிப்பு; ii. லாங்ஸ்மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி, சென்னை; ஜி. ஆர். வி. சென்னை.; iii. ஆகஸ்ட், 1918; iv. உ. ப. 35, v. 18×13 செ. மீ.; vi. 0-3-0 vii. கண்ணனின் இளம்பருவ வாழ்க்கையினைக் குறித்து உரைநடையில் எழுதப்பட்டுள்ளது. இராட்சசனைக் கொல்லுதல், கம்சனை அழித்தல், காளியன் என்கிற நாகத்தின் கொடிய நஞ்சை அழித்தல் போன்ற நிகழ்ச்சிகள் இங்கு கூறப்பட்டுள்ளன. பட விளக்கங்களும் தரப்பட்டுள்ளன. viii. 940/1918/III.

O31,3

**கிருஷ்ணமாசாரியார், பு., கடாம்பி**

2060. i. கிருஷ்ண விஜயம் அல்லது அரசியல் வெற்றி; முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடாசலம் கம்பெனி, சென்னை; டயமண்ட் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1920; iv. உ. ப. 202; v. 18×13 செ. மீ.; vi. 1-0-0; vii. இதில் மகாபாரதத்தில் வரும் கண்ணன் என்ற பாத்திரம் குறித்து விவரமாக கூறப்பட்டுள்ளது. பாண்டவர்களோடும். கௌரவர்களோடும் கண்ணன் கொண்ட தொடர்பு முக்கிய இடம் பெற்றுள்ளது. மகாபாரத நிகழ்ச்சிகளைத் தழுவி எழுதப்பட்டது. viii. 32/1920/III.

031,3

2061. i. பதிவிரதாலங்காரம்—சுகன்யா சரித்திரம்: முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடாசலம் அண்டு கம்பெனியார், சென்னை; மதறாஸ் டைமண்டு பிரஸ், திருவல்லிக்கேணி. சென்னை; iii. எப்ரல், 1919; iv. உ. ப. v. 36; v. 18×13 செ.மீ.; vi. 0—3—0; vii. புராணத்தில் வரும் சியவன என்ற முனிவரின் மனைவியான சுகன்யாவின் கற்பின் பெருமை இதில் விளக்கப்பட்டுள்ளது. இந்நூலின் இறுதியில் கற்பின் மாண்பு என்ற தலைப்பில் பத்துச் செய்யுட்கள் காணப்படுகின்றன. அவைகள் வேறு நூல்களிலிருந்து எடுக்கப்பட்டன. அரும்பதவுரை ஈற்றில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 79/1919/II.

031,3

2062. i. மனோன்மணி: முதற் பதிப்பு; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1916; iv. உ. ப. 71; v. 18×12 செ.மீ.; vi. 0—3—0; vii. பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றிய மனோன்மணிய நாடகத்தினை உரைநடையாகப் பதினைந்து அத்தியாயங்களாகப் பிரித்து இந்நூலில் ஆசிரியர் எழுதியுள்ளார். முதனூலிலிருந்தும் ஏனைய நீதி நூல்களிலிருந்தும் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது. இடையிடையே காணப்படும் கடினமான பதங்களுக்கும் தொடர்மொழிகளுக்கும் பொருள் இனிது விளங்குமாறு அரும்பதவுரையும் இந்நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 450/1916/IV.

O31,3

கிருஷ்ணசாரியார், டி. ஆர்.-(மொ.து.)

i. அமிருத மதனம் (தொ. எ. 206 பார்க்க): முதற் பதிப்பு; ii. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரி & டி. ஆர். கிருஷ்ணசாரியார்; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1917; iv. உ. ப. 23; vii. தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அமிர்தத்தைக் குறித்து ஏற்பட்ட சண்டையின் முடிவில் பாற்கடலைக் கடைந்து அமுதத்தைத் தேவர்கள் பெற்ற கதையை இந்நூலில் காணலாம். viii. 245/1917/II.

O31,3

2063. i. சித்திர கேது: முதற் பதிப்பு; ii. டி.ஆர். கிருஷ்ணசாரியார் & வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரி, சென்னை கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1917; iv. உ.ப. 23; v. 18×12 செ.மீ. vi. 0-2-0; vii. பாகவதத்திலிருந்து எழுதப்பட்ட நீதியும், வைராக்கியமும் விளங்குகின்ற கதை; இது வடமொழி பாகவத புராணத்திலிருந்து மொழிபெயர்த்து அமைக்கப் பெற்றது. viii. 244/1917/II.

O31,3

2064. i. பாரிஜாதாபஹரணம் — அமிருதமதனம்: முதற் பதிப்பு, ii. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரி & டி. ஆர். கிருஷ்ணசாரியர்; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1917; iv. உ.ப. 39; v. 18×13 செ. மீ.; vi. 0—4—0; viii. சத்தியபாமாவின் விருப்பத்திற்கிணங்க கண்ணன் பாரிஜாத மரத்தைக் கொண்டுவந்த புராணக் கதை இதில் உள்ளது. பாகவதம் முதலிய புராணங்களிலிருந்து எடுத்தெழுதப்பெற்றது. viii. 245/1917/II.

031,3

2065. i. ஸீமந்தினி: முதற்பதிப்பு; ii. டி. ஆர். கிருஷ்ணசாரியார், சென்னை & வை.மு. கோபாலகிருஷ்ணமாசாரியார், சென்னை; கமர்ஷியல் பிரஸ்; சென்னை; iii. எப்ரல், 1917; iv. உ. ப. 36; v. 18×13 செ. மீ.; 0-2-0; vii. இது சிவசக்தியின் பக்தையான சீமந்தினி என்னும் அரசகுமாரியைப் பற்றியது. ஸ்கந்த புராணம் முதலியவற்றிலிருந்து எடுக்கப்பெற்றது. கதைப்போக்கினை விளக்கும் சிறுதலைப்புகள் இடையிடையே உள. viii. 885/1917/II.

O31,3

குப்புசாமிமுதலியார், ஆரணி

2066. i. கற்கோட்டை: இரண்டாம் பதிப்பு; ii. நா. முனிசாமி முதலியார், சென்னை; ஆனந்தபோதினி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1919; iv. உ. ப. 528; v. 18×13 செ.மீ.; vi. 1-12-0; vii. 'ஒருவர் ஒரு பெரிய குற்றத்தைச் செய்துவிட்டால், அதை மறைப்பதற்காகப் பின்னால் அதிலும் பெரும்பாலான பல குற்றங்களைச் செய்யவேண்டியவராகிறார்' என்ற கருத்தினை உள்ளடக்கிய ஓர் உயர்ந்த கதையாகும் இது. ஆங்கில முறையினைப் பின்பற்றி இக்கதை எழுதப் பட்டுள்ளது. ஆனந்தபோதினிப் பத்திரிகையில் தொடர்ச்சி யாக வெளியிடப்பெற்றுப் பின் புத்தக வடிவு பெற்றது. இதில் வரும் கதா பாத்திரம் ஒவ்வொன்றும் உலக வாழ்க்கைக்கு அவசியமான ஒரு நீதியைப் புலப்படுத்து வதாக அமைந்துள்ளது. viii. 971/1919/IV.

O31,3

2067. i. தாக்ஷாயணி அல்லது காதலன் வெற்றி: இரண்டாம் பதிப்பு; ii. தி. இராஜேஸ்வரம் முதலியார், சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. 1919; iv. உ.ப. 99; v. 18×13 செ.மீ.; vi. 0-6-0.; vii. இஃதோர் இனிய துப்பறியும் புதினம். எட்டு அத்தியாயங்களில் அமைந்துள்ளது. viii. 184/1920/I.

O31,3

2068. i, பூங்கோதை: முதற்பதிப்பு; ii. நா. முனிசாமி முதலியார், சென்னை ஆனந்தபோதினி பிரஸ், சென்னை; iii, மார்ச், 1920; iv. உ.ப. 162; v. 19×13 செ.மீ,; vi. 0-10-0; vii. ஆங்கில மூலத்தினின்று எடுத்து எழுதப் பெற்ற ஒரு நவீனம். சத்தியத்தையும் நீதியையும் பொறுமையையும் கடைப்பிடித்துப் பரம்பொருளை நம்பி வாழ்வோர் நலம் பெறுவர் என்பதனை இக்கதை விளக்கும். viii 194/1920/II.

O31,3

குப்புசாமி முதலியார், சி.நா.

2069. i. தங்கவேணி: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. தி. அரங்கசாமி நாயுடு, காஞ்சிபுரம் & துரைசாமி முதலியார், சூளை; ஆட்லிட் அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1918; iv. உ.ப. 68; v. 18×13 செ.மீ., vi. 0-4-0; vii. இக்காலப் புதிய நாகரிகத்துக்குத் தக்கப்படி நல்ல எளிய தமிழ் நடையில் எழுதியதோடல்லாமல் பல நூல் களினின்றும் மேற்கோள்களாகப் பல செய்யுள்களையும் ஆசிரியர் கையாண்டிருக்கிறார். இதில் கற்பின் மேன்மையைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இனிய செந்தமிழ் நாவல்கள் என்னும் தலைப்பில் சில நாவல்களைப்பற்றிய சிறு குறிப்பு களும் நூலிறுதியில் உள. viii. 796/1918/II.

O31,3

2070. i. மதியானந்தவல்லி என்னும் அற்புத நவநீதாம்பை: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், நாகவேடு; ஆனந்தபோதினி அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1919; iv. உ.ப. 247; v. 21×14 செ.மீ.; vi. 1-0-0; vii. ஒரு பெண் தன் சாகசத்தாலும் புத்திக்கூர்மையாலும் நேர்ந்த இன்னல்களைக் கடந்து இறுதியில் வெற்றியடைந்ததை விளக்கும் கதை இது. மக்களுக்கு நல்லறிவு உண்டாக்கும் நோக்கத்துடன் இக்கதை எழுதப்பெற்றது. viii. 206/1919/III.

O31,3

குமாரசுவாமிப் பிள்ளை, அ.

2071. i. இதோபதேசம்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமிநாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. எப்ரல், 1920; iv. உ.ப. 98; v. 19×13 செ.மீ.; vi. 0-8-0; vii. இது சுன்னாகம் அ. நாகநாதபண்டிதர் மொழிபெயர்ப்பினின்று அ. குமாரசுவாமிப்பிள்ளையால் சுருக்கி இயற்றப்பெற்றது. இதோபதேசம் வடமொழியில வல்லுநராய் விளங்கிய விட்டுணு சர்மா என்ற

வேதியர் சுதர்சனன் என்னும் அரசனுடைய குமாரனுக்கு அரசியலுணருமாறு உபதேசிக்கப் பட்ட நீதி சுலோகங்களும் அவற்றிற்கியைந்த கதைகளும் அமைந்த நூல். viii. 317/1920/II.

O31,3

**கேதாரிராவ், என். ஆர். (மொ.து.)**

**2072.** i. சுகிர்லாபம் அல்லது நட்பின் மேன்மை: முதற் பதிப்பு ; ii. கல்வி பப்ளிஷிங் ஹவுஸ், மதுரை ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. ஜனவரி, 1919 ; iv. உ. ப. 14 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. சுகிர்லாபம் அல்லது நட்பின் மேன்மை ஆகியவற்றை விளக்கும் மூன்று மொழி பெயர்ப்புக் கதைகள் இப்புத்தகத்தில அடங்கியுள்ளன. இக்கதை பஞ்ச தந்திர நூலிலிருந்து எடுக்கப் பெற்றது, 'கல்வி மாலை' வரிசையில் இது ஐந்தாவது வெளியீடு. viii. 589/1919/I.

O31,3

**கோபால கிருஷ்ண ஐயர், வி.ஏ.**

**2073.** i. குணசீலன்: திருத்திய மூன்றும் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கோ., திருவல்லிக்கேணி, சென்னை ; சிவரகசியம் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1917 ; iv. உ. ப. 120 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. குணசீலன், சாந்தை இவர்களின் வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள நிகழ்ச்சியினைப் பற்றியும், நல்லொழுக்கத்தைப் பற்றியும் ஆசிரியர் மிகவும் நல்ல முறையில் விளக்கியுள்ளார். 25 அத்தியாயங்கள் கொண்டது. தமிழ்த் தோன்றல் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்களின் சிறப்புரையுடன் கூடியது. இச் சிறப்புரையில் புதுமையான கதை வெளியீடுகளின் அக்கால நிலை பற்றிய ஒரு சில குறிப்புகளையும் சுட்டியுள்ளார். viii. 931/1918/II.

O31,3

**கோபால கிருஷ்ணமாசாரியர், வை. மு.**

**2074.** i. இந்திய புராதன கதைகள்: முதற் பதிப்பு ; ii. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியர், சென்னை ; கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1917 ; iv. உ. ப. 88 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. இந்நூலில் இந்தியப் புராதனக் கதைகள் இடம் பெற்றுள்ளன. வீரவரன், பாடலி புத்திரம், சிருங்க புரன், சீமூத வாகனன், கடல் வீரன் ஆகிய ஐந்து கதைகள் உண்டு. viii. 1019/1917/II.

O31,3

2075. i. இந்திய புராதனக் கதைகள்: திருத்திய மூன்றும் பதிப்பு; ii. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார், சென்னை; கமர்ஷியல் பிரஸ், சென்னை, iii. ஜூலை, 1918; iv. உ. ப. 88; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. இராஜ விசுவாசம், நீதி, கற்பு, தேசபக்தி, கடவுள் பற்று போன்ற நற்போதனைகளை இக்கதைகளில் காணலாம். 1919 ஆம் ஆண்டு இந்நூல் பள்ளியிறுதித் தேர்வுக் குரியப் பாட புத்தகமாக இருந்தது. viii. 426/1918/III.

O31,3

**கோபாலசாமி ஐயங்கார், ஆ. & ஆராவமுத ஐயங்கார், கோ.**

2076. i. நந்தன்: முதற் பதிப்பு; ii. ஸ்ரீநிவாஸ வரதாச்சாரி அண்டு கோ., சென்னை; iii. ஆகஸ்ட் 1917; iv. உ. ப. 124; v. 18×12 செ.மீ.; vi. 0–10–0; vii. இந்நூல் ஆதி திராவிட வகுப்பைச் சேர்ந்த நந்தன் என்ற சிவபக்தனைப் பற்றி விவரிக்கின்றது. பக்தி நெறியின் மேன்மையை விளக்குவது இச்சரிதம். கோபாலகிருஷ்ண பாரதியார் பாடியுள்ள நந்தன் சரித்திரக் கீர்த்தனைகளிலிருந்து சிற்சில கீர்த்தனைகளையும் இதில் எடுத்தாண்டுள்ளார். தவிரவும் கதைப் போக்கும் இக்கீர்த்தனை நூலைத் தழுவியே அமைக்கப் பட்டிருக்கிறது. viii. 1062/1917/III

O31,3

**கோபாலசாரியர், கா., ஸ்ரீ.**

2077. i. குணமணி: முதற் பதிப்பு; ii. எம். ஆதி அண்டு கோ; சென்னை; சந்திரா பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1920; iv. உ. ப 95; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0; vii. ஒரு மன்னன் குடிகளிடம் எந்த விதத்தில் நடந்து கொள்ள வேண்டு மென்பதை விளக்கும் கதை இதில் அடங்கியுள்ளது. viii. 300/1920/III.

O31,3

2078. i. தேவ மணி: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1918; iv. உ. ப. 207; v. 18×13 செ.மீ.; vi. 0–14–0; vii. இது ஒரு மொழி பெயர்ப்புக் கதையாகும். ராவ்ஸாகெப் தோட்டக்காடு இராமகிருஷ்ண பிள்ளை என்பார் எழுதிய தி டைவ் பார் டெத் (The Dive for Death) என்னும் ஆங்கில நூலே இதற்கு மூலமாகும். மூந்நாறு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த ஒரு செய்தியை முக்கிய ஆதாரமாகக் கொண்டு இந்நூலைப் பிள்ளையவர்கள் 1911 ஆம் ஆண்டு வெளியிட்டனர். அக்காலத்தில் வாழ்ந்த மக்களது வாழ்க்கை நிலைமையை இதன் மூலம் நாம் நன்கு அறியலாம். படிப்போர்க்கு நல்லுணர்வையும், நல்லொழுக்கங்களையும் இக்கதை அளிக்கின்றது. 19 அதிகாரங்கள் கொண்டது. ஆங்காங்கு

உயர்ந்த மேற்கோள்களும் பழமொழிகளும் சில திரி சொற்களும் காட்டப்பட்டுள்ளன. அரும்பதவுரை செய்யுட் குறிப்புரைகளும் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 52/1919/I.

O31,3

**கோவிந்த அய்யங்கார், ஈ. எஸ்.**

2079. i. புஷ்ப வல்லி : முதற் பதிப்பு ; ii. ஆர். எம். வி. வி. ராமகிருஷ்ண அய்யர் & கோ., உசிலம்பட்டி ; ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸ், திருமங்கலம் ; iii. மே, 1920 ; iv. உ. ப. 28; v. 21×14 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. புஷ்பவல்லி என்னும் ஓர் அரச குமாரியை அடைய வேண்டி இரு வீரர்கள் போரிட்டு இறுதியில் போரில் தோற்ற வீரனே அவளையடைந்த கதை இதில் விவரிக்கப்பட்டுள்ளது. viii. 71/1920/III.

O31,3

**கோவிந்தசாமி படையாச்சி, கே. ஆர். & சிவப்பிரகாச படையாச்சி, பி.ஏ.**

2080. i. பூலோக ரோஜா : முதற் பதிப்பு ; ii. எஸ். மாணிக்கம் பிள்ளை, சிதம்பரம் ; ஆரியன் பிரஸ், கும்பகோணம் ; iii. ஜுன், 1920 ; iv. உ. ப. 113 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. இது ஓர் இளவரசனின் வீரத்தைப் பின்னணியாகக் கொண்டு அமைந்த புதினம். viii. 853/1920/II.

O31,3

**கோவிந்தசாமி பிள்ளை, வே. ந.**

2081: i நீல ரேகை ; ii. வே. ர. வெங்கடாசல முதலியார் ; ஜுபிலி பிரஸ், வேலூர் ; iii. 1920 ; iv. உ. ப. 248 ; v. 18×13 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இதில் ஒரு துப்பறியும் நவீனம் அடங்கியுள்ளது. இது, பண ஆசையால் உண்டாகும் தீங்குகளும் தீயர் கூட்டுறவால் ஏற்படும் துயரங்களும், குற்றம் புரிபவர் முடிவில் தண்டனை பெறுதலுமாகிய செய்திகளை விளக்குகிறது. viii. 676/1920/III.

O31,3

**கோவிந்தரெட்டி, நா., வேலூர்**

2082. i. சிறுவர்களுக்குரிய 50 சிறு கதைகள் : முதற் பதிப்பு ; ii. தாம்ஸன் கம்பெனி, சென்னை ; மினர்வா அச்சுக் கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. உ. ப. 23 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. ஈசாப் கதைகளிலிருந்து எடுக்கப்பெற்ற 50 சிறுகதைகள் இதில் அடங்கியுள்ளன. சிறுகதைகள் மூலமாகச் சிறுவர்களுக்குப் புத்தி கற்பிப்பது மிக எளிது என்பதை விளக்கும் வகையில் இதிலுள்ள கதைகள் அமைந்துள்ளன. viii. 429/1920/I.

O31,3

**சங்கரலிங்கம் பிள்ளை, அ.**

2083. i. சுந்தரன்: திருத்திய பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு & சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1917; iv. உ. ப. 240; v. 19×13 செ.மீ.; vi. 0-12-0; vii. திருமணம் செய்வது பற்றி நம் நாட்டுப் பெண்களுக்குத் தரத்தக்க சுதந்திரம் பற்றி விளக்கும் வகையில் அமைந்த கதையைக் கொண்டதே இந்நூல். நமது நாட்டுப் பெண்கள் ஐரோப்பிய நாட்டுப் பெண்களைப் போல உரிமை பெற்றவர்களாய் நடக்கும் வண்ணம் நமது ஆசாரங்களைத் திருத்த வேண்டும் என்று இவ்வாசிரியர் கருதுகிறார். viii. 638/1917/III.

**O31,3**

**சடகோபாச்சாரியர், எம். ஏ., கும்பகோணம்**

2084. i. கீர்வாணி: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. எம். ஏ. சடகோபாச்சாரி, கும்பகோணம்; லக்ஷ்மி விலாஸ அச்சாபீஸ், கும்பகோணம்; iii. மார்ச், 1917; iv. உ. ப. 61; v. 21×14 செ. மீ.; vi. 0-6-0; vii. இந்நூல் பெண்களுக்கு நல்ல குணங்கள் அமைவதற்கான பழக்கங்கள், கல்வி இவைகளின் அவசியத்தை வலியுறுத்தும் கதையைக் கொண்டது. பெண்டிர் இசை, கல்வி என்னும் இரண்டினை மட்டும் பெற்றால் போதாது. குணம், சீலம், தர்மம், தயாளம், கற்பு, வணக்கம் முதலிய குணங்களையும் உடையராயிருத்தல் வேண்டும் என்பதனை எடுத்துக் கூறுவது. viii. 1177/1917/I.

**O31,3**

2085. i. லக்ஷ்மி காந்தன்: முதற் பதிப்பு; ii. எம். ஏ. சடகோபாச்சாரி; கும்பகோணம்; லக்ஷ்மி விலாச பிரஸ், கும்பகோணம்; iii. 1917; iv. உ. ப. 192; v. 18×13 செ. மீ.; vi. 0-12-0; vii. 'வினையிட்டோன் வினையறுப்பான், தினையிட்டோன் தினையறுப்பான்' என்ற பழமொழியை வலியுறுத்தும் வகையில் அமைந்த ஒரு புதினம். வடமொழிக் கலப்பும், எழுத்துப்பிழையும் மலிந்துள்ளன. தமிழை ஜீரணோத்தாரணம் பண்ணவேணும் என்பதே தமது நோக்கம் என முகவுரையில் குறிப்பிடுகிறார். இன்னும் இவர் வனரோஜா, மோஹனலீலா, ஸுமதி, கீர்வாணி, வனமல்லிகா, தனஞ்செயன், சந்தனுவதி, ஸுலோச்சனு உபாக்கியானம், காலவரிஷி, மிதுலா, வாஸந்திகா முதலிய நூல்களையும் வெளியிட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. viii. 557/1918/I.

**O31,3**

2086. i. வனமல்லிகா: முதற் பதிப்பு; ii. எம். ஏ. சடகோபாலாச்சாரி, கும்பகோணம்; லக்ஷ்மி விலாச பிரஸ், கும்பகோணம்; iii. ஜுலை, 1917; iv. உ. ப. 136; v. 19×13 செ. மீ.; vi. 0–10–0; vii. கற்பு நெறி தவறுவதால் ஏற்படும் இழுக்குகளைக் குறித்தும், இன்னல்களைக் குறித்தும் எழுதப்பெற்ற துப்பறியும் கதை. viii. 203/1917/III.

O31,3

2087. i. வனரோஜா; திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. எம். ஏ. சடகோபாச்சாரியர், கும்பகோணம்; லக்ஷ்மி விலாச பிரஸ், கும்பகோணம்; iii. 1916; iv. உ. ப. 152; v. 21×14 செ. மீ.; vi. 0–12–0; vii. இது ஒரு துப்பறியும் புதினம். இதில் கல்வியின் மதிப்பும், பெண்ணின் கற்பும் பற்றிக் கூறப்படுகின்றன. சிற்சில தமிழ் நூல்களிலிருந்து சிறந்த நெறிகளை உணர்த்தும் பாடல்களை அங்கங்கே எடுத்தாண்டுள்ளார். ஒரு சில படங்களும் இடம் பெற்றுள்ளன. viii. 434/1916/III.

O31,3

**சண்முக சுந்தரம் பிள்ளை, டி. வி., திருநெல்வேலி**

2088. i. மதுசூதனன்: முதற் பதிப்பு; ii. எஸ். கோபால் பிள்ளை; ஸ்ரீராமச்சந்திர விலாஸ் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1915; iv. உ. ப. 84; v. 22×14 செ. மீ.; vi. 0–8–0; vii. மாணவ மாணவிகளுக்குக் கல்வியினால் ஆய பயனை விளக்குவது. இல்லறத்தார்க்கும் பயன்படுமாறு பற்பல செய்திகள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. பெண் கல்வியின் இன்றியமையாமையை இந்நவீனம் நன்கு விளக்குகிறது. கணபதியாபிள்ளை, மு. வ. கலியாணசுந்தரம் பிள்ளை, சுந்தரமாணிக்கம் பிள்ளை என்னும் மூவரும் இதற்குச் சாற்றுகவி பாடியுள்ளனர். viii. 26/1916/I.

O31,3

**சண்முகசுந்தர முதலியார், ம.**

2089. i. பொறாமைப்பேய்: முதற் பதிப்பு; ii. பி. ஆர். ராமய்யர் & கோ., சென்னை; iii. ஜுன், 1920; iv. உ. ப. 63; v. 19×13 செ. மீ., vi. 0–6–0; vii. பொறாமையினால் வரும் கேடு பற்றி விளக்கப்பட்டுள்ள கதை. viii. 265/1920/III.

O31,3

**சர்வ கோபால பிள்ளை, தி.**

2090. நவீன சம்பாஷணை பாட்டுக் கதைகள்—முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. வ. குமாரசாமி அண்டு கோ., திண்டிவனம்; iii. 1916; iv. உ. ப.+செ. மூ. ப. 12; v. 21×14 செ. மீ.; vi. 0–1–0; vii. வினாவிடை முறையில் உரையாடலாகப் பாட்டும், உரை நடையுமாக அமைந்தது. முதலாவது இரண்டாவது வகுப்புகளுக்குப் பயனுள்ளது. viii. 154/1916/IV.

**O31,3**

**சாமிநாத முதலியார், பி.**

2091. i. வாமாக்ஷி அல்லது வெண்கலைக் கோதை—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. பி. ஆர். ராமய்யர் அண்டு கோ., சென்னை; iii. மார்ச், 1920; iv. உ. ப. 277; v. 19×13 செ. மீ.; vi. 1–0–0; vii. உண்மைக்காதலின் சிறப்பு பற்றிக் கூறப்பட்டுள்ளது. இந்நூல் இக்கதையின் இரண்டாம் பாகம். 25 ஆம் அத்தியாயம் முதல் 41 ஆவது அத்தியாயம் வரை நூல் முடிய உள்ளது. viii. 37/1920/II.

**O31,3**

**சிதம்பர புன்னைவனநாத முதலியார், பு.**

2092. i. அற்புதக் கணையாழி; ii. பி. நா. சிதம்பர முதலியார், மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாஸம் அச்சியந்திர சாலை, மதுரை; iii. ஜூன், 1918; iv. உ. ப. 48; v. 18×13 செ. மீ.; vi. 0–5–0; vii. வங்காள மூலக் கதை ஆங்கிலத்தில் (Two Rings) 'இரட்டைக் கணையாழி' என்று எழுதப்பட்டதிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. இப்புத்தகம் 7, 8, 9 ஆவது வகுப்பு மாணவர் களுக்குத் துணைப்பாடப் புத்தகமாக வைக்கக்கூடிய தகுதி யுள்ளதென்பதை முகவுரையில் காணலாம். சில அபிப் பிராயங்கள் என்ற தலைப்பில் மதுரை அமெரிக்கன் மிஷன் உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் ஆ. ப. முத்துசாமிக் கவுண்டர் முதலிய சில அன்பர்கள் இந்நூலைப் பாராட்டியுள்ளனர். இவ்வாசிரியர் 'பாண்டிய நேசன்' என ஒரு பத்திரிகை நடத்தியதாகவும் தெரிய வருகிறது. viii. 942/1918/II.

**O31,3**

2093. i. கங்காபாய் சுயம்வரம்; முதற் பதிப்பு; ii. பி. என். சிதம்பர முதலியார் கம்பெனி, மதுரை; மீனாட்சி விலாஸ் பிரஸ், மதுரை; iii. ஜூலை, 1919; iv. உ. ப. 39; v. 18×23

நிகழ்ச்சிகளை விளக்கும் ஒரு கிருத்துவக் கதையாகும் இது. முதல் பாகம் மட்டும் இதில் உள்ளது. ரோமன் கத்தோலிக்கர், புரொடெஸ்டண்டுகள் ஆகியோரின் வழிபாட்டு முறை, மதப்பிரச்சாரம் பற்றிய செயல்களை விவரிப்பது. நூலிறுதியில் ரோமன் கத்தோலிக்க மதச்சார்புடைய சில நூல்களைப் பற்றிய விவரங்கள் உள. viii. 186/1919/I.

O31,3

**ரங்கராஜா, ஜே. ஆர்.**

2209. i. ஆநந்த கிருஷ்ணன்: நான்காம் பதிப்பு; ii. ஜே. ஆர். ரங்கராஜா, சென்னை; ஜஸ்டிஸ் பிரிண்டிங் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1917; iv. உ.ப. 172; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இது கெட்ட எண்ணம் கொண்டுள்ள ஒரு பெண்ணின் நடவடிக்கைகளைப் பற்றிய ஒரு துப்பு அறியும் இனிய தமிழ்ப் புதினம். இல்லற வாழ்க்கைக்கு வேண்டிய அறவொழுக்கங்கள் பற்றியும், குறிப்பாக மகளிர்க்குரிய பண்பு நலன்கள் பற்றியும் கூறப்பட்டுள்ளன. மூன்று படங்கள் இப்புத்தகத்தில் வரும் முக்கிய நிகழ்ச்சிகளைச் சுட்டிக் காட்டுகின்றன. இவ்வாசிரியரால் எழுதப்பட்ட வேறு புதினங்கள்: சந்திரகாந்தா, மோஹன சுந்தரம் முதலியன. viii. 334/1918/IV.

O31,3

2210. i. ஆநந்த கிருஷ்ணன்: திருத்திய ஐந்தாம் பதிப்பு; ii. டிரஸ்டீஸ், ரங்கராஜூ நாவல் அக்கௌண்ட் பண்டு, சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. 1919; iv.....; v......; vi...... ;vii......; viii. 309/1919/II.

O31,3

2211. i. இராஜேந்திரன்: மூன்றும் பதிப்பு; ii. ரங்கராஜூ அண்டு பிரதர்ஸ், சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1920; iv. உ.ப. 216; v. 22×14 செ.மீ.; vi. 1–0–0; vii. இது ஒரு துப்பறியும் நாவல். வரதட்சணையின் கொடுமையால் பெண்கள் எவ்வாறு தம் கற்பையும் பறிகொடுக்க நேரிடுகின்றது என்பது மிகவும் தெளிவாக இந்நூலில் கூறப்பட்டுள்ளது. viii. 408/1920/III.

O31,3

2212. i. மோஹன சுந்தரம்: எட்டாம் பதிப்பு; ii. ரங்கராஜாவின் நாவல் கணக்கு பண்டின் டிரஸ்டிகள்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1920; iv. உ.ப. 168; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இது ஒரு துப்பறியும் இனிய தமிழ்ப் புதினம். மூன்று படங்களுடன் கூடியது. viii. 366/1920/IV.

O31,3

2213. i. ரஞ்சித்சிங் ; ii. வி. குமாரசுவாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1914 ; iv. உ.ப. 238 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. கொள்ளைக் கூட்டத்தையொழித்த ஒரு வீரனின் தீரச்செயலை விளக்குவது. இப்பதிப்பகத்தார் வெளியிட்டுள்ள தமிழ் நவீன கதைகளின் பட்டியல் ஒன்று நூலிறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 842/1916/I.

O31,3

**ரவீந்திரநாதர்**

2214. i. ரவீந்திரநாதர் சிறுகதைகள் : முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி 1919; iv. உ.ப. 48; v. 19×13 செ.மீ; vi. 0–4–0; vii. வங்கக் கவிஞன் தாகூர் எழுதிய கதையின் மொழிபெயர்ப்பாகும் இந்நூல். தாகூர் அவர்களின் நிழற்படம் இதில் உண்டு. வங்க மூலத்திலிருந்து தமிழில் இதனை மொழிபெயர்த்தவர் ரா. ராஜசூடாமணியாவர். 'கண் பார்வை' என்னும் கதைமட்டும் இதில் உளது. தாகூரின் வரலாறும் பிற சிறப்புக்களும் குறித்து மொழிபெயர்ப்பாசிரியர் முகவுரையில் விளக்கியுள்ளார். viii. 1054/1919/I.

O31,3

**ராகவாசாரி, ஆர்.**

2215. i. விஜயபாலன் : முதற் பதிப்பு ; ii. ஆர். ராகவாசாரி, தஞ்சாவூர் ; வர்த்தக மித்திரன் பிரஸ், தஞ்சாவூர் ; iii. டிசம்பர், 1917 ; iv. உ. ப. 112 ; v. 16×12 செ. மீ. ; vi. 0—6—0 ; vii. குடும்பத்தில் அன்றாடம் நடக்கும் தொல்லைகளைக் கூறி பொதுவான முன்னேற்றத்திற்கு அவசியமான கல்வியின் சிறப்பையும் குறிப்பிடுகிறது இப்புதினம். viii. 251/1918/I.

O31,3

**ராமச்சந்திரன், பி.**

2216. i. ராஜபுத்திர ரத்தினம் : முதற் பதிப்பு ; ii. வி. சூ. நடராஜன், மதுரை ; எக்ஸெல்சியர் பிரஸ், மதுரை ; iii. செப்டம்பர், 1919 ; iv. உ. ப. 55 ; v. 16×11 செ. மீ.; vi. 0—5—0 ; vii. பிருதிவிராஜனுக்கும் சம்யுக்தைக்கும் ஏற்பட்ட காதல் நிகழ்ச்சியினை விவரிக்கின்ற கதையாகும் இது. சரித்திர நிகழ்ச்சிகளும் இக்கதையில் இடம் பெறுகின்றன. கும்பகோணம் கல்வி இலாகா துணை ஆய்வாளராக இருந்த வே. முத்துச்சாமி அய்யர், எம். ஏ., எல்.டி. அவர்கள் அளித்துள்ள அணிந்துரையுடன் கூடியது. பரிதிமாற் கலைஞனின் பரிசீலனை பெற்றது இந்நூல். viii.3 51/1919/IV.

O31,3

**ராமசுவாமி ஐயர், வி. எஸ்.**

**2217.** i. ஆங்கில மாயா விநோதக் கதைகள் ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1917 ; உ. ப. 116 ; v. 18×13 செ. மீ. ; vi 0—6—0 ; vii. குழந்தைகள் பொருட்டாக எழுதப்பெற்ற மாயா விநோதக் கதைகளின் தொகுதி. எழு கதைகள் இதில் உள. ஒரு சில படங்களும் இடம் பெற்றுள்ளன. இந் நூல் போலவே 'இந்திய மாயா விநோதக் கதைகளையும்' இவ்வாசிரியர் முன்பே எழுதி வெளியிட்டிருக்கிறார் என்று தெரிகிறது. viii. 877/1917/III.

O31,3

**2218.** i. பெர்டிட்டா : முதற் பதிப்பு ; ii. சி. எஸ். ராமசுவாமி ஐயர் சென்னை; கம்மர்ஷியல் பிரஸ், சென்னை; iii. ஜுன், 1917; iv. உ.ப, 31; v. 18×13 செ.மீ.; vi. 0-2-0; vii. ஓர் ஆங் கிலக் கதையின் தமிழாக்கமே இந்நூல். இடையிடையே படவிளக்கங்கள் உண்டு. 'பெர்டிட்டா அல்லது காணுமற்போன அரச குமாரத்தியின் கதை' என்பது இதன் முழுப் பெயர். viii. 586/1917/III.

O31,3

**ராமஸ்வாமி அய்யர், கே. ஜி.**

**2219.** i. கோபாலன் : முதற் பதிப்பு; ii. ஸ்ரீவாணீபூஷணம் அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1918; iv. உ.ப. 103; v. 18×13 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. இருபத்திரண்டு அத்தியா யங்களைக் கொண்ட ஓர் இனிய துப்பறியும் புதினம் இது. 232/1918/III.

O31,3

**ராமானுஜம், என்.. திருவையாறு**

**2220.** i. ஜெகன் மோஹன ஜானகிராம் ; ii. இரத்தின முதலி யார் அண்டு ஸன், திருப்பதி ; கலைக்கியானம் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ. ப. 71 ; v. 18×11 செ. மீ· vi. 0—5—0 ; vii. பிரிந்த காதலர்களின் துன்ப நிலையைப் பற்றி விளக்குவது. பதினைந்து அத்தியாயங்கள் கொண்டது. உரையாடல்களும் இரண்டோர் இடங்களில் பொருத்தமான பாடல்களும் இதில் கலந்து வருகின்றன. பேச்சு வழக்கான எளிய நடையில் அமைந்த நூல். viii. 260/1916/I.

O31,3

**ராஜகோபால ஐயங்கார், வி.**

**2221.** i. உத்தம சேவகன் : முதற் பதிப்பு ; ii சி. குமார சாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii மார்ச், 1917 ; iv. உ. ப. 47 ; v. 18×13 செ. மீ.; vi. 0—2—6 ; vii. உத்தம சேவகன்

ஒருவனின் வரலாறு இதன்கண் கூறப்படுகிறது. பன்னிரண்டு அத்தியாயங்களைத் தன்பால் கொண்டது. சிறுவர்களுக்காக இப்பதிப்பகத்தார் வெளியிட்ட ஓரணா வாசக வரிசை, நீதி கதா மாலை, விநோதக் கதைகள் ஆகியவற்றில் வெளிவந்த நூல் விவரங்களும் தெரியவருகின்றன. viii. 479/1918/II.

O31,3

**2222.** i செங்கைவளவன் ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1917 ; iv. உ. ப. 40 ; v. 18×13 செ. மீ. ; vi 0—1—6 ; vii. சிறுவரும் கற்பதற்குத் தகுந்தபடி எழுதப் பெற்ற புதினம். 'முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார்' என்னும் உண்மையை எடுத்துக் காட்டுவது ; பதினோர் அத்தியாயங்களில் இக்கதை அமைந்துள்ளது. 'பால பக்ஷணீயம்' என்னும் தொடர் வெளியீட்டில் இது பதினொன்றுவது. viii. 876/1917/III.

O31,3

**2223.** i. தங்க மோதிரம்; முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. உ. ப. 48 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—2—6 . vii. இதில் பள்ளி மாணவர்களுக்கான கதையொன்று உள்ளது. படவிளக்கங்களுடன் கூடியது. 'சிறுர் கதாமாலை' வரிசையில் இது இரண்டாம் புத்தகம். viii. 938/1920/III.

O31,3

**2224.** i. பொன் ஆடு : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசுவாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1917 ; iv. உ. ப. 48 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—1—6 ; vii. சுவையான கற்பனைக் கதை ஒன்றினைக் கொண்டது இந்நூல். 10 அத்தியாயங்கள் அமைந்துள. கதை நிகழ்ச்சிகளை விளக்கும் படங்களும் உள. இந்நூல் கதைக்கொடி வரிசையில் முதல் மலரின் முதல் இதழ் ஆகும். viii. 459/1917/I.

O31,3

**2225.** i. மந்திரமணி : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1920 ; iv. உ. ப. 40 ; v. 18×13 செ. மீ.; vi. 0—2—0; vii. சிறுவர் தம் விருப்புக் கேற்றபடி கதைகள் அமைவது இன்றியமையாததாதலின் அதன்படி இச்சிறுர் கதாமாலை எழுதப்பெற்றுள்ளது. இது 'சிறுவர் கதாமாலை' என்னும் தொடர்வரிசை வெளியீட்டில் முதற் புத்தகமாகும். viii. 816/1920/I.

O31,3

2226. i. மல்லிகா என்ற மதன மனோஹரி : திருத்திய பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ. ப. 40; v. 18×13 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. இச்சிறுபுதினம் கிரேக்க மொழி நூலிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. கிரேக்கக் கதையை ஒரு சில மாறுதல்களுடன் தழுவி இத்தமிழாக்கம் செய்யப்பட்டிருக்கிறது. viii. 306/1916/II.

O31,3

2227. i. ஜயவீரன் : முதற்பதிப்பு; ii. எம். ஆதி அண்டு கம்பெனி, சென்னை; சந்திரா பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1916; iv. உ.ப. 46; v. 18×12 செ.மீ.; vi. 0—2—0: vii. நல்ல உள்ளத்திற்கு எப்பொழுதும் நன்மையே என்றும் கெடுவான் கேடு நினைப்பான் என்றும் கூறப்படுகின்ற நீதி மொழிகளை அடிப்படையாகக் கொண்ட கதைகளடங்கியது இந் நூல். பத்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 1241/1916/III.

O31,3

2228. i. ஸூக்ஷ்ம தரிசி: திருத்திய பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ.ப. 70; v. 18×13 செ.மீ.; vi. 0—4—0; vii. தம்மிடத்திற்கு வரும் இருதிறத்து வழக்காளிகளும் மகிழத் தீர்ப்பளித்து வந்த "மரியாதை ராமன்" என்னும் நீதிபதியைப் பற்றிய கதை. ராமனது இளமைப் பருவத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் ஐந்தும், அவனது காளைப் பருவ நிகழ்ச்சிகள் 33-ம் ஆக 38 கதை நிகழ்ச்சிகள இதில் உள. ஒவ்வொரு கதையின் தொடக்கத்திலும் அக்கதை உணர்த்தும் உண்மையைக் காட்டும் நீதி மொழிகள் தரப்பட்டுள்ளன. viii. 307/1916/II.

O31,3

ராஜம், எம். கே.

2229. i. ஜீவ காந்தாம : முதற்பதிப்பு; ii. வெங்கடாசலம் அண்டு கம்பெனி, சென்னை; கே. ஆர். பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. உ.ப. 88; v. 21×14 செ மீ.; vi. 0—8—0; vii. இது ஒரு துப்பறியும் புதினம். 19 அதிகாரங்கள் கொண்டது. நடை மிகவும் விறுவிறுப்பாக இருக்கின்றது. 'ஜீவ காந்தாமணி அல்லது மைந்தரின் காட்சி' என்பது இந்நூலின் முழுப் பெயர். viii. 723/1917/IV.

O31,3

ராஜம்மாள் ராஜப்பன்

2230. i. மங்களேஸ்வரி : முதற்பதிப்பு; ii. இராஜம்மாள் இராஜப் பன், முகவை; எஸ். பி. ஜி. மிஷன் பிரஸ், ராமநாதபுரம்; iii. மே, 1918; iv. உ.ப. 111; v. 21×14 செ.மீ.; vi.

0—8—0; vii. நாகரிகம் முன்னேற்றமாகியும் பரம்பரை வழக்கங்கள் ஒழிக்கப்படவில்லை என்பதைப் பற்றியும், திருமணம் செய்கையில் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்பதைப் பற்றியும் ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார். இது 18 அத்தியாயங்களைக் கொண்டது. viii. 893/1918/IV.

O31,3

ராஜா சாஸ்திரியார், எஸ்.

2231. i. ஆனந்தவல்லி : முதற்பதிப்பு; ii. ஷண்முக விலாச புத்தக சாலை, சென்னை; சிவ ரகசியம் பிரஸ், சென்னை; iii. மே, 1917; iv. உ.ப. 95; v. 19×13 செ.மீ.; vi. 0—6—0; vii. திருமணம் நிச்சயம் செய்யப் பெற்ற ஒரு பெண்ணிற்கு ஏற்பட்ட இடையூறுகளை விளக்கி எழுதப்பெற்ற தமிழ்ப் புதினம். இவ்வாசிரியர் இயற்றிய பிற நூல்களின் விவரமும் இறுதியில் தரப்பட்டிருக்கிறது. அவையாவன : தத்வ சங்கிரஹ ராமாயணம், பிரபோத சந்திரோதயம், அற்புத இராமாயணம், விக்கிரமோர்வசீயம், விக்ரமார்க்கன், ஆனந்தவல்லி, இராஜலக்ஷ்மி, காளிதாஸன், சாரதரநாதர், போஜன் ஆகியன. viii. 694/1917/II.

O31,3

ரெங்கசாமி அய்யங்கார், எஸ்.

2232. i. பவளக்கொடி : இரண்டாம் பதிப்பு; ii. டி. நாக சுப்பிரமண்ய ருவ் பிரதர்ஸ், சென்னை; மாடர்ன் பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. 1916; iv. உ.ப. 125; v. 18×13 செ.மீ.; vi. 0—8—0; vii. பவளக்கொடி புகழேந்திப் புலவரால் பாடல் வடிவில் இயற்றப்பட்ட நூல். இதனைப் புதினக் கதை போல உரைநடையில் ஆசிரியர் ஆக்கியுள்ளார். அல்லி ராணி யின் மகன் புலந்திரனுக்காகப் பவளத்தேர் கொண்டுவரும் பொருட்டுச் சென்றவிடத்தில் அருச்சுனன் பவளக்கொடி எனும் அந்நாட்டு அரசியை மணம் புரிந்து கொண்ட வரலாறு இதில் உளது. viii. 269/1916/IV.

O31,3

வடிவேலு செட்டியார், கோ.

2233. i. மகாராஜா துறவு : முதற்பதிப்பு; ii. கோ. வடிவேலு செட்டியார், சென்னை & ஷண்முக முதலியார், மங்கலம்; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூலை, 1917; iv. உ.ப. 66; v. 14×11 செ.மீ.: vi. 0—3—0; vii. இந் நூல் சில நீதிகளை அடிப்படையாக வைத்து எழுதப்பெற்ற கதையைக் கொண்டது. வேதாந்த உண்மை விளக்கமாய் அமைந்தது. கதையின் இடையிடையே சிறுசிறு தலைப்புகள் தரப்பட்டுள்ளன. முக்கிய சில பொருள்கள் அங்கங்கே அடிக் குறிப்பில் விளக்கப்பட்டுள்ளன. viii. 660/1917/III.

O31,3

**2234.** i. **வளையல் உடன்பாடு:** முதற் பதிப்பு; ii. **ஜி. எ. வைத்ய** ராமன் அண்டு கம்பெனி, சென்னை; தாம்ஸன் அண்டு கோ., சென்னை; iii. மார்ச், 1918; iv. உ.ப.20; v. 18×14 செ.மீ.; vi. 0—2—0; vii. இதில் ஒரு ரஜபுத்ரக் கதை அடங்கியுள்ளது. ரஜபுத்திரர்களுக்குள் ஒரு பெண் தனக்கு ஆபத்து நேரிடுங்காலத் தில் தான் அணிந்து கொண்டிருக்கும் வளையலை ஒரு போர் வீரனுக்கு அனுப்பி அவன் அதை ஏற்றுக் கொண்டால், ஆபத்தினின்றும் அவளைக் காப்பாற்ற அவன் கடமைப் பட்டவனு வான் என்று ஒரு வழக்கம் உண்டு. ஆண்டுக்கொருமுறை வளையல் பண்டிகை என்று அவர்கள் கொண்டாடுவார்கள். உதவி புரியச் சம்மதிக்கும் வீரன் வளையலைப் பெற்றுக் கொண்டு தன் சம்மதத்தைத் தெரிவிக்கும் பொருட்டு ஒரு சித்திரப் பட்டாடையை அனுப்புவான். இம்மாதிரியாக இருவருக்கும் ஏற்படும் உடன்பாடு, 'வளையல் உடன்பாடு' என்று சொல்லப்படும். ஜனுபிமானி பிரசுரங்கள் வரிசையில் இது ஏழாவது வெளியீடு. viii. 1088/1918/I.

O31,3

**2235.** i. **விக்கிரமாதித்தன் கதை;** ii. ரிட் அண்டு கம்பெனி; கிச்சினர் அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 96; v. 18×11 செ.மீ.; vi. 1—0—0; vii. விக்கிரமாதித்தன் சிம்மா சனத்திற்குச் செல்லும் படிகளிலுள்ள 32 பதுமைகள் போஜ ராஜனுக்கு விக்கிரமாதித்தனுடைய வீர வரலாற்றைக் கூறுவ தாக உள்ளது இந்நூல். பல பிரதிகளை ஆராய்ந்து பிழையற மாதரும் பாலரும் அச்சமின்றி அகமகிழ்ந்து படிக்கத் தக்க வாறு பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இந்நூலில் இரண்டு பதுமை கள் கூறிய கதைகள் உள்ளன. 'புராதன நவீன கீதா மஞ்சரி' வரிசையின் முதல் மலராகும் இவ்வெளியீடு. viii. 966/1916/I.

O31,3

**விஸ்வநாத அய்யர், ஆர்., முடிகொண்டான்**

**2236.** i மனுநீதி கண்ட சோழன்: முதற் பதிப்பு; ii. ஆர். விஸ்வநாத அய்யர், முடிகொண்டான்; வர்த்தக மித்திரன் பிரஸ், தஞ்சாவூர்; iii. செப்டம்பர், 1918; iv. உ.ப. 18; v. 18×12 செ.மீ.; vi. 0—2—6; vii. பெரிய புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள சரித்திரப் புகழ் பெற்ற – செங் கோன்மை தவறாது அரசு நடத்திய மனுநீதி கண்ட மன்ன னின் வரலாறு இப்புத்தகத்தில் கூறப்பட்டுள்ளது. மன்னார்குடி பிண்ட்லே கல்லூரிக் கணித விரிவுரையாளர் ப. பஞ்சாபகேசன், ஷை கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் சர்க்கரை இராமசாமிப் புலவர் முதலியோர் தந்துள்ள சிறப்புப் பாயிரங்கள் இந்நூற் குண்டு. 'அருமந்த அரசாட்சி அரிதோ, மற்றெளிதோ' என்ப தும் இதற்கு மற்றொரு பெயராகத் தரப்பட்டிருக்கிறது. சிறுவர்

களும் வாசிப்பதற்கேற்ற வகையில் எளிய நடையில் இது ஆக்கப் பெற்றிருக்கிறது. viii. 319/1918/IV.

O31,3

**வீரவசந்த ராயர்**

2237. i. ஸ்ரீமுகப் பத்திரிகை: முதற் பதிப்பு; ii. பி. ஜெய ராம முதலி, சென்னை; விஸ்வ குலோத்தாரண அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1919; iv. உ.ப. 16; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் புராணத் தொடர்புடைய சிறுகதை ஒன்று உண்டு. கடித வடிவில் அமைந்துள்ளது. இந்நூலின் அட்டை முகப்பில் சிறப்புப் பாயிரமாகக் கவியொன்று காணப் படுகின்றது. "ஸ்ரீவீரவசந்தராயர் சிவ பர சமய சிதம்பர தீட்சிதர் துணையாகவும், இராமயோகி ஐயரவர்கள் சிவராமனுமையம் அனுப்பிய திருமுகம் சிதம்பரம் துணையாகவும் இது வீர வசந்த ராயர் ஸ்ரீமுகப் பத்திரிகை" என்று நீண்டதொரு பெயராக இந்நூற் பெயர் தொடக்கத்தில் உளது. viii. 64/1919/II.

O31,3

**வெங்கடராம அய்யர், கே.**

2238. i. உல்லாஸன் சரிதம்: இரண்டாம் பதிப்பு; ii. டி. கிருஷ்ண சாமி அய்யர், கும்பகோணம்; கிருஷ்ண விலாஸ பிரஸ், கும்ப கோணம்; iii. செப்டம்பர், 1920; iv. உ.ப. 113; v. 16×11 செ.மீ.; vi. 0—6—0; vii. கிரேக்கக் கவிஞரான ஹோமர் என்பவர் ஆக்கிய 'இலியத்' காவியத்தின் கதைச் சுருக்கமே இந்நூல். viii. 1014/1920/III.

O31,3

**வெங்கடராம அய்யர், கே.என்., கணியூர்**

2239. i. கமலரேகை அல்லது சிவப்பு+அடையாளத்தின் ரகஸ்யம் முதற் பதிப்பு; ii. ஆர்.வெங்கடாசலம் அண்ட் கோ., திருவல்லிக்கேணி, சென்னை; பி. ஆர். ராம ஐயர் அண்டு கம்பெனி, சென்னை; iii. 1916; iv. உ.ப. 1883 v. 18×12 செ. மீ.; vi. 0-12-0; vii. இது ஒரு துப்பறியும் புதினம். இதில் ஒரு பெண் தன் காதல னிடத்தில் காட்டும் அன்பின் திறம் விளக்கப்பட்டுள்ளது. 20 அத்தியாயங்கள் கொண்டது. viii. 4/1916/II.

O31,3

**வெங்கடராமன், கே. எஸ்.**

2240. i. நீதிபுர நியாயம்: முதற்பதிப்பு; ii. கே. எஸ். வெங்கடராமன், போடிநாயக்கனூர்; ஹக்கீம் பிரஸ், போடி நாயக்கனூர்; iii. டிசம்பர், 1918; iv. உ. ப. 56; v. 17×11 செ. மீ.; vi. 0-6-0; vii. உண்மையும் நீதியும் வாழ்க்கையில் வெற்றி பெறும் என்பதனை விளக்கிடும் ஓர் அழகிய சிறுபுதினம் இது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 173/1919/I.

O31,3

வெங்கடேச சர்மா, எஸ். பி., கொடுமுடி

2241. i. இராமாயண ஸாரஸங்கிரகம்: இரண்டாவது பதிப்பு; ii. இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன், மதுரை; கோல்டன் பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 85; v. 19×13 செ. மீ.; vi. 0–5–0; vii. இராமாயணக்கதை வசன நடையில் சுருக்கி வரையப்பட்டுள்ளது. 66 கதைகளில் இராம சரிதம் நிறைவேறியுள்ளது. viii. 557/1916/II.

O31,3

2242. i. தெய்வ பக்தி ப்ரபாவம்: முதற் பதிப்பு; ii. எஸ். பி. வெங்கடேச சர்மா, கொடுமுடி; கமர்ஷியல் பிரஸ், கரூர்; iii. டிசம்பர், 1917; iv. உ. ப. 24; v. 16×11 செ. மீ.; vi. 0–2–0; vii. இதில் தெய்வ பக்தியின் சிறப்பை விளக்கும் ஏழு சிறு கதைகள் தரப்பட்டுள்ளன. சீலமும் ஒழுக்கமும் சிறந்து தெய்வ பக்தி ஓங்குவதற்கு இத்தகைய சரிதங்கள் துணை புரிவன. viii. 101/1918/I.

O31,3

வெங்கடேசுவர அய்யர், வெ., பட்டுக்கோட்டை

2243. i. கயற் கண்ணி: முதற் பதிப்பு; ii. கணேஷ் அண்டு கம்பெனியார், சென்னை; லா பிரிண்டிங் ஹவுஸ், சென்னை; iii. எப்ரல், 1917; iv. உ. ப. 160; v. 19×13 செ. மீ.; vi. 0—2—0; vii. நம் நாட்டுச் சிறுர்கள் இளமை முதற்கொண்டே உடன்பிறந்தார் பற்று, பொறுமை, ஜீவ காருண்யம், தெய்வ பக்தி, குரு பக்தி, அரசபக்தி முதலிய நற்பண்புகளில் சிறந்து விளங்க வேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதப்பெற்ற தமிழ்ப் புதினம். வி. மாசிலாமணி பிள்ளை என்பார் ஆங்கிலத்தில் இந்நூலுக்கு ஒரு முன்னுரை எழுதியுள்ளார். viii. 731/1917/II.

O31,3

வேங்கடராம ஐயர். ஊ. சா., கும்பகோணம்

2244. i. முயற்சி திருவினையாக்கும்: முதற் பதிப்பு; ii. கலைமகள் கல்விக் கழகத்தார், கும்பகோணம்; ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸ், கும்பகோணம்; iii. அக்டோபர், 1920; iv. உ. ப. 16; v. 18×13 செ. மீ.; vi. 0–1–6; vii. "முயற்சி திருவினையாக்கும்" என்ற வள்ளுவர் வாய்மொழிக் கிலக்கியமாய் புராணக் கதையான விசுவாமித்திரரின் வரலாற்றை விளக்குவது இந்நூல். viii. 435/1920/IV.

O31,3

**வேங்கடராம ஐயர்., சி. ப.**

**2245** i. இளமையும் ஒழுக்கமும் அல்லது இரண்டு பிள்ளைகள், மூன்றும் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி: சென்னை ; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1917 ; iv. உ.ப. 161 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—8—0 ; vii. இந்நூலில் பல கதைகள் கூறப்பெற்றிருக்கின்றன. 12 அத்தியாயங்களில் அடங்கியுள்ளது. viii. 630/1917/III.

O31,3

**வேங்கடராம சாஸ்திரிகள், வாழ்குடை**

**2246**. i. கர்ணன் : முதற்பதிப்பு ; ii. ஆனந்தா பிரஸ், சென்னை ; iii. செப்டெம்பர், 1916 ; iv. உ.ப. 90 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—3—0 ;vii. மகாபாரதத்தில் வருகின்ற கர்ணனின் வாழ்க்கை வரலாற்றைப் பள்ளியில் மாணவ மாணவிகள் படிக்கும் வண்ணம் எளிய முறையில் தரும் நூல். கொடையின் சிறப்பும், செய்ந்நன்றியறிதலின் உயர்வும் இச்சரிதத்தால் நன்கு விளங்கும். ஆனந்த பாரிஜாதம் வெளியீட்டில் இது மூன்றுவதாகும். viii. 1151/1916/III.

O31,3

**2247**. i. சந்தனு: முதற் பதிப்பு ; ii. ஆர். கணபதி அண்டு கம்பெனி, பிரம்பூர், சென்னை ; பி. ஆர். ராம ஐயர் அண்டு கோ., சென்னை ; iii. ஜூலை, 1919 ; iv. உ. ப.+செ. மூ. ப. 55+11 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-5-0 ; vii. புராணக்கதைகளிற் சிலவற்றைத் தொடர்ச்சியாகப் புனைந்தெழுத வேண்டுமென்ற பலர் விருப்பத்திற்கிணங்க எழுதி வெளியிடப்பெற்றது. பாரதப் பெருங்காவியத்துள் வரும் சந்தனு மகாராஜனின் வரலாறு இந்நூலில் அமைந்துள்ளது. பன்னிரண்டு அத்தியாயங்களில் விளக்கமாக எழுதப்பட்டிருக்கிறது. பொருத்தமான நீதிச் செய்யுட்கள் இடையிடையே சேர்க்கப்பட்டுள்ளன. புகழேந்தியார் பாடிய நளவெண்பாவின் சுருக்கமும் சேர்க்கப்பட்டிருக்கிறது. (60 பாடல்கள்); viii. 517/1919/III.

O31,3

**2248**. i. துஷ்யந்தன்: முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கடேஸ்வர் அண்டு கோ., சென்னை ; ஆனந்தா பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1916 ; iv. உ. ப. 57 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. இது துஷ்யந்தன்–சகுந்தலை திருமணத்தை விளக்கும் கதையாகும். பள்ளி மாணவ மாணவிகள் பயிலக்கூடிய வகையில் எளிய முறையில் எழுதப்பட்டுள்ளது.

துஷ்யந்தன் சகுந்தலையைப் பிரிந்து மீண்டும் சேர்ந்து அவளுடன் இன்பமாக வாழ்ந்து அரசு புரிந்தது வரையில் உள்ள சரித்திரம் தரப்பட்டிருக்கிறது. viii. 1149/1916/III.

O31,3

2249. i. நளன்: முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடேஸ்வர் கம்பெனி, சென்னை; ஆனந்த அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. உ. ப. 59; v. 18×13 செ. மீ.; vi, 0-2-0; vii. நளன் தமயந்தி கதை எளிய வசன நடையில் வரையப்பட்டுள்ளது. மணம், பிரிவு, மீட்சி என்னும் மூன்று பாகமாய்ப் பிரித்து எழுதப்பட்டிருக்கிறது. நளவெண்பாப் பாடல்களில் சிலவும் மேற்கோளாகச் சிற்சில இடங்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. நளன் அன்னத்தைப் பற்றுதல் தமயந்தி நளனுக்கு மாலை சூட்டுதல் என்னும் இரு நிகழ்ச்சிகளை விளக்கும் படங்களும் இதில் உள. 'ஆனந்த பாரிஜாதம்' என்னும் நூல் வரிசையில் இது முதல் மலராகும். viii. 221/1916/II.

O31,3

2250. i. யயாதி: முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடேஸ்வர் அண்டு கம்பெனி, சென்னை; ஆனந்தா பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1916; iv. உ. ப. 50; v. 19×13 செ. மீ.; vi. 0-3-0; vii. சந்திரவம்ச மன்னரான யயாதி என்ற அரசனையும் அவனுடைய மகனையும் பற்றிய கதை யாகும் இந்நூல். இது பள்ளிக்கூட மாணவ மாணவிகள் பயிலும் வண்ணம் எழுதப்பட்டுள்ளது. 15 அத்தியாயங்களில் இக்காவிய சரிதம் அமைந்துள்ளது. viii. 1150/1916/III.

O31,3

2251. i. ராமன்: முதற் பதிப்பு; ii. வெங்கடேஸ்வர் அண்ட் கோ., சென்னை; ஆநந்த அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. உ. ப. 104; v. 18×13 செ. மீ.; vi. 0-4-0; vii. எளிய வசன நடையில் ராமாயணக் கதை விளக்கப் பட்டுள்ளது. கடமையையும், ஒழுக்கத்தையும் காட்டுவது இச் சரிதம். இராமாயணத்தின் ஆறு காண்டமும் இளமை, கடமை, விரதம், நட்பு, தூது, சண்டை என்று பெயரிட்டு ஆறுபிரிவாக ஒழுங்கு படுத்தப்பட்டுள்ளது. தமிழ்ப் பெருங் காப்பியத்தை நினைவூட்டும் வகையில் அவசியமான இடங் களில் சிற்சில மேற்கோள் செய்யுட்களும் காட்டப்பட்டிருக் கின்றன. viii. 220/1916/II.

O31,3

வேணுகோபால நாயுடு, ப. ம., வேலூர்

2252. i. குலசேகரன்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. ப. உ. வேணுகோபால நாயுடு, வேலூர்; விக்டோரியா அச்சுக்கூடம்; வேலூர்; iii. செப்டெம்பர், 1919; iv. உ. ப. 60; v. 18×13 செ. மீ.; vi. 0-6-0; vii: இந்நூல் பாடப்புத்தகமாக அங்கீகரிக்கப்பட்டுப் பல பள்ளிகளில் வைக்கப்பட்டிருந்ததாகத் தெரிகிறது. நூலில் ஆங்காங்கு மேற்கோள்களாகக் காட்டிய செய்யுள்களுக்குத் தெளிவான பொழிப்புரை எழுதி அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வாசிரியர் எழுதிய மற்றொரு நூல் 'சம்பகமாலினி' என்பதாம். இவருடைய ஆசிரியர் பு.க. ஸ்ரீனிவாசாச்சாரியார் என்பார் இதற்குப் பதிப்புரை வரைந்துள்ளார். இது கல்விச் சாலைகளில் பாடப் புத்தகமாகவும் வைக்கப்பெற்றது. viii. 1168/1919/III.

O31,3

வேதநாயகம் பிள்ளை, ச., மாயவரம்

2253. i. சுகுண சுந்தரி: மூன்றும் பதிப்பு; ii. வி. ஜி; ஆரோக்கியசாமி அண்டு பிரதர்ஸ், மாயவரம்; டாட்சன் அச்சாபீஸ், திருச்சி; iii. ஆகஸ்ட், 1918; iv. உ. ப. 153; v. 19×12 செ. மீ.; vi. 0-10-0; vii. சுகுணசுந்தரி என்ற இக்கதையின் கதாநாயகியினது பண்பு நலன்களைப் பற்றி ஆசிரியர் நன்கு விளக்கி, அவளைப் போல மற்ற பெண்டிரும், அத்தகைய பண்பு நலன்களைக் கைக்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தியுள்ளார். பாலிய விவாக கண்டனம் போன்ற சில சமுதாயச் சீர்திருத்தங்களைப் பற்றியும் வலியுறுத்தியுள்ளார். 21 அதிகாரங்கள் கொண்டது. இவ்வாசிரியர் இயற்றிய வேறு நூல்கள், பிரதாப முதலியார் சரித்திரம், பெண் மதி மாலை, நீதி நூல், சர்வசமய சமரசக் கீர்த்தனைகள், சத்தியவதக் கீர்த்தனைகள், ஆசிரியர் தம் சுயசரிதையாகிய வேதநாயக விற்பன்னர் சரிதை ஆகியன. திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் உற்ற நண்பர் இவ்வாசிரியர். ஆங்கிலத்தில் ஆசிரியரால் எழுதப்பட்ட முன்னுரையொன்றுண்டு. கதாபாத்திரங்களின் பெயர்களும் பழமொழிகளும் பெரிய எழுத்தில் தரப்பட்டிருக்கின்றன. viii. 662/1918/IV.

O31,3

2254. i. பிரதாப முதலியார் சரித்திரம்: ஆறும் பதிப்பு; ii. வீ. ஜி. ஆரோக்கியசாமி அண்டு பிரதர்ஸ், மாயவரம்; செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. 1916; iv. உ. ப 371; v. 18×12 செ.மீ.; vi. 1-0-0; vii. இது ஒரு செந்தமிழ்ப் புதினம். பெண் கல்வி, சகோதர ஒற்றுமை, ராஜ பக்தி முதலிய சிறந்த பொருள்களை

ஆசிரியர் உணர்த்துகிறார். உலக நடப்பானவைகளை எடுத்துக் கூறி மக்கள் நல்லறிவு பெறுவதற்கேற்ற வகையில் இப்புதினம் அமைக்கப்பட்டிருக்கிறது. உலக வழக்கமாக வழங்கும் பல பழமொழிகளை ஆசிரியர் அங்கங்கே எடுத்துரைப்பது அறிவுக்கு விருந்தாக உள்ளது. viii. 24/1916/IV.

O31,3

**வைத்தியநாத ஐயர்.**

2255. i. ஸோமஸுந்தரம்: முதற் பதிப்பு; ii. லலித விலாச புத்தகசாலை, சென்னை; பி. ஆர். இராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. ஆகஸ்ட், 1918, iv. உ.ப. 54; v. 18×12 செ.மீ.; vi. 0–4–0; vii. ஸோமஸுந்தரம் என்பவரின் வீரதீரச் செயல்களைப் பற்றியும், அவர் பிண்டாரி யுத்தத்திலே பங்கு கொண்டு போரிட்டதைப் பற்றியும் இதில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. இஃதொன்பதத்தியாயங்களைக் கொண்ட ஒரு புதினம். viii. 867/1918/III.

O31,3

**வைத்தியநாதய்யர், ஜி.**

2256. i. அதிகச் செட்டு அதிகத் தீமை: முதற் பதிப்பு; ii. ஜி. வைத்தியநாதய்யர், திருச்சிராப்பள்ளி; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி: iii. ஜுன், 1917; iv. உ. ப. + செ. மூ. ப. 31; v. 18×11 செ. மீ.; vi. 0–2–0; vii. இந்நூலில் 5 கதைகள் தரப்பட்டுள்ளன. கதைகளும் ஐந்து நீதிகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப் பட்டுள்ளன. அக்கதைகள் வருமாறு: அதிகச்செட்டு அதிகத் தீமை, மோசம்போன கற்பூர திலகன், இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்குவான், ஏமாந்த பிராமணன், மண்டுக வரசும் சர்ப்பமும் அல்லது இணக்கமறிந்து இணங்கு என்பனவாம். viii. 162/1917/III.

O31,3

**வைத்தியநாதய்யர், யூதூர்**

2257. i மரகத சுந்தரம்: முதற் பதிப்பு; ii. இட்டா பார்த்தசாரதி நாயுடு, சென்னை; சக்கரவர்த்தி அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ. ப. 150; v. 22×14 செ. மீ.; vi. 0–10–0; vii. காதல் பாதை காடு முரடானது என்ற கருத்தைத் தழுவி எழுதப்பட்ட ஒரு புதினம். ஆறு அத்தியாயங்கள் கொண்டது அறிவுரைக் கருத்துக்கள் பல பொதிந்தது. பல நூல் மேற்கோள்கள் இடையிடையே விரவி வருகின்றன. viii 208/1916/I.

O31,3

**வைத்தியநாதய்யர், எம்.எஸ்., பூதூர்**

2258. i. விகடநாதன் ; ii. எ. ஆர். புருஷோத்தம நாயுடு ; இந்திய சட்ட கெஜெட் அச்சாபீஸ், சென்னை ; iii. 1917; iv. உ.ப. 73 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. பிறர்மனை நயத்தல், கூடா நட்பு, கல்வியைத் தீய வழியில் பயன் படுத்தல் முதலான தீய செய்திகளைக் கண்டித்தும் கல்வியின் பெருமை, நல்லோர் நட்பால் தீய பண்பு நற்பண்பாதல், முதலியவற்றை விளக்கியும் எழுதப்பட்ட கதை. ஐந்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 802/1917/III.

O31,3

**ஸ்ரீநிவாசன், தி.ரா.**

2259. i. கமலசுந்தரி : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீநிவாசன் ; பி. ஆர். ராம ஐயர் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 78 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ஓர் உடன்பிறந்தவனுக்கும் உடன்பிறந்தவளுக்கும் உள்ள அன்பின் திண்மையை விளக்கும் ஒரு புதினம். 15 அத்தியாயங்கள் கொண்டது. ஒரு சில பாடல்கள் சந்தர்ப்பத்திற்கேற்றுற்போல் அங்கங்கே எடுத்தாளப்பட்டுள்ளன; viii. 315/1916/II.

O31,3

**ஸ்ரீநிவாஸய்யங்கார், உ. வே. ஸி. ஆர். (மொ. து.)**

2260. i. ச்யவனோபாக்யானம்: முதற் பதிப்பு; ii. டி. ஆர். கிருஷ்ணசாரியார், சென்னை ; கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1917 ; iv. உ.ப. 133 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. புராதன காலத்தின் முனியான ச்யவனர் என்பவரைப் பற்றிய புராணக் கதை. இது ரிக்வேத சம்ஹிதை, தபத ப்ராமணம். ஐதரேயப்ராமணம். மகாபாரதம், பாகவதம்,தேவி பாகவதம், வாயு புராணம், தைத்ரீய உபநிஷத் முதலிய கிரந்தங்கவிலிருந்து சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது; viii. 1055/1917/I.

O31,3

2261. i. பீஷ்ம சரித்திரம் : முதற் பதிப்பு; ii. டி. ஆர். கிருஷ்ணசாரியார், சென்னை ; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. மே, 1917 ; iv. உ.ப. 83 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. மகாபாரதத்தில் வரும் பீஷ்மருடைய வரலாற்றுக் கதையை இந்நூலாசிரியர் தருகிறார். அவர் கங்கை புத்திரனாய்த் தோன்றியது முதற் கொண்டு மரணம்வரை நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பல சிறு தலைப்புகள் தொடர்புபட அமைத்து எழுதப்பட்ட சரித்திரம். இளைஞர், முதியோர் யாவரும் எளிதில் வாசித்து இன்புறத்தக்க நடையில் அமைந்தது; viii, 884/1917/II.

O31,3

**ஸ்ரீநிவாஸா சாரியார். பு. க., வேலூர்**

2262. i. பெரிய வுடையார் அல்லது சடாயு சரித்திரம்: முதற் பதிப்பு; ii. பு.க. ஆண்டாளம்மாள், வேலூர்; சுந்தர விநாயகர் அச்சுக் கூடம், வேலூர்; iii. மார்ச், 1919; iv. உ.ப. 79; v. 18×13 செ. மீ.; vi 0–8–0; vii. இராமாயணக் கதையில் வரும் சடாயுவைப் பற்றிய செய்தி இதில் விவரிக்கப்பட்டுள்ளது; viii. 720/1920/I.

O31,3

2263. i. மார்க்கண்டேய சரிதம்: திருத்திய மூன்றும் பதிப்பு; ii. பு. க. ஆண்டாளம்மாள், வேலூர்; சுந்தர விநாயகர் அச்சுக் கூடம், வேலூர்; iii. ஆகஸ்ட், 1919; iv. உ. ப. 39; v. 18×13 செ. மீ.; vi. 0-6-0; vii. இஃது ஆரம்பப் பள்ளி ஆசிரியப் பயிற்சிப் பள்ளிக்கான தமிழ் உரை நடைப் பாட நூல். சிவ பெருமான் திருவுருவப் படத்துடன் கூடியது. விடாமுயற்சியின் பெருமையை விளக்குவது இச்சரிதம். வட மொழியிலும் தென் மொழியிலும் இச்சரிதம் காணப்படும் நூல்களைக் குறித்து முக வுரையில் விளக்கம் தரப்பட்டிருக்கிறது; viii. 541/191 /III

O31,3

2264. i விசயத் தவசியும் சிவவேடனும்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. பு. க. ஸ்ரீநிவாசாச்சாரியார், வேலூர்; வித்யா ரத்னாகர அச்சுக் கூடம், வேலூர்; iii. பிப்ரவரி, 1918; iv. உ. ப. 60; v. 16×11 செ.மீ.; vi· 0–4–0; vii. புராணக் கதையான இஃது வில்லிபுத்தூரார் பாரதத்திலுள்ள அருச்சுனன் தவநிலைச் சுருக்கத்தைத் தழுவி எழுதப்பட்டுள்ளது. இவ்வாசிரியர் எழுதிய பிற நூல்களின் விலை விவரப்பட்டியல் மேலட்டைகளில் கொடுக்கப்பட்டிருக்கின்றது; viii. 1047/1918/I.

O31,3

**ஸம்பத், ஓ**

2265. i. கமல பவன அற்புதம்: முதற் பதிப்பு; ii. ஆர். லோக நாதன், சென்னை; சிவரகசியம் பிரஸ், சென்னை; iii. எப்ரல், 1917; iv. உ.ப. 180; v.18×13 செ. மீ,. vi. 0–10–0; vii. சதி வேலையில் ஈடுபடும் ஒரு கூட்டத்தை இக்கதையின் தலைவன் அழித்து வெற்றி கொள்ளும் நிகழ்ச்சியினைக் கொண்டது. 19 அத்தியாயங்கள் கொண்டது; viii. 413/1917/II.

O31,3

2266. i. சுகந்த மாலினி: முதற்பதிப்பு; ii, ஆர். உலகநாதம் பிள்ளை, சென்னை; சிவரகசியம் பிரஸ், சென்னை; iii, அக்டோபர், 1918; iv. உ. ப. 76; v. 19×12 செ. மீ,; vi. 0–5–0; vii. சிறிய தாயாரின் கொடுமையால் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கும் ஓர் இனிய தமிழ்க் கதையாகும், இறுதியில் மனைவியின் கற்புத் தன்மையால், கொடுமை

செய்தவர்கள் தண்டனை அடைகிறதைப் பற்றி இதில் கூறப்பட்டுள்ளது. சுகுணரஞ்சனி, கமலவதன, கமலபவன அற்புதம், கமலாஸனி, பரிமள ரோஜா முதலிய நூல்கள் இவ்வாசிரியரால் இயற்றப்பட்டன. பத்து அத்தியாயங்கள் உள; viii. 605/1918/IV. 031,3

2267. i. பரிமள ரோஜா: முதற்பதிப்பு ; ii. ஆர். உலகநாதம், சென்னை ; சிவரகசியம் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. உ. ப. 80 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. பரிமள ரோஜாவின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றியும் காதலுக்கு ஏற்பட்ட தடைகளைப் பற்றியும், முடிவில் வஞ்சகர்கள் இறக்க காதல் திருமணமாக முடிந்ததைப் பற்றியும் ஆசிரியர் நன்கு இக்கதையில் விளக்கியுள்ளார். இக்கதை, சரித்திர நிகழ்ச்சியின் பின்னணியோடு எழுதப்பட்டுள்ளது. இந்நூலாசிரியரின் பிற நூல்கள் : சுகுணரஞ்சினி, கமலவதன, கமலபவன அற்புதம், கமலாஸனி, சுகந்தமாலினி முதலியன; viii. 618/1918/III.

O31,3

ஸுந்தர சாஸ்திரியார், தி. ஸ்ர்.

2268. i. கங்காவதரணம்: முதற் பதிப்பு ; ii. தி. ஸா. ஸுந்தர சாஸ்திரியார் ; பிரிஸிடென்ஸி பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப.+செ.மூ.ப. 12 ; v. 18×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. சுவர்க்கத்திலுள்ள கங்காதேவி சிவனுடைய சடையில் இறங்கும் புராணக் கதையை விளக்குவது. இக்கதையில் அடங்கிய அறநுட்பங்களைத் தொகுத்துக் கதை முடிவில் ஆசிரியர் தந்துள்ளார்; viii. 217/1916/III.

O31,3

ஸுந்தர ராஜாச்சாரியார், கே.டி.

2269. i. ஸஸேமிரா: முதற் பதிப்பு; ii. ஜி.எ. வைத்தியராமன் அண்டு கம்பெனி, சென்னை ; தாம்ஸன் அண்டு கோ., சென்னை ; iii. பிப்ரவரி, 1918 ; iv. உ.ப. 18 ; v. 18×14 செ.மீ. , vi. 0–2–0 ; vii. இதில் ஒரு புராணக் கதை அடங்கியுள்ளது. ஒரு செயல் சந்தேகமாக இருந்து ஆகுமென்றுவது ஆகாதென்றுவது நிச்சயமாய்ச் சொல்வதற்கிடமில்லாமலிருந்தால் அது இழுப்பாய் இருக்கிறதென்றும், ஸஸேமிராவாயிருக்கிறதென்றும் சொல்வது வழக்கம். ஸஸேமிரா என்ற வார்த்தையில் நாலு எழுத்துக்கள் இருக்கின்றன. அந்த நான்கும் நான்கு நீதிகள் அடங்கிய சமஸ்கிருத சுலோகங்களின் முதல் எழுத்துக்களாகும். அவைகளை விளக்கும் வகையில் அமைந்த சிறு கதையே இந்நூல். 'ஜனோபிமானி' பிரசுரங்களில் இது ஐந்தாவது; viii. 1089/1918/I.

O31,3

## 900 சரித்திரம், பூவர்ணனை, பிரயாணம்.

### 910 பூகோளம் (பொது.)

**சீதாராமராவ், எம்.**

2270. i. பிரபஞ்ச பூகோளம்—முதல் பாகம்: முதற் பதிப்பு ; ii. எம். சீதாராம ராவ், மதன பள்ளி ; ஹாடென் அச்சுக் கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. உ.ப. 195 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–10-0 ; vii. பிரபஞ்ச பூகோளம் —முதல் பாகம். உலகத்தில் உள்ள ஒவ்வொரு நாட்டின் பூகோள அமைப்பும் பற்றி விளக்குவது இந்நூல். இதில் இந்தியாவைப்பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது. பள்ளி மாணவர்களுக்கேற்ற முறையில் வினுக்கள் பாட இறுதியில் அளிக்கப்பட்டுள்ளன. பட விளக்கங்களுடன் கூடியது. தலைப்புக்கள் ஆங்கிலத்திலும் தரப்பட்டுள்ளன. ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் மேரி ராணி ஆகியோர் படங்கள் அமைந்துள்ளன; viii. 274/1919/IV.

U.1

2271. i. பிரபஞ்ச பூகோளம்—ஆசியாவும், ஐரோப்பாவும்: முதற் பதிப்பு; ii. எம். சீதாராம ராவ், வேலூர் ; விக்டோரியா பிரஸ், வேலூர் ; iii. ஜூலை, 1920 ; iv. உ.ப. 149 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—9—0 ; vii. இது, பள்ளி மாணவர்களுக்கான பூகோளப்பாட நூல். உலக அமைப்பு, கண்டங்கள், நாடுகள், அவைகளின் சிறப்பு ஆகியவை பற்றிக் கூறப்பட்டுள்ளன. படவிளக்கங்களுடன் கூடியது. ஆசியா, ஐரோப்பாக்கண்டங்களின் பூவர்ணனைகளை இதில் காணலாம்; viii. 211/1920/III.

U.1

**செல்லப்ப சாஸ்திரியார். டி. வி.**

2272. i. பூகோள சாஸ்திரம்—முதலாவது புத்தகத்தின் அனுபந்தம்: முதற் பதிப்பு ; ii. டி.வீ. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை ; iii. மார்ச், 1920; iv. உ. ப. 17; v. 18×13 செ. மீ. ; vi. இலவசம் ; vii. முதல் பாகத்திற்கான பூகோளப் பாடநூல். இது முன்வெளியிட்ட புத்தகத்தில் சேர்க்கப்படாத முக்கிய செய்திகளுக்கான அனுபந்த வெளியீடு; viii. 161/1920/II.

U.1

2273. i. பூகோள சாஸ்திரம்—இரண்டாவது புத்தகத்தின் அனுபந்தம்: முதற் பதிப்பு ; ii. டி.வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை ; டி.வி.சி. பிரஸ், சென்னை ;

iii. மார்ச், 1920 ; iv. உ.ப. 62 ; v. 18×13 செ. மீ. ; vi. இலவசம் ; vii. இரண்டாம், மூன்றும் பார மாணவர் களுக்கான பூகோள நூல்; viii. 162/1920/II.

U.1

2274. i. நம்நாடும், பிறநாடும்.—முதற் பாகம்: முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கோ., லிமிடெட், சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. 1919 ; iv. உ.ப. 127 ; v. 19×13 செ. மீ.; vi. 0—8—0 ; vii. இதில் பல நாடுகளின் பூகோள அமைப்பு, மக்கள், அவர்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவை பற்றிப் படத்துடன் விளக்கப்பட்டுள்ளன. பள்ளி மாணவர்களுக்கானது; viii. 103/1920/II.

U.1

2275. i. பூகோள விளக்கம்.: திருத்திய பதிப்பு ; ii. மாக் மில்லன் அண்டு கோ. , சென்னை; எஸ்.பி.சி.கே.பிரஸ், சென்னை; iii ஜனவரி, 1918; iv. உ.ப. 106; v. 18×13 செ. மீ.; vi. 0-8-0 vii. பள்ளி மாணவ மாணவிகள் எளிதில் கற்றுக்கொள்ளும் முறையில், பூகோளம், இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. இது முதல் பாகமாகும். இந்தியாவும், தென் கண்டங்களும் பற்றிய பூகோளச் செய்திகளை விளக்குவது. பட விளக்கங்களுடன் கூடியது. ஒவ்வொரு பாட இறுதியிலும் வினாக்கள் அமைந்துள்ளன; viii. 610/1919/I.

U.1

2276 i. பூகோள விளக்கம்—இரண்டாம் பாகம்.; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1918 ; iv. உ.ப. 116 ; v. 19×13 செ மீ. ; vi. 0-8-0 ; vii. யூரேசியா, வட அமெரிக்கா, பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் ஆகியவைகளைப்பற்றின பூகோள விளக்கங்கள், பட விளக்கங்களுடன் அமைக்கப்பட்டுள்ளன. இது இரண்டாம் பாக மாகும். பாடசாலை மாணுக்கர்களின் உபயோகத்துக்காக எளிய நடையில் எழுதப்பட்டது; viii. 989/1919/I.

U.1

பேர்கிரீவ், ஜே.

2277. i. உருண்டை உலகம்: முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்ட் கம்பெனி, சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. உ.ப. 111 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—6—0 ; vii. உருண்டையான உலகத்தைப்பற்றிய பூகோள விவரம், இப்புத்தகத்தில் படத்துடன் விளக்கப் பட்டுள்ளது. இது, பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்குப் பாடப் புத்தகமாக

வைக்கும் நோக்கத்துடன் எழுதப்பட்டது. உலகில் உள்ள எல்லாக் கண்டங்களைப் பற்றிய விவரமும் இதன்கண் உள; viii. 592/1919/IV.

U.1

**வீரராகவாசாரியார், கே.ஏ.**

2278. i. பூமி வர்ணனை: புதிய பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ., சென்னை; ஜஸ்டிஸ் பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. மே, 1918; iv. உ.ப. 180; v. 18×12 செ. மீ.; vi. 0-7-6; vii. பூமியின் பூகோள வர்ணனை படவிளக்கங்களோடு அமைந்துள்ளது. எல்லா நாடுகளைப்பற்றியும், சீதோஷ்ண நிலைமைகள் பற்றியும், விளக்கங்கள் இதில் அடங்கியுள்ளன. இது முதல் பாகமாகும்; viii. 407/1919/I.

U.1

**ஸைட், ஜீ. ஏ.**

2279. i. புவி வர்ணனை: முதற் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. செப்டெம்பர், 1919; iv. உ.ப. 114; v. 19×13 செ.மீ.; vi. 0-7-0; vii. உயர்தர தொடக்கப்பள்ளி மாணுக்கர்களுக்கான பூமியின் பூகோள விளக்கங்கள் பட விளக்கங்களுடன் விளக்கப்பட்டிருக்கின்றன; viii. 419/1919/IV.

U.1

## 912 படம்

**சுப்பிரமணிய ஐயர், ஏ.**

2280. i. பூகோள படங்கள்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. ஜூலை, 1919; iv. உ. ப. 42; v. 25×19 செ. மீ.; vi. 0-10-0; vii. இது பள்ளி மாணவர்களுக்கான பூகோளப் பாடங்களடங்கிய நூல். இந்தியா பற்றிய பல செய்திகளும் சிறப்பாகத் திரட்டித் தரப்பட்டுள்ளன. உலகத்தின் பிற பகுதிகளைப் பற்றிய படங்களும், முக்கிய செய்திகளும் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 389/1919/III.

U.1

## 913 பழமைச் சின்னங்கள்

**கேடன், ஏ.ஜீ.**

2281. i. பண்டைக் காலத்தைப்பற்றிய கதைகளும் புராதனப் பழக்க வழக்கங்களும்: முதற் பதிப்பு; ii. மாகமில்லன் அண்ட கம்பெனி, சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. மே, 1917; iv. உ.ப. 59; v. 19×13 செ. மீ.;

vi. 0–3–0 ; vii. உலகில் புராதனமானதும், நாகரிக மேம்பாடுகளுடன் விளங்கியதுமான அல்ஜீரியா, எகிப்து பாலஸ்தீனம், பினீஷியா, கிரீஸ், உரோம் நகரம் என்னும் இடங்களின் வரலாறும், மக்களுடைய வரலாறும் விவரிக்கப் பட்டுள்ளன. ஏழு படங்களும் உள. இது, எ.ஜி. கேடன் என்னும் பண்டிதையால் செய்யப்பட்ட நூலின் மொழி பெயர்ப்பு. தமிழில் மொழி பெயர்த்தவர் பெயர் குறிப்பிடப்படவில்லை; viii. 766/1917/IV. U.71

## 913. 42 இங்கிலாந்து

**சிதாராமராவ், எம்.**

**2282.** i. பிரிட்டனும் அதன் காலனிகளும்: முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; பி. ஆர். ராம ஐயர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. செப்டம்பர், 1920 ; iv. உ. ப. 89 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–7–0 ; இந் நூலில் பிரிட்டனைப் பற்றியும், அதன் காலனிகளைப் பற்றியும் நன்கு விவரமாக விளக்கப்பட்டுள்ளன. பட விளக்கங்களுடன் கூடியது; viii. 248/1920/IV. U.56

**வீரராகவாசாரியார், கே.ஏ.**

2283. i. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பூகோளம்: முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1918 ; iv. உ.ப. 260 ; v. 18×12 செ. மீ. ; vi. 1—0—0 ; vii. இதனை உயர்நிலை, நடுத்தரப்பள்ளிகளில் பயிலும் 7, 8, படிவம் அல்லது வகுப்பு மாணவர்களுக்கும், ஆரம்ப ஆசிரியர் பயிற்சிப்பள்ளி மாணவர் களுக்கும் பாடப்புத்தகமாக வைக்கலாம் என்பதை முகவுரை மூலம் அறியலாம். ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்ட ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஐரோப்பா போன்ற கண்டங்களில் உள்ள நாடுகளின்பூகோள அமைப்பினை ஆசிரியர் மிகவும் தெளிவாக விளக்கியுள்ளார். தேசப்படங்களும், பிறவும் இடம் பெற்றுள்ளன; viii. 337/1918/II. U.56

## 915. 4 பூகோளம் இந்தியா

**காமிரான் மாரிசன்**

**2284.** i. நம்முடைய சுதேசம்: முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. ஜுன், 1919 ; iv. உ. ப. 64 ; v. 25×19 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. இது சென்னை மாநிலத்தின் பூகோள நூல். பள்ளி மாணவர்களுக்கு ஏற்றது ; படங்களுடன் கூடியது; viii. 859/1919/II.

**2285.** i. மனிதனின் இருப்பிடம்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. ஜூன், 1919; iv. உ. ப. 54; v. 25×19 செ. மீ.; vi. 0-8-0; vii. பள்ளி மாணவர்களுக்கான தமிழ்ப் பாடநூல். பட விளக்கங்கள் மிக உண்டு. பூகோளம் பற்றிய பொதுச்செய்திகளை விளக்குவது இந்நூல்; viii. 858/1919/II.

U.44

**சீதாராம ராவ், மு.**

**2286.** i. படப்பூகோளம்: முதற் பதிப்பு; ii. மு. சீதாராம ராவ், இராஜமந்திரி; விக்டோரியா அச்சுக்கூடம், வேலூர்; iii. ஜூன், 1918; iv. உ. ப. 68; v. 18×13 செ. மீ.; vi. 0—4—6; vii. சிறிய வகுப்புப் பிள்ளைகளுக்கேற்றபடி படங்களைச் சேர்த்து விரிவாகவும், விளக்கமாகவும் எழுதப் பட்ட பூகோளம் ஆதலின், இது படப்பூகோளம் என்னும் பெயரினை உடையதாயிற்று; viii. 908/1918/II.

U.44

**சுப்பிரமணிய சர்மா, நெ.ரா.**

**2287.** i. திருநெல்வேலி ஜில்லா பூகோள சாஸ்திரம்: புதிய பதிப்பு; ii. இ. மா. கோபால கிருஷ்ணக் கோன், மதுரை; எக்செல்சியர் பிரஸ், மதுரை; iii மே, 1920; iv. உ. ப. 80; v. 18×13 செ.மீ.; vi. 0-4-0; vii. திருநெல்வேலி மாவட்டத்தினைப் பற்றிய பூகோளக் குறிப்புக்கள் இதில் உள்ளன. பள்ளி மாணவர்களுக்கேற்ற பூகோளப் பாட நூல், பட விளக்கங்களுடன் கூடியது. ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் வாழ்த்துப் பாடடுன் கூடியது; viii. 85/1920/III.

U.4411

**செல்லப்ப சாஸ்திரியார், டி.வி.**

**2288.** i. பூகோள சாஸ்திரம்—கோயம்புத்தூர் ஜில்லா: திருத்திய பதிப்பு; டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை; டி. வி. சி. பிரஸ், சென்னை; iii. மார்ச், 1920; iv. உ. ப. 42; v. 19×13 செ.மீ.; vi. 0-3-6; vii. நான்காம் வகுப்பிற்கான பூகோளப் பாடநூல். கோயம்புத்தூர் மாவட்டத்தைப் பற்றிய தகவல்கள் அடங்கியுள்ளன; viii. 154/1920/II.

U. 4411

**2289.** i. பூகோள சாஸ்திரம்— செங்கற்பட்டு ஜில்லா: மூன்றாவது ஸ்டாண்டர்டுக்கு உரியது; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை; டி. வி. சி. பிரஸ்; சென்னை; iii. அக்டோபர், 1916; iv. உ. ப. 34; v. 19×13 செ.மீ.;

vi. 0–3–0 ; vii. செங்கற்பட்டு மாவட்டத்தின் பரப்பு, தட்ப வெப்ப நிலை, பருவகால நிலை, விளை பொருள்கள் முதலியன பற்றிய செய்திகளை இந்நூலில் காணலாம். இம்மாவட்டத்தின் தரைப்படம் ஒன்றும் உண்டு. viii. 305/1917/I.

U.4411

2290. i. பூகோள சாஸ்திரம்—சென்னப்பட்டணம் ஜில்லா : 3–வது ஸ்டாண்டர்டுக்குரியது ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை ; டி. வி. சி. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1916 ; iv. உ. ப. 42 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. சென்னை மாவட்டத்தின் பூகோள அமைப்பு, தட்பவெப்பநிலை, பருவம் முதலிய பூகோளச் செய்திகளை இந்நூலில் காணலாம். மூன்றுவது வகுப்பு மாணவர்க் குரியது. படங்களுடன் கூடியது. viii. 300/1917/I.

U.4411

2291. i. பூகோள சாஸ்திரம்— சேலம் ஜில்லா : திருத்திய பதிப்பு ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை ; டி. வி. சி. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. உ. ப. 40 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–3–6 ; vii. சேலம் மாவட்டத்தினைப் பற்றிய பூகோளத் தகவல்கள் இதில் தரப்பட்டுள்ளன. படவிளக்கங்களுடன் கூடியது viii. 155/1920/II.

U.4411

2292. i. பூகோள சாஸ்திரம்—தஞ்சாவூர் ஜில்லா : திருத்திய பதிப்பு ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்ட் சன்ஸ், சென்னை ; டி. வி. சி. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. உ. ப. 53 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–3–6 ; vii. தஞ்சாவூர் மாவட்டத்தின் பூகோள அமைப்பு, நாடு, நகரம், மற்றும் அதனைச் சார்ந்த பல தகவல்கள் இதில் கூறப் பட்டுள்ளன. படவிளக்கங்களுடன் கூடியது. நான்காம் வகுப்புக்குரியது. viii. 153/1920/II.

U.4411

2293. i. பூகோள சாஸ்திரம்—திருச்சிராப்பள்ளி ஜில்லா : திருத்திய பதிப்பு ; ii, டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை ; டி. வி. சி. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. உ. ப. 38 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–3–6 ; vii. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த பூகோளத் தகவல்கள் இதில் அடங்கியுள்ளன. படவிளக்கங்களுடன் கூடியது. நான்காம் வகுப்புக்கான பாடப்புத்தகம். viii. 156/1920/II.

U.4411

2294. i. பூகோள சாஸ்திரம்—தென் ஆற்காடு ஜில்லா ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை ; டி. வி; சி. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. உ. ப. 38 . v. 19×13 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. தென் ஆற்காடு மாவட்டத்தைப் பற்றிய பூகோள சம்பந்தமான தகவல்கள் இதில் தரப்பட்டுள்ளன. படவிளக்கங்களுடன் கூடியது. பொது மததிய முறையை ஒட்டி எழுதப்பட்டது. நான்காம் வகுப்புக்கான பாடப்புத்தகம். viii. 157/1920/II.

U·4411

2295. i. பூகோள சாஸ்திரம்—வட ஆற்காடு ஜில்லா : திருத்திய பதிப்பு; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை; டி. வி. சி. பிரஸ், சென்னை; iii. மார்ச், 1920; iv. உ. ப. 38; v. 19×13 செ. மீ.; vi. 0–3–6; vii. வட ஆற்காடு மாவட்டத்தைப்பற்றிய பூகோளப்பாட நூல். நான்காம் வகுப்பு மாணவர்களுக்கேற்றது; படங்களுடன் கூடியது. viii. 158/1920/II.

U.4411

2296. i. தஞ்சாவூர் ஜில்லா : முதற் பதிப்பு; ii. டி. வெங்காஜீ குப்புசாமி ஐயர் அண்டு கோ., திருச்சிராப்பள்ளி; ii. பி. ஆர். இராம ஐயர் அண்டு கம்பெனி, சென்னை; iii. பிப்ரவரி, 1919; iv. உ. ப. 40; v. 19×13 செ. மீ.; vi. 0–3–6; vii. இதில் தஞ்சாவூர் மாவட்டத்தின் பூகோள அமைப்பு, இயற்கை வளம், தொழில், மக்கள், மொழி, மற்றும் போக்கு வரவு, அரசியல் நிர்வாகம், நகரம் ஆகியவைபற்றிக் கூறப்பட்டுள்ளன. இம் மாவட்டத்தைச்சேர்ந்த தாலுகாக்கள் ஒவ்வொன்றைக் குறித்தும் தனித்தனிவிளக்கம் தரப்பட்டுள்ளன. viii. 425/1919/II.

U.4411

**துரைசாமி ஐயங்கார், கே.**

2297. i. சென்னை இராஜதானியின் பொதுவிவரணம் : முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. ஜனவரி, 1919; iv. உ. ப. 142; v. 19×13 செ. மீ.; vi. 0–6–0; vii. இது பள்ளீ மாணவர்களுக்கேற்ற பூகோள நூல். பூமியைப் பற்றிப் பொதுவான விவரங்களும், கண்டம், சமுத்திரம், மலை, நாடு, ஆகியவை பற்றியும் குறிப்பாக சென்னை மாநிலத்தைப்பற்றிய பூகோளம் பற்றிய தகவல்கள் விரிவாகவும் சொல்லப்பட்டுள்ளன. படங்களும் சில கொடுக்கப் பட்டுள்ளன. viii. 590/1919/II.

U.4411

2298. i. படங்களை ஒட்டின பூகோள சாஸ்திரம்: முதற் புத்தகம்; சென்னை இராஜதானி; ii. கே. துரைசாமி ஐயங்கார், சென்னை; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. ஏப்ரல், 1918; iv. உ. ப. 58; v. 24×19 செ. மீ.; vi. 0–8–0; vii. இது சென்னை மாநிலம் பற்றிய படங்களையொட்டின பூகோள நூல். முதற் புத்தகமாகும் இதை, ஆசிரியர் மிகவும் எளிதாகவும், நடைமுறைக்கேற்பவும், விஞ்ஞானமுறைக்கேற்பவும் படங்களுடன் வெளியிட்டுள்ளார். இந்தியாவைக் குறித்தும், உலகிலுள்ள கண்டங்களையும், மகா சமுத்திரங்களையும் குறித்தும் நூலிறுதியில் இரண்டு அத்தியாயங்கள் விவரிக்கின்றன. viii. 533/1918/II.

U.4411

2299. i. படங்களை ஒட்டின பூகோள சாஸ்திரம்: முதற் புத்தகம்; சென்னை இராஜதானி; திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மே, 1919; iv. உ. ப. 58; v. 25×19 செ. மீ.; vi. 0–8–0; vii. சென்னை மாநிலத்தைப் பற்றிய பூகோளநூல். பள்ளி மாணவர்களுக்கேற்றது; படங்களைக் கொண்டது. viii. 601/1919/II.

U.4411

2300. i. படங்களை ஒட்டின பூகோள சாஸ்திரம்—முதற் புத்தகம்: சென்னை இராஜதானி: புதிய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1920; iv. உ. ப. 61; v. 25×19 செ. மீ.; vi. 0–8–0; vii. சென்னை மாநிலம் பற்றிய பூகோள அமைப்பு, இயற்கை நிலை மற்றும் காற்று, மழை, நில வளம், நீர் வளம், மக்கள், வாணிபம், நகரம் ஆகியவை பற்றிய பல தகவல்கள் இதில் தரப்பட்டுள்ளன. பள்ளி மாணவர்களுக் கேற்றது; படவிளக்கங்களுடன் கூடியது. viii. 417/1920/III.

U.4411

**நடேசய்யர், சி. கே.**

2301. i. பூகோளப்பாடல்கள்: முதற் பதிப்பு; ii. சி. கே. நடேச ஐயர், வேலூர்; ரிக்கார்டு அச்சுக்கூடம், வேலூர்; iii. செப்டெம்பர், 1916; iv. உ. ப. 4+78+32+32; v. 18×13 செ. மீ.; vi. 0–2–0; vii. தொடக்கப்பள்ளி மாணவ, மாணவிகளுக்கு எளிதில் புரியும் வண்ணம் பூகோள விளக்கம் பற்றிய பாடல் களைக்கொண்டது, இப்புத்தகமாகும். சென்னை மாநிலம் குறித்தும், தஞ்சை, தென்னாற்காடு ஜில்லாக்களைக் குறித்தும் விளக்கும் பாடல்கள் இதில் உள. viii. 1225/1916/III.

U.4411

2302. i. பூகோளப் பாடல்கள் : பாகம்-1 : திருத்திய மூன்றும் பதிப்பு; ii. சி. கே. நடேச ஐயர், தஞ்சாவூர்; லாலி எலக்டிரிக் அச்சுக்கூடம், தஞ்சாவூர்; iii. ஜூன், 1917; iv. செ. மூ. உ. எ. 142; v. 18×12 செ. மீ.; vi. 0–2–6; vii. சென்னை மாநிலத்தினைப்பற்றிய பாடல்கள் இதில் உண்டு. பாடல்கள், பூகோள அமைப்பினைப்பற்றி விளக்குகின்றன. கும்மி இசையில் அமைந்துள்ளன. பள்ளிச்சிறுர்களுக்கேற்ற முறையில் அமைந்தன இப்பாடல்கள்; கும்மி கோலாட்டங்களாக பலவித ராகங்களில் பாடக்கூடியவை. தஞ்சாவூர், தென்னற் காடு ஜில்லாக்களின் செய்திகளைச் சிறப்பாக விளக்க, வேறு இரண்டு கும்மிப்பாடல்களும் இதில் உள. viii. 1041/1917/II.

U.4411

2303, i. பூகோளப்பாடல்கள் : முதற் பதிப்பு; ii. சி. கே. நடேச ஐயர், தஞ்சை; லாலி எலக்டிரிக் பிரிண்டிங் ஒர்க்ஸ், தஞ்சாவூர்; iii. ஏப்ரல், 1918; iv. செ. மூ. எ. 130; v. 19×12 செ. மீ.; vi. 0–2–6; vii. மூன்றும் வகுப்பு, நாலாம் வகுப்பு மாணவர்களுக்கு ஏற்ற முறையில் பூகோளத்தைப்பற்றிய பாடல்கள் அடங்கிய ஒரு புத்தகம். இதில் உள்ள பாடல்கள் கும்மி, கோலாட்டங்களாகப் பலவித ராக, தாளங்களில் பாடக்கூடியவை. சென்னை அவுட்லயின்ஸ் கும்மி, திருச்சிராப்பள்ளி ஜில்லாக்கும்மி, மதுரை ஜில்லாக் கும்மி, என்ற மூன்று கும்மிப்பாடல்களைக் கொண்டுள்ளது. புவியின் இயற்கை ஓடம் என்ற தலைப்பில் ஒரு கும்மிப் பாடல் உண்டு. செகண்டரி பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர், ம. சி. சபாபதி முதலியார் ஆகியோர் இந்நூலுக்குச் சாற்றுக்கவிகள் தந்துள்ள னர். viii. 263/1918/II.

U.4411

**நமசிவாய முதலியார், கா.**

2304. i. கோயம்புத்தூர் ஜில்லா : பூகோள புத்தகம் : திருத்திய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1917; iv. உ. ப. 64; v. 21×17 செ. மீ.; vi. 0–4–0; vii. மூன்றும் வகுப்பு மாணவர்களுக்கு ஏற்ற நிலநூல் பாடபுத்தகம். நீர், நிலப் பிரிவு, கோயம்புத்தூர் மாவட்டம் பற்றிய முக்கிய குறிப்புக்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன; படங்களுடன் கூடியது. பூகோளம் பற்றிய வரையறை வாக்கியங்கள் உரையாடல் முறையில் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 635/1917/III.

U.4411

2305. i. செங்கற்பட்டு ஜில்லா பூகோளப் புத்தகம் : திருத்திய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1920; iv. உ. ப. 64; v. 21×17 செ. மீ.; vi. 0–5–0; vii. மூன்றும் வகுப்பு மாணவர்களுக்கான பூகோளப் பாடநூல். செங்கல்பட்டு மாவட்டத்தினைப்பற்றிய பூகோளத் தகவல்கள் இதில் உண்டு. படவிளக்கங்களுடன் கூடியது. viii. 706/1020/III.

U.4411

2306. i. சென்னை ஜில்லா பூகோளம் : திருத்திய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. உ. ப. 67; v. 21×17 செ. மீ.; vi. 0-5-0; vii. இது மூன்றும் வகுப்பிற்கான பூகோளப்பாட நூல். இதில் சென்னை மாவட்டத்தின் பூகோளத் தகவல்கள் தரப்பட்டுள்ளன. பட விளக்கங்களுடன் கூடியது. viii. 707/1920/III.

U.4411

2307. தஞ்சாவூர் ஜில்லா பூகோளப்புத்தகம் : திருத்திய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1917; iv. உ. ப. 64; v. 21×17 செ. மீ.; vi. 0-4-0; vii. உரையாடல் வடிவில் நீர், நிலப்பிரிவு, படம் எழுதல், அளவு, தஞ்சை மாவட்டத்தைப்பற்றிய முக்கியக்குறிப்புகள் முதலியன இதில் தரப்பட்டுள்ளன. படங்களுடன் விளக்கம் தரும் நூல். ஓர் இனிவ கதைபோல பூகோளச்செய்திகளை வகுத்து உரைப்பது. viii. 636/1917/III.

U.4411

2308. i. தென்னுற்காடு ஜில்லா பூகோளப்புஸ்தகம் : திருத்திய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ, சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1916; iv உ. ப. 68; v. 21×17 செ. மீ.; vi. 0-4-6; vii. தென்னுற்காடு மாவட்டத்தினைப்பற்றின பூகோளப்புத்தகம் மூன்றும் வகுப்பிற்குரியது. படவிளக்கங்களுடன் அமைந்துள் ளது. viii. 440/1916/IV.

U.4411

2309. i. பூகோளப் புஸ்தகம் : சென்னப் பட்டணம் ஜில்லா : திருத்திய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸடன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. உ. ப. 68; v. 21×17 செ. மீ.; vi. 0–4–0; vii. மூன்றும் வகுப்பிற்கான தமிழ்ப் பூகோளப்பாடப் புத்தகம், இதில் சென்னை மாவட்டத்தினைப்பற்றின பூகோள விவரங்கள் பட விளக்கங்களுடன் விளக்கப்பட்டுள்ளன. viii. 984/1916/IV.

U.4411

2310. i. மூன்றும் வகுப்புப் பூகோளப்புத்தகம்: இராமநாதபுரம் ஜில்லா; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1914; iv. உ. ப. 62; v. 21×17 செ. மீ.; vi. 0–4–0; vii, இராமநாதபுர மாவட்டத்தின் பூகோளத்தைப்பற்றிய குறிப்புகள் இதில் காணக்கி க்கின்றன. உலகப்பூகோளம் பற்றிப் பொதுவாகவும், இராமநாதபுரம் மாவட்டத்தைக் குறித்து விளக்கமாகவும் அமைந்தது. படங்கள், அங்கங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 833/1916/II.

U.4411

2311. i. வட ஆற்காடு ஜில்லா பூகோளப் புஸ்தகம்: திருத்திய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1916; iv. உ. ப, 60; v. 21×17 செ. மீ.; vi. 0-4-0; vii. மூன்றும் வகுப்பிற்கான தமிழ்ப்பூகோளப் பாடப்புத்தகம். வடஆற்காடு மாவட்டத்தைப் பற்றின பூகோள விவரங்கள் அடங்கிய புத்தகம். பட விளக்கங்களுடன் அமைந்துள்ளது. viii. 439/1916/IV.

U.4411

**நரசிம்மலு நாயுடு, பகடால**

2312. i. ஆரியர் திவ்யதேச யாத்திரையின் சரித்திர இரண்டாம் பாகமாகிய தக்ஷின இந்தியா சரித்திரம்: முதற் பதிப்பு; ii. எஸ். சிவசங்கர செட்டி, சென்னை; ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1919; iv. உ. ப. 939; v. 21×13 செ. மீ.; vi. 5–0–0; vii. தென்னிந்தியாவில் உள்ள புண்ணிய தலங்கள் அனைத்தையும் பற்றிய வரலாறுகளையும், விளக்கங்களையும் மிகவும் விரிவான முறையில் இப்புத்தகத்தில் காணலாம். குறிப்பாக விஜயநகர ஆட்சியின் சிறப்பும், மதுரையிலிருந்து அரசாண்ட நாயுடு மன்னர்களின் சிறப்பும் விவரமாக எடுத்துக்கூறப்பட்டுள்ளன. நூலின் பொருளடக்கம் மிகவும் விரிந்த முறையில் தெளிவுபட அமைக்கப்பட்டுள்ளது. தேச வரலாறுகளும், பல பெரியார்களின் சரித்திரங்களும் இதில் விளக்கப்பட்டுள்ளன. தலங்களுக்குச் செல்வோர்க்கு உதவியான பிரயாணக் குறிப்புகளும் நிரம்ப உள. viii. 570/1919/IV.

U.44

**நாராயணசாமி ஐயர், பி.**

2313. i. சயின்ஸ் அண்டு ஜியாக்ரபி: மூன்றும் பதிப்பு; ii. பி. நாராயணசாமி ஐயர், தஞ்சை; லாலி எலக்டிரிக் பிரிண்டிங் பிரஸ், தஞ்சாவூர்; iii. ஏப்ரல், 1917; iv. உ. ப. 158; v. 18×13 செ. மீ.; vi. 0–8–0; vii. நடுத்தரப்பள்ளி மாணவர்களுக்கேற்ற முறையில் தொடக்கமுறை அறிவியல்,

பூகோளம் ஆகிய பாடங்கள் நடைமுறை விளக்கங்களோடு இப் புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. அறிவியலும், பூகோளமும் இந்நூலில் இணைந்து காணப்படுகின்றன; படங்கள் சில உள. viii. 319/1918/II.

U.44

2314. i. **பூகோள சாஸ்திரம் : சென்னை ராஜதானி** : முதற் பதிப்பு; ii. டி. வெங்காஜி குப்புசாமி ஐயர் அண்ட் கோ., திருச்சிராப் பள்ளி; இந்தியா பிரிண்டிங் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1918; iv. உ. ப. 112; v. 19×13 செ. மீ.; vi. 0–4–6; vii. ஆரம்பப்பாடசாலை மாணுக்கர்களுக்கான பாடப்புத்தகம். சென்னை மாநிலத்தைப்பற்றின முழு விவரங்களும் படங்களுடன் விளக்கப்பட்டிருக்கின்றன. பொதுவான பூகோளச்செய்திகளும், இந்தியாவைப்பற்றிய செய்திகளும் முதற்கண் அமைந்துள. சென்னை ராஜதானியைக் குறித்த சிறப்பு விவரங்கள் விரிவாக இடம் பெற்றுள்ளன. viii. 311/1919/IV.

U.4411

2315. i. **பூகோள சாஸ்திரம்: திருச்சிராப்பள்ளி ஜில்லா** : திருத்திய பதிப்பு; ii. டி. வெங்கட்ஜி குப்புசாமி ஐயர் அண்டு கோ., திருச்சிராப்பள்ளி; சிவராம ஐயர் அண்டு கம்பெனி, பிரிண்டர்ஸ், சென்னை; iii. ஏப்ரல், 1919; iv. உ. ப. 38; v. 20×13 செ. மீ.; vi. 0–3–6; vii. இந்நூல் பள்ளி மாணவர்களுக்கேற்ற பூகோள நூல். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் பூகோள அமைப்பைப் பற்றியும், மற்றும் இதர இன்றியமையாத செய்திகளும் தரப்பட்டுள்ளன. மூன்றாவது வகுப்பு பிள்ளைகளுக்கு உபயோகமாகச் செய்யப்பெற்றது. viii. 424/1919/II.

U.4411

2316. i. **பூகோள விளக்கம் : முதற்பாகம்** : திருத்திய பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை; எஸ். பி.சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. 1919; iv. உ. ப. 106; v. 19×13 செ. மீ.; vi. 0–8–0; vii. இயற்கை அமைப்பு, இடவேற்றுமை, ஆகிய இவற்றை ஆதாரமாகக் கொண்டு, பூமியின் வரலாறும், அதிலுள்ள தேசங்களின் விவரமும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இந்தியா, பர்மா, ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா, ஆஸ்திரேலியா, ஆசியா இவை பற்றி இதன்கண் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. viii. 102/1920/II

U.4411

**மாணிக்கம்பிள்ளை, எஸ்., சேலம்**

2317. i. **சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம்** : முதற் பதிப்பு; ii. எஸ். மாணிக்கம் பிள்ளை, சேலம்; ஷண்முக விலாச அச்சியந்திரசாலை, சேலம்; iii. 1916; iv. செ. மூ. உ. ப. 276;

v. 21×14 செ. மீ.; vi. 1–0–0; vii. தென்னிந்தியாவிலுள்ள பல சிவதலங்களைச் சென்று வணங்குவதற்குப் பயன்படும் சில விதிமுறைகளை இந்நூலின்கண் காணலாம். தேவாரம் பெற்ற தலங்கள் 274ஐயும், சென்னையிலிருந்து புறப்பட்டுச்சென்று, கண்டு, மீண்டும் சென்னை வந்து சேரும் வகையில் விவரங்கள் முறைப்படுத்தித் தரப்பட்டுள்ளன. சமய ஒழுக்கங்கள் குறித்தும், பல விரதங்களைக் குறித்தும் விளக்கம் தந்துள்ளார். தேவாரம், திருவருட்பாத் தோத்திரப் பாசுரங்களும் தெரிந்து கொடுக்கப்பட்டிருக்கின்றன. சுருங்கக் கூறின், சிவபக்தர்கள் தெரிந்து கொள்ளவேண்டிய பல செய்திகள் இதில் உள்ளன. viii. 435/1916/III.

U.44

மார்ஸ்டன், ஈ.

2318. i. பூகோள சாஸ்திரம்: சென்னை இராஜதானி: திருத்திய பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1919; iv. உ. ப. 139; v. 18×13 செ. மீ.; vi. 0–6–0 vii. சென்னை இராஜதானியைப்பற்றிய பூகோள விளக்கங்கள் அதற்குரிய வரைபடங்களுடன் மிகவும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. ஆங்கில முன்னுரையுடன் கூடியது. viii. 591/1919/IV.

U.4411

2319. i. பூகோள விளக்கம்: முதற்பாகம்; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ்; சென்னை; iii. 1916; iv. உ.ப. 127; v. 18×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. பாடசாலை மாணாக்கர்களுக்கு ஏற்றது. இது மார்ஸ்டன் என்பார் ஆங்கில மொழியில் அமைத்த நூலின் மொழி பெயர்ப்பு. இந்தியாவும் தென் கண்டங்களும் விவரிக்கப்பட்டுள்ளன. படங்கள் பல இடம் பெற்றுள்ளன. viii. 62/1916/IV.

U.4411

2320. i. பூகோள விளக்கம்: இரண்டாம் பாகம்; ii. மாக்மில்லன் அண்ட் கம்பெனி, சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ.ப. 101; v. 19×12 செ.மீ.; vi. 0-5–0; vii. யூரேஷியாவும், வட அமெரிக்காவும்; ஆங்கிலேய இராச்சியங்களும் விவரிக்கப்பட்டுள்ளன. படங்களுடன் கூடியது. viii. 63/1916/IV.

U.4411

2321. i. பூகோள விளக்கம்: இரண்டாம் பாகம்; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை; எஸ்.பி.சி.கே, பிரஸ், சென்னை; iii. 1917; iv. உ.ப. 88; v. 18×13 செ.மீ.;

vi. 0-5-0; vii. இயற்கையமைப்பு, இட வேற்றுமை ஆகிய இவற்றை ஆதாரமாகக் கொண்டு, பூமியின் வரலாறும், அதிலுள்ள தேசங்களின் விவரமும் கூறப்பட்டுள்ளன. யூரேஷியா, பிரிட்டிஷ் தீவுகள், வட அமெரிக்கா பற்றி இந் நூல் விவரிக்கிறது. படங்களுடன் கூடியது. viii. 883/1917/III.

U.4411

முத்தையா, கே.எஸ்.

2322. i. நமது புண்ணிய பூமி அல்லது காசி : முதற் பதிப்பு; ii. கே. எஸ். முத்தையா அண்டு கம்பெனியார்; பென்ரோஸ் அண்டு கோ., சென்னை; iii. பிப்ரவரி, 1917; iv. உ.ப. 95; v. 18×13 செ.மீ., vi. 0-12-0; vii. இந்து சமய மக்களின் யாத்திரைத் தலமான காசியைப் பற்றியும், அதனை அடையும் வழிபற்றியும், காசியில் பார்க்கத் தக்க இடங்களைப் பற்றியும் இதில் விளக்கப் பெற்றிருக்கிறது. காசியின் நாமதேயங்கள் தொடங்கி, உஜ்ஜயினி ஈறாக 81 இயல்கள் இதில் உள்ளன. பல முக்கிய இடங்களின் புகைப்படமும், இதில் இணைக்கப் பெற்றுள்ளன. சென்னை, வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்களும், காசி. பா. ஆதிமூர்த்தி என்பாரும் இந்நூலுக்குச் சாற்றுக்கவி பாடியுள்ளனர். viii. 532/1917/I.

U.4411

வார்லிஸ், பி.சி.

2323. i. படங்களடங்கிய இந்தியா—பூகோளம் : முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை; எஸ்.பி.சி.கே; பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1919; iv. உ. ப. 33. v. 24×19 செ.மீ.; vi. 0-6-0; vii. இந்தியாவைப் பற்றிய வரை படங்களும் அதன் விளக்கங்களும், பூகோள அமைப்புக்களைப் பற்றிய முழு விவரங்களும் இப்புத்தகத்தில் உள்ளன. viii. 588/1919/IV.

U.4411

வீரராகவாசாரியார், கே. ஏ.

2324. i. பூகோள வாசக புத்தகம்—இராமநாதபுரம் ஜில்லா : முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1919; iv. உ ப. 107; v. 18×13 செ. மீ.; vi. 0-4-6; vii. இது பள்ளி மாணவர்களுக்கான தமிழ்ப்பாட நூல். இராமநாதபுரம் மாவட்டத்தைப் பற்றிக் குறிப்பாக விளக்கப்பட்டுள்ளது. இது இரு பாகமாக அமைந்துள்ளது. முதற பாகம் பூகோளம் பற்றிய பொதுச் செய்திகளையும், இரண்டாம் பாகம் சிறப்பாக இராமநாதபுரம் மாவட்டத்தைக் குறித்தும் அமைந்துள; படங்களுடன் கூடியது. தாலுகா வாரியாகப்

பட்டணங்களையும், பெரிய கிராமங்களையும் பற்றிய செய்திகளும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த ஜில்லாவின் பொதுச்சரித்திரமும் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 718/1919/III

U 4411

2325. i, பூகோள வாசக புஸ்தகம்—கோயம்புத்தூர் ஜில்லா : முதற் பதிப்பு; ii, மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. ஜூன், 1918; iv. உ. ப. 104; v. 18×13 செ. மீ.; vi. 0—4—6; vii. ஆரம்பப் பாடசாலை மாணவர்களுக்கேற்ற முறையில் எழுதப்பட்டுள்ள பூகோளப் புத்தகமாகும் இது முதல் பாகத்தில் பொதுவாகப் பூகோளத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இரண்டாம் பாகத்தில் கோவை மாவட்டத்தைப் பற்றிய முழு விரிவான பூகோளச் செய்திகள் எழுதப் பட்டுள்ளன. பட விளக்கங்களையும் இதில் காணலாம். viii.85/1918/III.

U.4411

2326. i. பூகோள வாசக புஸ்தகம் : செங்கற்பட்டு ஜில்லா முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. உ.ப. 96; v. 18×13 செ.மீ.; vi. 0—4—6; vii. செங்கற்பட்டு மாவட்டத்தின் அமைப்பு, எல்லை மற்றும் பூகோள சம்பந்தப்பட்ட கருத்துக்களும், அம்மாவட்ட மக்கள், தொழில், விளைவு, வர்த்தகம், மொழி, விலங்கினம், ஆகிய வற்றைப் பற்றிய செய்திகளும், நகரம், கிராமம் நிர்வாக அமைப்புகள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. படங்கள் மிகுதி யாகக் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 295/1917/IV.

U.4411

27. i. பூகோள வாசக புஸ்தகம் : சென்னைப் பட்டணம் ; முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1917; iv. உ.ப. 108; v. 18×13 செ.மீ.; vi. 0—4—6; vii. பூகோள சார்பான செய்திகள், குறிப்பாக, திசை, வாயு, வானம், சூரியன், சந்திரன், பருவம் முதலியன பற்றியும், நீர், ஆறு, நிலம் முதலியன பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. குறிப்பாகச் சென்னை நகரத்தைப் பற்றிய விவரங்கள் விளக்கப் பட்டுள்ளன. பல வரைபடங்கள் உள்ளன. viii. 296/1917/IV.

U.4411

2328. i. பூகோள சாஸ்திரம் : சென்னை ராஜ்யம் : புதிய பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனி, சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1917; iv. உ.ப. 122;

v. 18×13 செ.மீ.; vi. 0—5—0; vii. அண்ட வெளி பற்றியும், பூமியைப் பற்றியும், நீர்ப்பிரிவு, நிலப்பிரிவு, காற்று, மேகம், கண்டங்கள் பற்றியும், இந்தியாவின் பூகோள அமைப்புப் பற்றியும், குறிப்பாகச் சென்னை மாநிலத்தின் தட்ப வெப்ப நிலை, நதி, மலை, விளைபொருள், தொழில், வர்த்தகம், துறைமுகம், போக்குவரவு, மொழி, மக்கள், அரசு, ஊர், இவைகளைப் பற்றியும் சுருங்கக் கூறுகிறது. படங்கள் பல உள. சென்னை மாநிலத்தின் வண்ணப்படம் ஒன்றும் இதில் உண்டு. viii. 158/1917/II.

U.4411

2329. i. பூகோள வாசக புஸ்தகம்—சேலம் ஜில்லா : முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிடெட், சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. 1919; v. உ. ப. 127; v. 18×12 செ.மீ.; vi. 0—4—6; vii. இதில் சேலம் மாவட்டத்தைப் பற்றிய பூகோளத் தகவல்கள் தரப்பட்டுள்ளன. தரைப்பட விளக்கங்களும் உண்டு. viii. 108/1920/II.

U.4411

2330. i. பூகோள வாசக புஸ்தகம்: தஞ்சாவூர் ஜில்லா : முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்ட் கம்பெனி, சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 108; v. 18×12 செ.மீ.; vi. 0—4—6; vii. இந் நூலில், தஞ்சாவூர் மாவட்டத்தின் நில அமைப்பு, இயற்கைச் சூழ்நிலை, நாட்டுவளம், கனிவளம், அரசியல், சமூகவியல், தொழிலியல் முதலியன பற்றி விவரிக்கப்பட்டுள்ளன. பட விளக்கங்கள் ஆங்காங்கே உண்டு. இற்றைக்கைம்பதாண்டு கட்கு முன்னர், தஞ்சை மாவட்டம் இருந்த நிலையை அறிந்து கொள்வதற்கு இஃது உறுதுணையாகும். viii. 956/1918/I.

U.4411

2331. i. பூகோள வாசக புஸ்தகம் : திருச்சிராப்பள்ளி ஜில்லா. முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை. எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1919; iv. உ.ப. 115; v. 18×13 செ.மீ.; vi. 0—4—6; vii. திருச்சி மாவட்டத்தைப் பற்றிய பூகோள விளக்கங்கள், படங்கள், வரைபடங்கள், முதலியனவற்றை இப்புத்தகத்தில் காணலாம். ஆங்கில முன்னுரையுடன் கூடியது. இதன் முற்பாகம் பூகோளம் பற்றிய பொதுச் செய்திகளை விளக்குகிறது. இரண்டாம் பாகத்தில் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைக் குறித்த விரிவான செய்திகள் அமைந்துள்ளன. viii. 90/1919/51V;

U.4441

**2332.** i. பூகோள வாசக புஸ்தகம்—திருநெல்வேலி ஜில்லா: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. உ.ப. 112; v. 18×13 செ.மீ.; vi 0-4-6; vii. ஆரம்பப் பாடசாலை மாணவர்களுக்கேற்ற பூகோளப் புத்தகம். முதல் பாகத்தில் பொதுவான பூகோள அமைப்பைப் பற்றியும், இரண்டாம் பாகத்தில், நெல்லை மாவட்டத்தைப் பற்றிய பூகோள அமைப்பினைப் பற்றியும், படத்துடன் விளக்கப் பட்டுள்ளது. viii. 710/1918/III.

U.4411

**2333.** i. பூகோள வாசக புஸ்தகம்: தென்னாற்காடு ஜில்லா: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. 1917; iv. உ ப. 116; v, 18×12 செ.மீ.; vi. 0-4-6; vii. பூகோளத்தின் பொதுவான அமைப்புகள், பருவம், நிலம், நீர், மலை, ஆறு, முதலியவற்றைக் குறித்தும், தென்னாற்காடு மாவட்ட மக்கள் மொழி, ஊர், தொழில், விளைவு, தட்ப வெப்பம், மாவட்டப் பிரிவுகள், நகரம், கிராமம், தாலுகா, முதலியவைகளைப்பற்றியும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. viii. 581/1918/I.

U.4411

**334.** i. பூகோள வாசக புஸ்தகம்: மதுரை ஜில்லா: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 108; v. 18×13 செ.மீ.; vi. 0-4-6; vii. ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கான, மதுரை மாவட்டத்தைப் பற்றிய பூகோளப் புத்தகமாகும். பட விளக்கங்களுடன் கூடியது. முதற்பாகத்தில் பூகோளம் பற்றிய பொது விவரங்களும், இரண்டாம் பாகத்தில் மதுரை மாவட்டத்தைப் பற்றிய சிறப்பு விவரங்களும் உள்ளன. இறுதிப் பகுதியில், தாலுகா வாரியாக உள்ள பட்டணங்களும், பெரிய கிராமங்களும் பற்றி விவரிக்கப்பட்டிருக்கிறது. viii. 980/1919/I.

U.4411

**2335.** i. பூகோள வாசக புஸ்தகம்—வட ஆற்காடு ஜில்லா; முதற் பதிப்பு; மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஜுன், 1918; iv. உ.ப. 104; v. 18×13 செ.மீ.; vi. 0-4-6; vii. ஆரம்பப் பாடசாலை மாணவர்களுக்கேற்ற முறையில் தயாரிக்கப்பட்ட புத்தகம். இதன் முதற் பாகத்தில், உலக பூகோள அமைப்பைப் பற்றியும், இரண்டாம் பாகத்தில், வட ஆற்காடு மாவட்டப் பூகோள அமைப்பைப்பற்றியும், படங்களுடன் விளக்கப் பட்டுள்ளது. viii. 364/1918/III.

U.4411

**வெங்கட்ராம ஐயர், சி. ஆர்.**

**2336.** i. ஜில்லா பூகோளமும், சிவிக்சும்: திருச்சிராப்பள்ளி ஜில்லா; முதற் பதிப்பு; ii. சி. ஆர். வெங்கட்ராம ஐயர், திருச்சி; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. 1916; iv. உ. ப. 38; v. 19×13 செ.மீ.; vi. 0—2—6; vii. பூகோளத்தைப் பற்றிய பொது அறிவும், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் பூகோள அமைப்பு, வளம் முதலிய பல செய்திகளையும் தருகிறது இந்நூல். மாவட்டத்தின் தரைப் படம் ஒன்றும் உண்டு. viii. 390/1917/I.

U.4411

**2337.** i. ஜில்லா பூகோளமும், சிவிக்சும்–திருச்சிராப்பள்ளி ஜில்லா: இரண்டாம் பதிப்பு; iii. ஜுலை, 1919; iv......; v .....; vi......; vii......; viii. 310/1919/IV.

U.4411

**வேங்கட்ராம சாஸ்திரிகள், பி. வாழ்குடை**

**2338.** i. செங்கற்பட்டு ஜில்லா: பூகோளம்; ii. வேங்கடராம சாஸ்திரிகள், வாழ்குடை; கணேசா பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ.ப. 39; v. 18×13 செ.மீ.; vi. 0-2-0; vii. செங்கற்பட்டு ஜில்லா பூகோளம் விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்தியா தேசத்தை முதலில் அறிமுகப்படுத்தி, அதன் பின், செங்கற்பட்டு மாவட்டத்தின் இயற்கையமைப்பு விவரிக்கப்படு கிறது. படங்களுடன் கூடியது. இந்த ஜில்லாவிலுள்ள முக்கிய ஊர்களைப் பற்றிய விவரங்கள் பிற்பகுதியில் உள. viii. 352/1916/II.

U.4411

**2339** i. வட ஆற்காடு ஜில்லா பூகோளம் திருத்திய பதிப்பு; ii. ஆர். திருமலை அண்டு கோ; சென்னை; கேம்பிரிட்ஜ் பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ.ப. 40; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0; vii. வட ஆற்காடு ஜில்லாவின் பூகோள அமைப்பை விளக்குவது. படங்களுடன் விளக்கம் தரப்பட்டுள்ளன. இந்த ஜில்லாவின் பழைய வரலாறு நூலிறு தியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 958/1916/I.

U.4411

## 920·01 வாழ்க்கை வரலாறு (பொது)

**சுப்ரமணிய ஐயர், ஏ.**

**2340.** i. ஜேம்ஸ் ஏ. காப்பர்பீல்டு சரித்திரம்: புதிய பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜுலை, 1919; iv. உ.ப. 173; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0; vii. இதில் ஜேம்ஸ் ஏ. காப்பர்பீல்டு என்பவரின்

வாழ்க்கை வரலாறு அடங்கியுள்ளது. இருபத்தெட்டு அத்தியாயங்கள் கொண்டது. அமெரிக்காவில் மக்கள் குடியேறிய காலத்தில் அவர்களுக்கு இருந்த ஊக்கமும் உழைப்பும் பிற வசதிகளும் குறித்த பல செய்திகள் இதன் மூலம் தெரியவரும். viii. 1084/1919/III.

w 1

## 920. 7 மகளிர் வரலாறு

**கிருஷ்ணமாச்சாரியார், வி. (மொ.து)**

**2341.** i. பன்னிரண்டு உத்தமிகள் கதை: இரண்டாம் பதிப்பு; ஆக்ஸ்போர்டு யூனிவர்சிட்டி பிரஸ், சென்னை; iii. 1917; iv. உ.ப. 254; v. 18×13 செ.மீ.; vi.....vii சமூக சேவை முதலியவற்றால் உலகிடை மிகு புகழ் பெற்ற பன்னிரு ஆங்கிலப் பெண்மணிகளைப் பற்றிய நூல். எலிஜபெத் பிரை, எலிஜபெத் பாரெட் பிரௌனிங், பிளாரென்ஸ நைட்டிங்கேல், ஹாரியெட் மார்ட்டினோ, ஹாரியெட் பீச்சர்ஸ்டோ, ஹார்லெட் பிரோந்தி, பிரின்செஸ் ஆலிஸ், ரொமீனிய நாட்டு ராணியாகிய எலிஜபெத், கேட் மார்ஸ்டன், பிரான்சிஸ் லவர்கால், பர்டெட் கௌட்ஸ் பெருமாட்டி, மேரி கார்ப்பென்டர் என்னும் பன்னிருவரைப் பற்றிக் கூறுகிறது. இவர் தம் உருவப் படங்களும் உள. லேடி பென்சன், லேடி அர்பத்நாட், மிஸ்கில்பெர்ட் கூப்பர், மிஸ் ஸ்பிரிங் பிரான்சன், மிஸஸ் எச். பி. கிரிக் என்னும் ஆங்கிலத்துரை மகளிரைக் கொண்டு ஆங்கிலத்தில் எழுதுவித்த நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு இந்நூல். viii. 705/1917/III.

w 44

**குப்புசாமி ஐயர், வி., முதலியோர்**

**2342.** i. இந்திய ஸ்திரீ ரத்னங்கள்: இரண்டாம் பதிப்பு; ii. ஜீ.ஏ. வைத்யராமன் அண்டு கம்பெனி, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1920; iv. உ.ப. 84; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. இந்திய வரலாற்றில் காணப்படும் சம்யுக்தா, ஆர்காம் ராணி; ஜபா, பத்மினி, தாராபாய், கனுார் ராணி, ரூபவதி, அகல்யாபாய், லாலா பன்னு ஆகிய பெண்மணிகளைப் பற்றிய வாழ்க்கைச் சுருக்கம் இதில் தரப்பட்டுள்ளது. 'ஜனாபிமானி பிரசுரங்கள்' என்னும் வெளியீட்டு வரிசையில் இது பதினைந்தாவது வெளியீடு. viii. 1049/1920/I.

w 44

## 921 தத்துவ ஞானிகள்

### 921.914 இந்தியர்கள்

**2343.** i. இராமானுஜர்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1920; iv. உ.ப. 16; v. 18×13 செ.மீ.;

vi. 0–1–0 ; vii. வைணவ அடியார்களுள் ஒருவரான ராமானுஜாசாரியாரின் வாழ்க்கைக் குறிப்பு இதில் அடங்கியுள்ளது. இவர் கி.பி. பதினோராவது நூற்றாண்டில் வைணவ சமயத்தைப் பரப்பிய ஆசாரியார். viii. 822/1920/I.

R672w

**கோவிந்தராஜ ஐயங்கார், மோ, வெ., காரைக்குடி**

**2344.** i. சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் சரித்திரம்: முதற் பதிப்பு ; ii. மோ. வெ. கோவிந்தராஜ ஐயங்கார், காரைக்குடி ; வைசியமித்திரன் பிரஸ் பிராஞ்ச், காரைக்குடி ; iii. செப்டம்பர், 1918 ; iv. உ.ப.19 ; v. 16×10 செ.மீ. ; vi. இலவசம் ; vii. அத்வைதத்தைத் தோற்றுவித்த சங்கராச்சாரிய சுவாமி அவர்களது சரித்திரம் இப்புத்தகத்தில் அடங்கியுள்ளது. யாவராலும் எளிதில் படித்தறிந்து கொள்ளும் பொருட்டு எளிய தமிழ்நடையில் எழுதப் பெற்றிருக்கிறது. அத்வைத மதக்கொள்கைகளும் இதில் இடம் பெற்றுள்ளன. viii. 262/1918/IV.

R66w

**சுப்ரமணிய ஐயர், காஞ்சிபுரம்**

**2345.** i. சங்கர பகவத் பாதாசாரிய சரித்திரம்; முதற்பதிப்பு; ii. இராமநாத சாஸ்திரி, நரசிம்மாச்சாரியார், சென்னை ; விக்டோரியா ராயல் அச்சுக்கூடம், காஞ்சிபுரம் ; iii. மே, 1919 ; iv. உ.ப. 22; v. 18×12 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. அத்வைத தத்துவத்தின் ஆசிரியரான சங்கராச்சாரியாரைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம் இதில் அடங்கியுள்ளது. viii. 920/1919/II.

R66w

**சுப்ரமணிய சிவம்**

**2346.** i. பரமஹம்ச ராமகிருஷ்ண விஜயம்: முதற் பதிப்பு ; ii. சை.ந. பாலசுந்தரம், சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஜுன், 1919 ; iv. உ.ப. 176 ; v. 19×13 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. இதில் ராமகிருஷ்ண பரமஹம்சருடைய (1833–1886) வாழ்க்கைச் சுருக்கமும், அவருடைய உபதேசங்களும் அடங்கியுள்ளன. இம்மகானுடைய வாக்கியங்களிலே ஞானசாரம் நிறைந்த பல பொருள்கள் விளங்குகின்றன. viii. 117/1919/III.

R65w

**2347.** i. ராமகிருஷ்ண பரமஹம்சர் திவ்விய சரித்திரம் ; முதற் பதிப்பு ; ii, எஸ். சிவசங்கர செட்டி, சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1919 ; iv. உ.ப. 703 ; v. 17×13 செ.மீ. ; vi. 2–0–0 ; vii.

இராமகிருஷ்ண பரம ஹம்சரின் வாழ்க்கைக் குறிப்பும், அவருடைய உபதேசங்களும் இதில் அடங்கியுள்ளன. இராம கிருஷ்ணர், விவேகாநந்தர் ஆகிய இருவரின் திருஉருவப் படங்கள் இதன்கண் இருக்கின்றன. viii. 644/1920/I,

R65w

நா. & அ (மொ.து.)

2348. i. ராமகிருஷ்ண சரித்ராமிர்தம்—முதல் பாகம் ; ii. சுந்தர வதனி அச்சுக்கூடம், சேலம்; iii. 1919 ; iv. உ.ப. 128 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-14-0 ; vii. இச்சிறு நூல் உலகப் புகழ் பெற்ற சுவாமி விவேகானந்தருடைய குரு நாதரும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் அவதார புருஷரு மான பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் திருவாய் மலர்ந்தருளிய உபந்நியாசங்கள் அடங்கியது. அவரது நிழற் படமும், வரலாறும் இதன்கண் இடம் பெற்றுள்ளன. viii. 302/1920/I.

R65w

நாராயண ரெட்டியார், எஸ்., வேலூர்

2349. i. விவேகாநந்த சுவாமிகளுடைய சரித்திரமும் உபதேசங் களும்; முதல் பாகம்: முதற் பதிப்பு; ii. ஏ. டி. வேலு, சென்னை ; கமர்ஷியல் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜுன், 1920 ; iv. உ.ப. 114 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. இதில் விவேகாநந்தரின் வாழ்க்கை வரலாறும் அவரின் உபதேசங்களும் அடங்கியுள்ளன. சுவாமி களின் திருவுருவப்படத்துடன் கூடியது. viii. 170/1920/III.

R65w

நாராயணஸ்வாமி ஐயர், ஆர்.

2350. i. விவேகானந்த சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம்: முதற் பதிப்பு ; ii. ஆர். நாராயணஸ்வாமி ஐயர், சென்னை ; பி.ஆர். ராம ஐயர் அண்டு கோ ; சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 22 ; v. 19×13 செ.மீ.; vi. 0-2-0 ; vii. விவேகாநந்த சுவாமி களின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாகத் தரும் நூல். சுவாமி களின் தேசாபிமானச் சிறப்பை விளக்கும் பல வியாசங்களையும், கடிதங்களையும் கூட இவ்வாசிரியர் மொழி பெயர்த்து வெளியிட்டி ருக்கிறார் என்று தெரிகிறது. இவற்றுள், சிகாகோவில்செய்த முதற் சொற்பொழிவுகள், முக்தி நிலையும் கர்மயோக மார்க்கமும், கர்மாவும், குணமும் என்பன முக்கியமாகக் குறிப்பிடத் தக்கன. viii. 426/1916/III.

R65w

2351. i. ஸ்வாமி ராமதீர்த்த பரமஹம்ச விஜயம்: முதற் பதிப்பு ; ii. ஸ்ரீசாது இரத்தின சற்குரு புத்தகசாலை, சென்னை ; பி.ஐ. பிரஸ், சென்னை ; iii. ஜுன், 1920 ; iv. உ.ப. 265 ; v. 17×13 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. இராம தீர்த்த ஸ்வாமி என்பவர், லாகூரில் எம்.ஏ. பட்டம் பெற்றுப் பின்பு துறவறம் எய்திப் பல வேதாந்த உண்மைகளை உலகோர்க்கு உணர்த்தியவர். அவர்தம் உபதேசமும், வரலாற்றுச் சுருக்கமும் இதில் அமைந்துள்ளன. சுவாமி ராம தீர்த்தர் அவர்களின் திருவுருவப் படத்துடன் கூடியது. viii. 107/1920/III.

R65w

2352. ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ விஜயம்: முதற் பதிப்பு; ii. ஹிந்து மதாபிமான சங்கத்தார், காரைக்குடி ; வைசியமித்ரன் பிரஸ், காரைக்குடி ; iii. டிசம்பர், 1918 : iv. உ.ப. 15 ; v. 11×7 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இராமகிருஷ்ண பரமஹம்சரின் ஆத்மீகத் தன்மையைப் பற்றி இதில் விளக்கப்பட்டுள்ளது. இவருடைய முதற் சீடராகிய சுவாமி விவேகானந்தருடைய சிறப்புக்களும் இடையிடையே கூறப்பட்டுள்ளன. 'ஞானபாநு' பத்திரிகையிலிருந்து எடுத்துத் தனியாக வெளியிடப்பட்ட சிறு வெளியீடு. viii. 680/1919/I.

R65w

**வல்லப ஐயர், விராலூர்**

2353. i. ஜகத்குரு சங்கர பகவத் சரித்திரம்: முதற் பதிப்பு ; ii. எஸ். வீரராகவ சாஸ்திரிகள், பனப்பாக்கம் ; விநாயக சுந்தர விலாச அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. அக்டோபர், 1917 ; iv. செ.மூ.ப. 56 ; v. 23×15 செ.மீ. ; vi. இலவசம் ; vii. வடமொழி நூலாகிய 'சித்விலாசீய'மென்னும் கிரந்தத்திற் சொல்லிய கதைகளோடு 'ஸ்ரீமாதவீய'த்தில் சொல்லிய சில அற்புதங்களையும் சேர்த்துத் தமிழில் தருகிறது. கீர்த்தனைக் கவிதைகளால் அமைந்தது இந்நூல். viii. 376/1917/IV.

R66w

**விவேகாநந்தர், சுவாமி**

2354. i. எனது குருநாதர்: திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. சை.ந. பாலசுந்தரம், சென்னை ; பி.ஐ. பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1920 iv. உ.ப. 72 ; v. 18×13 செ.மீ ; vi. 0–8–0 ; vii. இது விவேகாநந்தர் நியூயார்க் நகரத்தில் தமது குருவான இராமகிருஷ்ணரைப் பற்றி உலகோர் அறிய வேண்டுமென்பதற்காக ஆற்றிய சொற்பொழிவின் தமிழாக்கம். viii. 886/1920/I.

R66w

**ஸ்ரீனிவாச ஐயங்கார், சி. ஆர்.**

**2355.** i. சங்கராச்சாரியார்: முதற் பதிப்பு; ii. சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1920; iv. உ.ப. 79; v. 16×11 செ.மீ.; vi. 0–5–0; vii. அத்வைத சமயத்தை நிறுவிய ஆதி சங்கராச்சாரியாரின் வாழ்க்கைக் குறிப்பு இதில் தரப்பட்டுள்ளது. viii. 6/1920/III.

R66w

**2356.** i. மத்வாச்சார்யார்: முதற் பதிப்பு; சுதேசமித்திரன் ஆபீஸ்; சென்னை; சுதேசமித்திரன் பிரஸ், சென்னை; iii. ஜுலை, 1920; iv. உ.ப. 56; v. 16×11 செ.மீ.; vi. 0–5–0; vii. துவைதக் கொள்கையை ஆக்கிய மத்வாச்சாரியாரின் வாழ்க்கைச் சுருக்கம் இதில் அடங்கியுள்ளது. viii. 4/1920/III.

R66w

**2357.** i. ராமானுஜாசார்யார்: முதற் பதிப்பு; ii. சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை; iii. ஜுன், 1920; iv. உ.ப. 72; v. 16×11 செ.மீ.; vi. 0–5–0; vii. வசிஷ்டாத்வைதக் கொள்கையினை நிறுவியவரான ராமானுஜாசாரியாரின் வாழ்க்கைக் குறிப்பு இதில் தரப்பட்டுள்ளது. viii. 5/1920/III.

R672w

## 921.9 கிரேக்கம்

**அரங்காச்சாரியார், ஆர்., மதனப்பள்ளி**

**2358.** i. சாக்ரடீஸ் சரித்திரம்; ஆர். அரங்காசாரியார், மதனபள்ளி; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; ii. ஜுன் 1918; iv. உ.ப. 138; v. 18×13 செ.மீ.; vi. 0–12–0; vii. கிரேக்க நாட்டு தத்துவஞானியும், பகுத்தறிவுப் பாசறையும், அரசியல் அறிஞனும், கலையில் வல்லுநனுமான சாக்ரடீசின் வாழ்க்கை வரலாற்றை இப்புத்தகத்தில் தெளிவாக ஆசிரியர் விளக்கியுள்ளார். சாக்ரடீசின் திருவுருவப் படம் நூல் முகப்பை அலங்கரிக்கிறது. சென்னை சர்வகலாசாலையார் ஏற்படுத்திய வியாசக் கமிட்டியார் குறிப்பிட்ட விதிகளையொட்டி இந்நூல் எழுதப்பட்டுள்ளது. viii. 723/1918/II.

Rw

**2359.** i. சாக்ரடீஸ் சரித்திரம்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ஆர். ரெங்காசாரியார், மதனபள்ளி; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. ஆகஸ்ட், 1919; iv. உ.ப. 142; v. 18×12 செ.மீ.; vi. 0–10–0; vii. கிரேக்கத் தத்துவ ஞானியான சாக்ரடீசின் வாழ்க்கைக் குறிப்பு, அவரின் சமூதாய சீர்திருத்த விளக்கங்கள், தத்துவங்கள் ஆகியவையும் இதில் தரப்பட்டுள்ளன. சாக்ரடீஸ் படம் ஒன்றும் உள்ளது.

15 அதிகாரங்களில் விரிவாகப் பல வரலாறுகளும் விளக்கப் பட்டுள்ளன. இந்நூலின் சில பகுதிகள் செந்தமிழ் ஒன்பதாம் தொகுதியில் வெளியிடப் பெற்றவை. பின்னர் அவற்றையே விரிவாக அமைத்து எழுதி ஆசிரியர், இந்நூலே முற்று வித்தனர். viii. 664/1919/III.

Rw

## 922 கிறிஸ்துவப் பெரியார்கள்

2360. i. அர்ச். அந்தோணியாரின் பிரதாபம் : திருத்திய மூன்றும் பதிப்பு ; ii. எ. ஆர். ஜான் ஐயர், சென்னை நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1920 ; iv. உ.ப. 95 ; v. 13×8 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. அர்ச் அந்தோணியாரின் பிரதாபம் பற்றி இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளது. அந்தோணியாரைக் குறித்த ஜெபம், பிரார்த்தனை முதலியவைகளும் தரப்பட்டுள்ளன. viii. 473/1920/IV.

Q6w

2361. i. சேசுவின் சிறிய புஷ்பம் : இரண்டாம் பதிப்பு ; ii. சங்கை ஜோசப், திருச்சிராப்பள்ளி ; செய்ன்ட் ஜோஸப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. அக் டோபர், 1917 ; iv. உ.ப. 107 ; v. 16×11 செ.மீ. ; vi......; vii ரோமன் கத்தோலிக்க சமயக் கன்னியான மரிய பிரான் சுவாஸ் தெரேஸ் என்பவரின் கதை விவரிக்கப் பட்டுள்ளது. அக்கன்னியின் படமும், வேறு சில படங்களும் உண்டு. வாழ்க்கையில் தேவ கருணைக்கு அவள் பாத்திர மானதும், அவளால் நிகழ்த்தப் பெற்ற அருஞ்செயல்களும் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 380/1917/IV.

Qw

பிரென் (தொ. து).

2362. i. எபிரேய தீர்க்க தரிசிகளின் சரித்திரச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, சென்னை ; சி.எல். எ.ஸ்.பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1917 ; iv. உ.ப. 70. v. 18×13 செ.மீ. ; vi. 0-3-0; vii. பழைய ஏற் பாட்டில் குறிப்பிடப்பெறும் தீர்க்கதரிசிகளின் வாழ்க்கையைப் பற்றி சரித்திர பூர்வமான குறிப்புகள் இதில் தரப்பட்டுள்ளன. ஆறு அதிகாரமாக இந்நூல் பிரசுரிக்கப் பெற்றுள்ளது. தேவனுடைய சித்தம் இன்னது என்பதை மனிதர்களுக்குத் தெரிவித்து வந்தவர்கள் இந்தத் தீர்க்கதரிசிகள் ஆவர். எபிரேய மக்களின் சரித்திரத்தில், தீர்க்கதரிசிகள் பலர் காணப்படுகின்றனர். viii. 523/1917/I.

Q6w

2363. மகாசிர்திருத்தியாகிய லூத்தரும், அவர் வேலையும் : முதற் பதிப்பு ; ii. செல்லையா பிள்ளை, பரமக்குடி ; மாணிக்கம் பிரஸ், பரமக்குடி ; iii. செப்டம்பர், 1917 ; iv. உ.ப. 112 ;

v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. கிறித்துவ சமயத்தின் பெருஞ்சீர்திருத்தவாதியாகிய மார்ட்டின் லூத்தரைப் பற்றிய நூல். இதை இயற்றியவர் ஓம் ஃவிஸ்ட் சாஸ்திரியார். இதை, மதுரை, சங்கை, ஜெ. சான்டெக்ரென் ஐயர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கூற, சங்கை பவுல் எம். அருளப்ப ஐயர் தமிழில் எழுதினார். லூத்தர், கிறிஸ்துவின் சுவிசேஷத்தை அறிவித்துக் கிறித்துவ மார்க்கத்திற்காகப் போராடின சுத்த வீரராய் விளங்கியவராவார். மேலும் சமய வாழ்க்கையில் இவர் செய்த சீர்திருத்தங்களும் பலவாம். viii. 113/1917/IV.

Q6w

ஜாப். ஜி.வி. (மொ. து).

2364. i. சாது சுந்தர்சிங்: முதற் பதிப்பு; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை; சி.எல்.எஸ். பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1918; iv. உ.ப. 95; v. 18×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. சாது சுந்தர்சிங் என்ற இளம் கிறித்துவத் துறவி, தெய்வ அழைப்பைப் பெற்ற விதத்தினைப் பற்றியும், அவரின் வாழ்க்கை வரலாறு, பக்தி நெறி, முதலியவைகள் பற்றியும் இந்நூலில் விவரமாகக் கூறப்பட்டுள்ளன. இவர் சீக்கிய இனத்தவர். இது தெய்வ பக்தி மிகுந்த இவருடைய ஆன்ம ரகசியத்தை வெளிப்படுத்துவது. ஆல்பிரட் சாகிர் என்பார் வெளியிட்ட 'ஓர் சிலுவைத் தொண்டன்' என்ற புத்தகத்திலிருந்தும், சுந்தரைப் பற்றி எழுதிய பத்திரிகைக் குறிப்புகளினின்றும் தொகுத்து எழுதப்பட்டதாகும் இந்நூல் viii. 217/1919/I.

Q6w

2365. i. ஸ்வாமி சமந்த பத்ராசாரியாரின் திவ்ய சரித்திரம்: முதற் பதிப்பு ; ii. டி. ஆதிநாயனார், சென்னை ; தரும சீலன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. உ.ப. 19 ; v. 16×12 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. சுவாமி சமந்த பத்ராசாரியாரின் வாழ்க்கை வரலாற்றை இந்நூலில் காணலாம். 'வித்வரத்நமாலா' என்னும் இந்தி நூலை அனுசரித்து எழுதப் பெற்றதாகும். viii. 385/1920/IV.

Q6w

## 922·945 சைவசமயப் பெரியார்கள் வரலாறு

அத்வைதாநந்த சுவாமி, மதுரை.

2366. i. அசுவத்தேசப்படலம்—அசுவத்தநாதர் சரித்திரம்: முதற் பதிப்பு ; ii. ஸ்ரீஅத்வைதாநந்த ஸ்வாமி, மதுரை ; சச்சிதாநந்தம் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1918 ; iv. செ.மூ. உ.எ. 101 ; v. 19×13 செ.மீ. ; vi. இலவசம் ; vii. பரமேஸ்வரனின் திருவிளையாடல்களில் ஒன்றான அசுவத்

தேசப்படலத்தைப் பற்றி இதில் விளக்கப்பட்டுள்ளது. அவர், அசுவத்த நாதராகக் காரைக்குடியில் அவதரித்த 65-வது திருவிளையாடலைப் பற்றிச் கூறப்பட்டுள்ளவற்றை, வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்த்துள்ளார். வடமொழித் தொடரும், அதன் தமிழாக்கமும் உள்ளன. அதற்கொப்பச் செய்யுள் நடையிலும் பாடப்பட்டுள்ளது. ஸ்ரீமுத்துராமலிங்க ஞானதேசிக பரமாசிரியர் சுவானுபவத் திருவாக்கியங்கள் நூன் முகப்பில் தரப்பட்டுள்ளன. viii. 41/1918/III.

Q23w

**ஆலால சுந்தரம் பிள்ளை, கே. ஏ.**

2367. i. ஆசார்ய பிரபாவம்: முதற் பதிப்பு ; ii. டீ.எஸ். துளசிங்க நாயகர், சென்னை ; கணேச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜனவரி, 1918 ; iv. உ.ப. 432 ; v. 17×13 செ.மீ. ; vi. 2–0–0 ; vii. சிவனடியாரான சுந்தரமூர்த்தி நாயனரது வாழ்க்கையை விளக்கும் நூலிது. தடுத்தாட் கொண்ட புராணம், ஆயர்கோன் கலிக்காமநாயனர் புராணம் ஆகிய தலைப்புகளைக் கொண்டு விளங்குவது. ஆசார்ய மூர்த்திகளாகிய சுந்தரமூர்த்திகளுடைய பிரபாவத்தைக் கூறுவதால், இந்நூல் "ஆசார்யப் பிரபாவம்" எனப்பட்டது. பெரியபுராணத்தில் செய்யுள் வடிவில் கூறப்பட்டுள்ள சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாறு, இங்கு உரைநடையில் எழுதப்பட்டுள்ளது. viii. 599/1918/I.

Q23w

**இராஜகோபால் பிள்ளை**

2368. i. சாங்கு சித்த சிவலிங்க நாயனரின் ஜீவிய சரித்திரச் சுருக்கம்: முதற் பதிப்பு ; ii. சத்சங்க பூஜித பக்த ஜன சபையார், சென்னை ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை ; iii. அக்டோபர், 1917 ; iv. உ.ப. 16 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–4–0; vii இந்நூலில், சாங்கு சித்த சிவலிங்க நாயனரின் வாழ்க்கைச் சுருக்கத்தைக் காணலாம். கண்ணுடைய வள்ளலாரின் அருள் பெற்றவர். 'சிவலிங்கம்' என்னும் இயற்பெயருடைய இவர் குருவாகிய கண்ணுடைய வள்ளலாரால் 'சாங்கு சித்த சிவலிங்கம்' என்று அழைக்கப் பெற்றார். சரித்திர நிகழ்ச்சிக்கு பொருத்தமான பாடல்கள் சிலவும் இடையிடையே எடுத்தாளப்பட்டுள்ளன. viii. 589/1917/IV.

Q23w

**கலியாண சுந்தர யதீந்திர சுவாமிகள்**

2369. i. வாயிலார் நாயனரது சரித்திரமும் தோத்திரமும்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. பி. சிவபாத முதலி, சென்னை; வைதிக சைவ அச்சுக் கூடம், சென்னை; iii. மார்ச், 1919; iv. ......; v. 14×11 செ. மீ.; vi. இலவசம்; vii. இதில் சிவனடியாரான.

வாயிலார் நாயனரது வாழ்க்கைக் குறிப்பும், தோத்திரமும் அடங்கியுள்ளன. இவரைக் குறித்த தோத்திரப் பாடல்கள் 'திருமயிலை வாயிலார் நாயனுர் பதிகம்' என்னும் பெயரில் தரப்பட்டிருக்கின்றன. viii. 413/1919/II.

Q23w

**குப்புசாமி ஐயர், தி.**

2370. i. கண்ணப்ப நாயனுர் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. இராஜகோபால் பிள்ளை, மன்னுர்குடி; ராஜகோபாலசாமி அச்சுக் கூடம், மன்னுர்குடி; iii. மார்ச், 1919; iv. உ.ப. 28; v. 16×11 செ.மீ.; vi. 0–4–0; vii. சைவ மதத்தில் பற்றுள்ளவரான கண்ணப்ப நாயனுர் சரித்திரம் இதில் விளக் கப்பட்டுள்ளது. திருத்தொண்டர் புராணத்தைப் பின்பற்றி எழுதப்பெற்ற உரை நடை நூல். viii. 1161/1919/I.

Q23w

**குமரகுருதாச சுவாமிகள், பாம்பன்**

2371. i. அருணகிரிநாத சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்: முதற் பதிப்பு; ii. சிவசுப்ரமணிய பக்தஜன சபையார், குமாரபுரம், சென்னை; பிரிட்டிஷ் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1919; iv. உ.ப. 31; v. 10×12 செ. மீ.; vi. 0–1–0; vii. திருப்புகழின் ஆசிரியரான அருணகிரிநாதரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம் இதில் தரப்பட்டுள்ளது. இது, பாம்பன் குமர குருதாச சுவாமிகள் செய்தருளிய மகாப்பிரசங்கத்தினின் றும் எடுத்துச் சுருக்கமாக வரையப்பட்டதாகத் தெரிகிறது. தக்க வரலாற்றுச் சான்றுகள் அங்கங்கே எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. viii. 193/1919/ III.

Q23w

**குமாரசாமி பிள்ளை, ஆ. அ., பரம்பைக்குடி**

2372. i. குழந்தைவேல் சுவாமிகள் தோத்திரம், சரிதம்: முதற் பதிப்பு; ii. தி. மு. சுவாமிநாத உபாத்தியாயர், திருக்களர்; எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர்; iii. பிப்ரவரி, 1920; iv. செ.மூ.உ.ப. 28; v. 16×11 செ.மீ.; vi. இலவசம்; vii. திருவா வடுதுறையில் முன்பு விளங்கிய சிவனடியாரான குழந்தைவேல் சுவாமிகள் என்பவரைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்பும், இடையிடையே தோத்திரச் செய்யுட்களும் அடங்கியுள்ளன. புலாலுண்ணலின் இழிவும், அறிவை மயக்கும் பொருள்களை உப யோகிப்பதனுல் ஏற்படும் கெடுதிகளும் இதன்கண் தெளி வாக்கப்பட்டுள்ளன. பழக்க வாசனையினுல் விளையும் பயன் பற்றிய குறிப்பும் உள்ளது. viii. 911/1920/ I.

Q23w

**கைலாசம் பிள்ளை, யாழ்ப்பாணத்து நல்லூர்**

2373. i. ஆறுமுக நாவலர் சரித்திரம்: முதற் பதிப்பு: ii. எஸ். விசுவநாதப்பிள்ளை, சென்னை; வித்யாநுபாலன அச்சியந்திர சாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1920; iv. உ. ப. 134; v; 18×13 செ. மீ. vi, 0–1–0; vii. தமிழ் அறிஞரான ஆறுமுக நாவலரின் வாழ்க்கை வரலாறு இதில் விளக்கப்பட்டுள்ளன. நாவலர் அவர்களின் நிழற் படத்துடன் கூடியது. இறுதியில் தரப்பட்டுள்ள அநுபந்தப் பகுதியில் திரு. நாவலர் அவர்களின் வாழ்க்கையோடு சம்பந்தப்பட்ட பல குறிப்புகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. viii. 1037/1920/I.

Q23w

**கோவிந்தராமானுஜலு தாசர், மா., காட்டுப்புத்தூர்**

2374. i. இராமானுஜநாவலர் ஸ்வாமி வைபவ சங்கிரகம்: முதற் பதிப்பு; ii. கா.லெ.ர. வேத நாராயணப் பெருமாள் இராமனுஜ தாசர்; யூனியன் அச்சாபீஸ், நாமக்கல்; iii. 1918; iv. செ.மூ. உ.ப. 112 ; v. 13×11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. இதில் புதுவை, ஏ. வே. விலக்ஷிணகவி இராமானுஜ நாவலர் சுவாமி களின் சிறப்புப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஒரு பகுதி உரைநடை யாகவும் மற்றப் பகுதிகள் செய்யுள் நடையாகவும் அமைந்துள்ளன viii. 1054/1918/I.

Q23w

**சண்முகசாமி செட்டி, மலை**

2375. i. வீரப்பெருமாள் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. சண்முக சாமி செட்டியார், தில்லை; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக் கூடம். சிதம்பரம்; iii. நவம்பர், 1919; iv. உ.ப. 12; v. 19×12 செ.மீ.; vi. இலவசம்; vii. சைவ மதத்தில் பற்றுள்ளவரான வீரப்பெரு மாள் என்பவரின் வரலாறு இதில் அடங்கியுள்ளது. தில்லைத் திருத் தேர் ஓடும் பொருட்டுத் தன்னையே பலி கொடுத்த வீரப்பெருமாள் என்பவரின் சரிதம் கூறும்நூல். முன்னோர்கள் செப்புப்பட்டயத்தில் எழுதி வைத்ததைக் கொண்டு வெளியிடப் பெற்றது. viii. 561/1919/IV.

Q23w

**சிதம்பரநாத பிள்ளை, பி.**

2376. i. மித்தியா வாதநிக்காரம்: முதற் பதிப்பு; ii. எஸ்.பி. பிரஸ், பாளையங் கோட்டை; iii. 1919; iv. உ.ப. 15; v. 21×14 செ.மீ.; vi. .... ; vii. இந்நூல், மாணிக்கவாசக சுவாமிகளை பற்றிச் சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய ஞானியார் கூற்றினை மறுத்து எழுதப் பெற்றது. மாணிக்க வாசகர் வீரசைவர் அல்லரென்பதே இந்நூல் தரும் விளக்கமாகும். viii. 528/1920/I.

Q23w

2377. **சிவஞான யோகிகள் சரித்திரச் சுருக்கம்.** i. முதற் பதிப்பு; ii. சைவ சித்தாந்த சபை, சைவப் பிரகாச அச்சியந்திர சாலை, தூத்துக்குடி. iii. 1916; iv. உ.ப. 8; v. 13×11 செ. மீ.; vi ......; vii. மாதவச் சிவஞான யோகிகளைப் பற்றிய வாழ்க்கை வரலாறு இதன்கண் விவரிக்கப்பட்டிருக்கிறது. சுவாமிகள், சைவ சமயத்திற்கும், தமிழுக்கும் செய்துள்ள திருத் தொண்டுகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவர் கொல்லம் 960 ஆம் ஆண்டு, விசுவாவசு ஆண்டு, சித்திரை மாதம், ஞாயிற்றுக்கிழமை, ஆயில்ய நட்சத்திரம் கூடிய நாளில் முக்தியடைந்தார். இவர், திராவிட மாபாடியத்தின் ஆசிரியரா வார். viii. 797/1916/II.

Q23w

**சிவத்தியாநாநந்த மகரிஷி**

2378. i. சிவத்தியாநாநந்த மகரிஷி: முதற் பதிப்பு; ii. பிரேசர் பிரஸ், கூனூர்; iii. ஜூன், 1919; iv. செ. மூ. எ. 151; v. 23×14 செ. மீ.; vi. விற்பனைக்கு இல்லை; vii. சிவத்தியாநாநந்த மகரிஷி என்பாரின் சுயசரிதை இதில் பாடல் வடிவில் கூறப்பட்டுள்ளது. செய்யுட்களுக்குக் குறிப்புரையும் இறுதியில் சேர்க்கப்பெற்றிருக்கிறது. viii. 842/1919/II.

Q23w

**தண்டபாணி செட்டியார், எஸ்., பட்டுக்கோட்டை**

2379. i. திருநாவுக்கரசர்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1919; iv. உ. ப. 18; v. 19×12 செ. மீ.; vi. 0-1-0; vii. சிவனடியாரான திருநாவுக்கரசர் என்பாரைப்பற்றிய வாழ்க்கைக் குறிப்பு இதில் அடங்கியுள்ளது. இவர் முதலில் சமணராயிருந்து, பின்னர், இறையருளால், சைவ சமயத்தைச்சார்ந்து செயற்கரிய செயல்பல செய்த பெரியார் ஆவார். தேவாரம் பாடிய மூவர்களில் ஒருவர் இவர். 'பக்த சரித்திர மாலிகை' என்னும் தொடர் வெளி யீட்டில் இது முதலாவது மலர் ஆகும். viii. 811/1920/I.

Q23w

2380. i. தாயுமானவர் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. லாங் மன்ஸ் கிரீன் அண்டு கோ., சென்னை; தாம்சன் அண்டு கோ., சென்னை; iii. 1916; iv. உ. ப. 32; v. 18×13 செ. மீ.; vi.......................; vii. தாயுமான சுவாமிகளின் வாழ்க்கை வரலாறும், அவர் கொள்கைகளும் இந்நூலின்கண் விவரிக்கப்பட்டிருக் கின்றன. வாழ்க்கைச் சரிதம் தொடர்பட விளங்கும் வகையில்

சிறுசிறு தலைப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அங்கங்கே தக்க மேற்கோள்களும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. viii. 813/1916/II.

Q23w

2381. i. திருவொற்றியூர் மகிழடிசேர்வை விசேஷமும், சுந்தர மூர்த்தி ஸ்வாமிகள் சரித்திரமும்; ii. த. பு. முருகேச நாயகர்; அமெரிக்கன் டயமண்ட் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1917; iv. உ. ப. 32; v. 13×11 செ.மீ.; vi. இலவசம்; vii. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வாழ்க்கையையும் சிறப்பினையும் கூறுகிறது இந்நூல். viii. 391/1917/I.

Q23w

**தீர்த்தாரப்ப முதலியார். டி. எஸ்., சிந்துபூந்துறை, திருநெல்வேலி**

2382. i. வைத்தியலிங்க சுவாமிகள் பேரில் தோத்திரவெண்பா: முதற் பதிப்பு; ii. டி. எஸ். தீர்த்தாரப்ப முதலியார், சிந்து பூந்துறை, திருநெல்வேலி; பொன்னம்பலம் அச்சியந்திர சாலை, திருநெல்வேலி; iii. டிசம்பர், 1917; iv. செ. மூ. உ. ப. 66; v. 21×14 செ. மீ.; vi. 0–9–0; vii. அருப்புக் கோட்டையில் வாழ்ந்த வைத்தியலிங்க சுவாமிகளைப்பற்றிய வரலாற்றுச் சுருக்கமும் அவரைப்பற்றிய வெண்பாக்களும் அடங்கியுள்ளன. அன்னாரின் புகைப்படமும் இதில் உள்ளது. துதி வெண்பாக்கள் இலக்கண இலக்கிய அமைதியுடையனவாய், ஆசிரியரின் பண்பட்ட உள்ளத்தையும் முதிர்ந்த அறிவையும் விளக்குவனவாய் அமைந்துள்ளன. viii. 945/1917/IV.

Q23w

**பொன்னம்பல தாஸ், எஸ்., சுவாமிமலை**

2383. i. சிறுத்தொண்டநாயனார் திவ்ய சரித்திரம்: முதற் பதிப்பு; ii. குழந்தைவேல் பிள்ளை, சுவாமிமலை & பெ. ஆறுமுக முதலியார்; முரஹரி அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1919; iv. செ. மூ. ப. 24; v. 21×14 செ. மீ.; vi. 0–?–0; vii. அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய சிறுத்தொண்ட நாயனாரின் சரித்திரம் விளக்கப் பட்டுள்ளது. திருப்புகழ்ச் சிந்து மெட்டிலும், காவடிச் சிந்து வர்ண மெட்டிலும் பாடல்கள் அமைந்துள. கதைப் போக்கிற்கு ஏற்ற தலைப்புக்கள் அங்கங்கே கொடுக்கப் பட்டுள்ளன. viii. 198/1919/II.

Q23w

**முத்துசாமிபிள்ளை, அ., மதுரை**

2384. i. பாலபோதம்—நம்பியாண்டார்நம்பி சரித்திரம்: முதற் பதிப்பு; ii. அ. முத்துசாமிபிள்ளை, மதுரை; மனோன்மணி விலாசம் பிரஸ், மதுரை; iii. ஏப்ரல், 1920; iv. உ. ப.

8 ; v. 17×11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. இதில் நம்பியாண்டார் நம்பியவர்களின் வாழ்க்கைச் சரித்திரம் தரப் பட்டுள்ளது. viii. 93/1920/II.

Q23w

**வெங்கடாசலம் பிள்ளை, அருப்புக்கோட்டை**

2385. i. திருநல்லூர் மகாலிங்க மூர்த்தி நிஷ்டையும், அப்பூதி நாத நாயனர் பேரில் பதிகமும்: முதற் பதிப்பு ; ii. மகாலிங்கமூர்த்தி ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, விருதுப் பட்டி ; iii. ஏப்ரல், 1920 ; iv. செ. மூ. ப. 3+5 ; v. 17×11 செ. மீ. ; vi. 0–0–6 ; vii. அருப்புக்கோட்டை யென்னும் திருநல்லூர் அமுதலிங்கக் கடவுளுக்குத் தொண்டு புரிந்த மகாலிங்கமூர்த்தி நிஷ்டையைப்பற்றியும், அப்பூதிநாத நாயனர் பேரில் பாடிய பதிகமும் இதில் அடங்கியுள்ளன. நூற்பயன் குறித்த வெண்பாக்கள் மூன்று இதன்கண் உள. viii. 90/1920/II.

Q23w

**ஸ்வயம்ப்ரகாச சுவாமிகள்**

2386. i. ஸவயம்ப்ரகாச சுவாமிகள் சரித்திரமும், ஷை ஸ்வாமிகள் இயற்றிய ஸ்துதிகளும்: முதற் பதிப்பு ; ii. காசிகாநாத ஸ்வாமிகள், கோவிலூர் மடாலயம் ; சச்சிதாநந்த அச்சியந்திர சாலை, சென்னை ; iii. டிசம்பர், 1916 ; iv. செ. மூ. ப. 48 ; v. 18×11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. திருமழபாடி, சுவயம்பிரகாச சுவாமிகள் சரித்திரமும், அவர் இயற்றிய துதிகளும் இந்நூலில் அடங்கியுள்ளன. காசி, திருவாரூர் முதலிய பலதலத்து விளங்கும் மூர்த்திகளைக் குறித்துத் தோத்திரங்கள் உள. 'மதுரை மீனட்சியம்மன் பதிகம்' என ஒரு பதிகமும் உளது. இசைக்கீர்த்தனைகளும் ஒருசில உள. viii. 952/1916/IV.

Q23w

## 922.945 வைணவப் பெரியார்கள் வரலாறு

**அண்ணங்கராச்சாரியார்**

2387. i. கூரத்தாழ்வான் வைபவம் : முதற் பதிப்பு ; அண்ணங் கராச்சாரியார், காஞ்சிபுரம் ; விக்டோரியா ராயல் அச்சுக் கூடம், பெரிய காஞ்சிபுரம் ; iii. ஜனவரி, 1919 ; iv. உ. ப. 25 ; 22×14 செ. மீ. ; vi. 0–2–6 ; vii. வைணவ சமயத்தைச் சார்ந்த கூரத்தாழ்வான் வரலாற்றினை இந்நூல் நன்கு விளக்குகின்றது. இதில் கலந்து வரும் வட மொழி களுக்குக் கிரந்தாட்சரம் உபயோகிக்கப் பட்டுள்ளது. viii. 886/1919/I.

இராமசாமி முதலியார், தி., ஆரணி

2388. i. பத்திராசல ராமதாஸர் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. தி. இராமசாமி முதலியார், ஆரணி; அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக்கூடம், ஆரணி; iii. மார்ச் 1918; iv. செ. மூ. ப. 30; v. 21×14 செ. மீ.; vi. 1-0-0; vii. இதில் இராம பக்தரான பத்ராசலத்தில் வாழ்ந்த இராம தாசரின் வாழ்க்கை வரலாறு செய்யுள் வடிவமாகக் கூறப் பட்டுள்ளது. ஆரணி ஜாகீர், காமக்கூர் தமிழ்ப் பண்டிதர் மு. சுந்தரமுதலியார், ஆரணி ஜாகீர் சித்ரகவி ச. அண்ணு மலைச் செட்டியார் ஆகிய இருவரும் சாத்துக்கவிகள் தந்துள் ளனர். viii. 333/1918/II.

Q22w

எறும்பி அப்பா சுவாமிகள்

2389. i. ஸுஞானி: முதற் பதிப்பு; ii. எஸ். கோபால் சுவாமி முதலி, சென்னை; ஸ்ரீ சுப்பிரமண்ணிய விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. எப்ரல், 1917; iv. உ. ப. 42; v. 18×11 செ. மீ.; vi. 0-3-0; vii. திருமால் பக்தரான சுஞானி என்பவரின் வாழ்க்கைச் சரிதையை விளக்கும் நூல். வட மொழியிலிருந்து மொழி பெயர்த்து அதனுடன் அநேக நீதி வாக்கியங்களையும் சேர்த்து எளிய தமிழ் நடையில் எழுதப் பட்ட நூல். viii. 343/1917/II.

Q22w

சுப்பிரமணிய பாரதி, அ.

2390. i. பக்த மகிமை—வால்யூம் 1: முதற் பதிப்பு; ii. வ. ஸ்ரீ ராமுலு செட்டியார் கம்பெனி, சென்னை; டைமெண்ட் பிரஸ், சென்னை, iii. ஆகஸ்ட், 1920; iv. உ. ப. 52; v. 19×13 செ. மீ.; vi. 0-4-3; vii. இச் சிறு நூலில் புண்டரீகன், நாமதேவ்; கோரா குயவர் என்னும் மூன்று பக்தர்களுடைய சரித்திரங்கள் அடங்கியுள்ளன. மாணவர் களுக்கான துணைப்பாட நூலாகப் பயன்படத்தக்கது எனக் குறிப் பிடப்பட்டுள்ளது. படவிளக்கங்களுடன் கூடியது. viii. 694/1920/II.

Q22w

2391. i. ருக்மாங்கதன் அல்லது ஏகாதசியின் பிரபாவம்: முதற் பதிப்பு; ii. ராமா அண்டு கோ., சென்னை; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை; iii. மே, 1917; iv. உ. ப. 53; v. 16×11 செ. மீ.; vi. 0-4-0; vii. திருமால் அடியா ரான ருக்மாங்கதனின் பக்தியின் சிறப்பை விளக்கும் புரா ணக் கதை விளக்கப்பட்டுள்ளது. ஏகாதசி விரதத்தின் மகிமையும் இச்சரித்திரத்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. viii.257/1917/IV.

Q22w

**நாராயண தாஸர், பு. (மொ—து.)**

2392. i. மகா பக்த விஜயம்—இரண்டாம் பாகம்: ஐந்தாம் பதிப்பு; ii. இராமசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; ஸ்ரீ லட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1918; iv. உ. ப. 285; v. 28×20 செ. மீ.; vi. 3–0–0; vii. பன்னிரண்டு தாசர்களின் சரித்திரங்களில் ஒன்றான சக்குபாய் சரித்திரத்தின் இரண்டாம் பாகம் இந் நூலில் அடங்கியுள்ளது. இது மகாராஷ்டிர மொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதாகும். சிற்சில துதிப் பாடல் களும், சுலோகங்களும் இதன்கண் தரப்பட்டுள்ளன. viii. 366/1918/IV.

Q22w

**நாராயணராவ், ஆர்.**

2393. i. நம்மாழ்வாரிசை: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. ஹோ அண்ட் கம்பெனி, சென்னை; பிரிமியர் அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. செ. மூ. ப. 16; v. 14×11 செ. மீ.; vi. இலவசம்; vii. வைணவ சமயத் தொண்டரான நம்மாழ்வாரைக் குறித்துப் புகழ்ந்து பாடப் பெற்ற பாடல் கள் இதில் உள்ளன. சிந்து. திருப்புகழ்ச் சந்த மெட்டுகளில் அமைந்த பாடல்களைக் கொண்டுள்ளது. viii. 1014/1917/II.

Q22w

**பக்தவத்ஸலம், டி & வேங்கட சீனிவாசன், வி.**

2394. i. கிருஷ்ண சைத்தன்யர் சரித்திர சுருக்கம்—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii, பி. விஜய ரதன பிள்ளை, சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. உ. ப. 96; v. 21×14 செ. மீ.; vi. 1–0–0; vii. கிருஷ்ண பக்தரான கிருஷ்ண சைதன்யரின் வாழ்க்கை வரலாறும் அவருடைய போதனைகளும் மிகவும் விரிவாவும் வளக்கமாவும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. இது கல்லூரி நடுநிலை, இளங்கலை வகுப்புக்களுக்குப் பாடபுத்தகமாகவும் வைக்கப் பட்டிருந்தது. இந்நூலினிறுதியில் சுவாமிகளின் மதக்கொள்கை களும் நற்போதனைகளும் தரப்பட்டுள்ளன. viii. 370/1918/IV.

Q22w

**பச்சையப்ப உடையார், க.**

2395. i. திருமழிசை ஆழ்வார் பிரபாவ ஆராய்ச்சி: முதற்பதிப்பு; ii. திருநாவுக்கரசு முதலியார், திருமழிசை; வைதிக சைவ அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. உ. 32;

v. 22×14 செ. மீ.; vi. இலவசம்; vii. இது வைணவப்பெரியாருள் ஒருவரான திருமழிசை ஆழ்வாரின் சிறப்புப்பற்றிய ஆராய்ச்சி நூல். viii. 581/1920/III.

Q22w

2396. i. **முத்திராமசுவாமிகள் திரு அவதார வைபவம்**: முதற் பதிப்பு; ii. மு. பெ. அருணசல செட்டியார், பெருவளப்பூர்; டாட்ஸன் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. ஜூன், 1918; iv. செ. மூ. எ. 134; v. 18×13 செ. மீ.; vi. இலவசம்; vii. முகவை மாவட்டத்தில் உள்ள திருப்பத்தூர் தாலூகா, திருகோஷ்டி என்னும் ஊர்ப் பக்கத்தில் உள்ள கிருஷ்ணசமுத்திர உரிமைப் பெயர் பெற்ற கருங்குளம் நகரத்தில் வைஸ்ய நாராயண புத்திரரான முத்திராம சுவாமிகள் திருவவதார வைபவத்தைப்பற்றி இதில் கூறப்பட்டுள்ளது. viii. 87/1918/III.

Q22w

**ஸ்ரீநிவாச்சாரியார், பி., திருப்பேரை**

2397. i. மாறனேர் நம்பி சரித்திரம்; ii. பி. ஸ்ரீநிவாசாச்சாரியார், திருப்பேரை; வேலாயுதம் அச்சகம், தூத்துக்குடி; iii. 1919; iv. உ. ப. 20; v. 16×12 செ. மீ.; vi. 0–2–0; vii. இதில் மாறனேர் நம்பி என்னும் பக்தரின் வரலாறு கூறப்பட்டுள்ளது. 'குருபரம்பரா ப்ரபாவம்' முதலிய நூல்களிலிருந்து எடுத்துத் தொகுத்து எழுதப் பெற்றது. viii. 594/1919/II.

Q22w

**ஸுந்தர்ராஜ ஆச்சாரியார், கே. டி., வங்கிபுரம்**

2398. i. ஆழ்வார்கள் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. ஜி. எ. வைத்யராமன் & கம்பெனி, சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1919; iv. உ. ப. 128; v. 18×13 செ. மீ., vi. 0–12–0; vii. இதில் வைணவ சமயத்தைச் சார்ந்த 12 ஆழ்வார்களின் அவதாரக் காரணம், ஆழ்வார்களால் பாடப்பெற்ற திருப்பதிகள், பாடிய பாடற்றொகை, அப்பாடல்களுக்கு உரை வகுத்தவர்கள் ஆகிய விவரங்கள் இதன்கண் அடங்கியுள்ளன. ஆழ்வார்களின் வரலாறுபற்றிய கர்ண பரம்பரை வரலாறுகளையும், அருளிச் செய்த செயல்களின் குறிப்புக்களையும் கொண்டு இச் சரித்திரங்கள் எழுதப்பட்டுள்ளன. viii. 1130/1919/III.

Q22w

923·142 ஆட்சியாளர் (பிரிட்டிஷ் இந்தியா)

**ஸ்ரீநிவாஸ வெங்கடாச்சாரி, எஸ்., கும்பகோணம்**

2399. i. இந்தியாவில் ஆங்கிலேய ஆதிபத்தியம்—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. ஸ்ரீநிவாஸ வெங்கடாச்சாரி கும்பகோணம்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 15; v. 17×11 செ. மீ.; vi. இலவசம்; vii. ஆங்கில அரசாட்சியால் இந்தியா அடைந்த நன்மையை விளக்குவது. அவர்களுடைய 150 ஆண்டுகால அரசாட்சியில் உண்டான நன்மைகள் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இந்திய அரசாங்க சீர்திருத்தங்கள், ஆங்கிலேய ஆதிபத்தியம், இந்தியாவில் பிரிட்டிஷ் துரைத்தனம் என்னும் தலைப்புக்களில் ஆசிரியர் தமது கருத்துக்களை விளக்குகின்றார். viii. 142/1916/I.

V561,1y7

923·145 ஆட்சியாளர் (இத்தாலி)

**வைத்தியநாத அய்யர், ஜி.**

2400. i. நெப்போலியன் சரித்திரம்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. ஜி. வைத்தியநாத அய்யர், திருச்சிராப்பள்ளி; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. 1916; iv. உ. ப. 23; v. 18×11 செ.மீ.; vi. 0—1—0; vii. நெப்போலியன் போன பார்ட் என்னும் இத்தாலியப் போர் வீரனின் வாழ்க்கையை இந்நூல் விவரிக்கிறது. இளமையிலேயே அவன் சூரனாக வளர்ந்து வந்ததும், பின்னர் பெருவீரனாய்ப் பல போர்கள் நிகழ்த்திச் சிறப்பு அடைந்ததும், இறுதியில் அவன் ஆங்கிலேயரால் ஸைண்ட் ஹெலினாத்தீவில் சிறைவைக்கப்பட்டதும் இந்நாலின்கண் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன. viii. 134/1916/III.

V52,1y7

923·154 ஆட்சியாளர் (இந்தியா)

2401. i. அசோகர் சரித்திரம்: திருத்திய பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ, சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1919; iv. உ.ப. 91; v. 18×13 செ.மீ.; vi. 0-4-0; vii. அசோக மன்னனின் வரலாற்றுச் சுருக்கம் அவரின் சமய அரசியல் சித்தாந்தங்கள் ஆகியவைபற்றியும், அறச் செயல்கள், சாசனங்கள், நற்போதங்கள் முதலியனபற்றியும் இந்நூலில் விரிவாக எழுதப்பட்டுள்ளன. viii. 1082/1919/III

V44,1y7

**கிருஷ்ணசாமிப் பாவலர், தெ.**

2402. i. ஐதர் அலி. முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடாசலம் அண்டு கம்பெனி, சென்னை; டயமண்ட் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1919; iv. உ.ப. 171; v. 19×13 செ.மீ.; vi. 0-12-0;

vii. இந்திய சுதந்திரப்போரின் சரித்திரப்புகழ் பெற்ற மாவீரர் களுள் மிகவும் முக்கியமாகக் கருதப்படுபவர்களில் ஒருவரான ஐதர் அலியின் வாழ்க்கை வரலாற்றினை இந்நூல் தெளிவாக விளக்குகின்றது. 16 அத்தியாயங்கள் கொண்டது. மா வீரனை ஐதர் அலியின் சரிதத்தைப் பல ஆங்கில நூல்களின் துணை கொண்டு தெளிவு பட எழுதியுள்ளார். இதில் அக்காலத் தில் நடந்த பற்பல நிகழ்ச்சிகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இது ஆசிரியரால் முதன் முதலாக எழுதப்பட்ட உரை நடை நூலாகும். viii 441/1919/IV.

V44,1y7

**கிருஷ்ணசாமி ஷர்மா, எஸ்.**

2403. i. சிவாஜி மகாராஜா: இரண்டாம் பதிப்பு; ii. சுதேசமித் திரன் ஆபீஸ், சென்னை; டாடா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை; iii. மே, 1920; iv. உ.ப. 236; v. 19×13 செ.மீ.; vi. 1-0-0; vii. இதில் மராட்டிய வீரனை சிவாஜியின் வரலாறு கூறப்பட் டுள்ளது. பல சரித்திர நூல்களை ஆராய்ந்து ஜாடுநாத சிர்க்கார், ஆப்டே இவர்களின் உதவியோடு எழுதப்பெற்றது. சிவாஜி யின் காலக் குறிப்புக்கள் நூலிறுதியில் தரப்பட்டிருக்கின்றன. viii. 500/1920/III.

V44,1y7

**சுப்ரமணிய சர்மா, என். ஆர்.**

2404. i. இராணி மங்கம்மாள் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. இ.எம். கோபால கிருஷ்ணக் கோன், மதுரை; ஸ்ரீகிருஷ்ணவிலாசம் பிரஸ் திருமங்கலம்; iii. 1916; iv. உ. ப. 16; v. 20×13 செ. மீ.; vi. 0-1-0; vii. ராணிமங்கம்மாளின் வாழ்க்கைச் சுருக்கம். இவள் மதுரை நாயக்கர் அரச பரம்பரையில் அரசு புரிந்த வள். மிகச் சிறந்த முறையில் அரசு புரிந்து, மக்களுக்குப் பற்பல நன்மைகள் புரிந்து பேரும் புகழும் பெற்ற செய்தி விளக்கப்பட்டுள்ளது. viii. 274/1916/I.

V44,1y7

**செல்வ கேசவராய முதலியார், தி.**

2405. i. அக்பர்: திருத்திய பதிப்பு; ii. கி.க.அ. சங்கம், சென்னப் பட்டணம்; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii, ஜூலை, 1918; iv. உ.ப. 140; v. 19×13 செ.மீ.; vi. 0-12-0; vii. மொகலாய வம்சத்தின் சிறந்த அரசரும் இந்தியத் துணைக்கண்டத்தில் அரசாட்சி செய்து புகழ் பெற்ற அரசர்களுள் முக்கியமானவரு மான அக்பருடைய வரலாறு, அரசாட்சி, அவர் செய்த சீர்திருத் தம், எழுதிய நூல்கள் ஆகிய பலவற்றை இதன்கண் காண லாம். மூன்று பாகங்களாக அமைத்து விரிவான முறையில் இச் சரித்திரம் எழுதப்பட்டுள்ளது. viii. 569/1918/III.

V44,1y7

**சேஷாத்திரி ஐயங்கார், கே. பி.**

2406. i. ராணு அமீர்சிங் : திருத்திய மூன்றும் பதிப்பு ; ii. ஸ்ரீரங்கா அண்டு கம்பெனி, சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. செப்டெம்பர், 1919; iv. உ. ப. 32; v. 19×13 செ. மீ.; vi. 0–3–0 ; vii. இராஜபுத்திர மாவீரரான ராணு அமீர் சிங்கின் வாழ்க்கை வரலாறு இதில் அடங்கியுள்ளது. இராணு அமீர் சிங், ஜார்ஜ் சக்கரவர்த்தி, மேரி சக்கரவர்த்தினி ஆகியோர் படங்கள் அமைந்துள்ளன. இவ்வாசிரியர் எழுதிய வேறு நூல்கள் ராஜாமணி, நளினாக்ஷி, ஸரோஜா, ஹரிஹரன் முதலியனவாம். viii. 155/1919/IV.

V44,1y7

**நாராயணசாமி ஐயர், ஆர். எஸ்.**

2407. i. குமண ராஜன் : முதற் பதிப்பு ; ii. கல்வி பப்ளிஷிங் ஹவுஸ், மதுரை ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. ஜனவரி, 1919 ; iv. உ. ப. + செ. மூ. ப. 14 ; v. 16×11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. கடையெழுவள்ளல்களில் ஒருவனும், மெய்யைப் பாதுகாத்தவனும், சொல் தவறாதவனுமான குமண மன்னனின் வாழ்க்கை வரலாறு இந்நூலில் உள்ளது. சரித நிகழ்ச்சிக்கு ஆதாரமான பாடல்களும் இடையிடையே காட்டப்பட்டுள்ளன. இது 'கல்வி மாலை' வரிசையில் நான்காவது வெளியீடாகும். viii. 587/1919/I.

V44,1y7

2408. i. சிவாஜி மகராஜ் : முதற் பதிப்பு ; ii. கல்வி பப்ளிஷிங் ஹவுஸ், மதுரை ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. ஜனவரி, 1919 ; iv. உ. ப. 18 ; v. 16×11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. மராட்டிய மன்னனான மாவீரன் சிவாஜியின் வரலாறு இப்புத்தகத்தில் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'கல்வி மாலை' வரிசையில் இது மூன்றாவது வெளியீடு. viii. 588/1919/I.

V44,1y7

**923.173 அமெரிக்க ஜனாதிபதிகள்**

**வெங்கடராம அய்யர், கே., கும்பகோணம்**

2409. i. எப்ரஹாம்லிங்கன் சரிதம்; ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், ஸ்ரீ கிருஷ்ண விலாசாபிரஸ், கும்பகோணம் ; iii. 1915 ; iv. உ.ப. 176 ; v. 19×13 செ.மீ.; vi 0–12–0 ; vii. எபிரஹாம் லிங்கன் வாழ்க்கை வரலாற்றை விளக்குவது. லிங்கன் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பிரதிநிதியாய் அமைந்து அடிமைத்தனத்தை ஒழித்துப் பெரும் புகழ் கொண்டவர். இவர் தம் வரலாறு பல அத்தியாயங்களில் மிக விரிவாக அமைக்கப்பட்டிருக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் இந்தியா —இரண்டின் நிலைமைகளை ...ப்பு நோக்கி எழுதப்பட்ட ஓர் அனுபந்தம் நூலிறுதியில

உள்ளது. மேற்குநாட்டாரைப் போலவே பொருளும் புகழும் பெற நம்மவரும் முயல்வதற்குத் தூண்டு கோலாக இந்த அனுபந்தம் அமைந்துள்ளது. viii. 351/1916/I.

V7W

## 923.254 தேசபக்தர்கள், தலைவர்கள் வரலாறு

2410. i. அன்னி பெசண்ட் அம்மையார் (அன்னி வசந்தா): முதற் பதிப்பு ; ii. வித்யா விலாச புஸ்தகசாலை, சென்னை ; சச்சிதானந்தம் பிரஸ், சென்னை ; iii. 1917 ; iv. உ. ப. 43+50 ; v. 11×7 செ.மீ.; vi. இலவசம்; vii. இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கு பெற்றவரான அன்னிபெசண்ட் அம்மையாரின் வாழ்க்கை வரலாறு இதில் கூறப்பட்டுள்ளது. சென்னை சிந்தாதிரிப்பேட்டை வித்யா விலாச புத்தகசாலையார் வெளியிட்ட நூல்களின் விரிவான பட்டியலும் இதனுடன் இணைக்கப்பெற்றிருக்கிறது. viii. 470/1918/I.

Y44W

2411. இந்து தேசாபிமானிகள் சரித்திரம்—முதற் பாகம்: இரண்டாம் பதிப்பு ; ii. கணேஷ் அண்டு கோ. ; சென்னை ; கேம்பிரிட்ஜ் பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ. ப. 203 ; v. 19 × 13 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. தாய் நாட்டிற்குத் தொண்டு புரிந்து புகழ் கொண்ட பன்னிருவர் சரித்திரங்கள் இதில் உள ; அவராவர் ; 1. தாதாபாய் நௌரோஜி, 2. ஆனந்தமோகன்போஸ் 3. சுரேந்திரநாத் பானர்ஜி, 4. ஸர்பிரோஜிஷா மிர்வான் ஜிமேடா 5. கனம் மிஸ்டர் கோபால கிருஷ்ண கோகலே, 6. பரோடா மகாராஜா கயக்வார், 7 கனம் டாக்டர் ராஷ்விஹாரி கோஷ், ஸி.ஐ.இ. 8. லாலாஸஜபதிராய், 9. விவேகானந்த சுவாமி, 10. பால கங்காதர திலகர், 11. பாபு பெயின் சந்திரபால், 12. ஜி. சுப்பிரமணிய ஐயர். இப்பெரியார்களின் உருவப்படங்களும் தரப்பட்டிருக்கின்றன. நூல் முதலில் பண்டிதர் நாகை வேதாசலம் பிள்ளை அவர்கள் பாடிய (மறைமலையடிகள்) 'சுதேச முயற்சி வாழ்த்து' எனும் பொருளில் அமைந்த ஏழு பாடல்களும் உள. viii. 12/1916/IV.

V44,1y7

### கிருஷ்ண ஸ்வாமி சர்மா

2412. i. லோகமான்ய பாலகங்காதர திலகர் முதற் பதிப்பு ; ii. கிருஷ்ணசாமி சர்மா, சென்னை; கே. எம். சாமி அண்டு கம்பெனி, சென்னை ; iii. ஜூலை, 1919 ; iv. உ. ப.7 ; v. 23×15 செ. மீ; vi. இலவசம்; vii. இந்தியத் துணைக்கண்டத்தின் சுதந்திர தியாகிகளில் ஒருவரான பாலகங்காதர திலகரின் வாழ்க்கை வரலாற்றினை இப்புத்தகம் நன்கு விளக்குகின்றது. viii. 560/1919/IV.

V44,1y7

2413. i. கோபாலகிருஷ்ணகோகலேயின் ஜீவிய சரித்திரம்; ii. வைத தீஸ்வர அய்யர்; சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. உ. ப. 144; v. 19×12 செ.மீ.; vi. 0–8–0; vii. கோபாலகிருஷ்ணகோகலேயின் ஜீவிய சரித்திரம் சுருக்கமாய் எழுதப்பட்டுள்ளது. இவரது சரித்திரம் தேசாபிமானத்தை ஊட்ட வல்லது; 42, அத்தியாயங்கள் கொண்டது. கோகலேயைப்பற்றி சில பெரியார்கள் எழுதிய கருத்துரைகள் 40-வது அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. கோகலேயின் உருவப்படமும் முதலில் உளது. இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. "கவர்ன்மெண்ட் பென்ஷனரும் சோழநாட்டானுமாகிய ஒரு தேசாபிமானியால் சுருக்கமாய் எழுதப்பட்டது" என்னும் குறிப்பு முதலில் உளது. ஜி. சுப்பிரமணிய ஐயர் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 17/1916/I.

V44,1y7

கோவிந்தசாமி ராஜா, வே., உறையூர் (மொ. து.)

2414. i. கோபால கிருஷ்ண கோகலே; ii. வே. அரங்கசாமி ராஜு, உறையூர்; இண்டியா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 109; v. 18×13 செ. மீ.; vi. 0-8-0; vii. கோபாலகிருஷ்ண கோகலேயின் சரித்திரத்தை இந்நூல் விளக்குகின்றது. இது ஆங்கில மொழியினின்றும் மொழி பெயர்க்கப்பட்டது. ஆங்கிலத்தில் எழுதியவர் பூனா பெர்குஸன் கலாசாலைத் தலைவர் ஆர். பி. பராஞ்சபே என்பவராவர். கோகலேயின் சரித்திரங்கள் ஒன்றிரண்டு முன்பே தமிழில் வெளிவந்திருப்பினும் உள்ளதை உள்ளபடி சுருங்கக் கூறுதலில் இந்நூல் அவற்றினும் சிறந்ததாகும் என்று முகவுரையில் மொழிபெயர்ப்பாசிரியர் கூறுகிறார். கோகலேயின் உருவப்படமும் வேறு சில படங்களும் இதில் உள்ளன. viii. 524/1916/II.

V44,1y7

சாமிநாத சர்மா, வே.

2415. i. லோகமான்ய திலகர்: முதற் பதிப்பு; ii. தேசபக்தன் லிமிடெட், சென்னை; பிரிட்டிஷ் இந்தியா பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. உ. ப. 32; v. 18×13 செ. மீ.; vi. 0-3-0; vii. இந்திய சுதந்திரத்திற்காகப் பாடுபட்ட முக்கியமான தேசபக்தர்களில் ஒருவரான லோகமான்ய பாலகங்காதர திலகரது வாழ்க்கை வரலாற்றினைப்பற்றி இப்புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளது. திலகர் ஆற்றிய பொதுமக்கள் தொண்டும், அவர் தம் பண்புகளும் இதில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளன. viii. 1100/1918/III.

V44,1y7

